# ஆழ்வார் தாலாட்டு



அ. பிரஸில்லா எம்.ஏ., எம்.ஃபில்.,

# ஆழ்வார் தாலாட்டு

அ. பிரஸில்லா எம். ஏ, எம்.ஃபில்.

சேகர் பதிப்பகம்
66, பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர். நகர், சென்னை – 600 078,
(044 – 65383000)

முதற்பதிப்பு : 2007

பக்கம் : 224

விலை : ரூ.100.00

கணினி : கனகதுர்கா பிரிண்டர்ஸ்,
14, பத்மாவதி அவென்யூ,
திருமலை நகர் விரிவு,
பெருங்குடி, சென்னை – 600 096.

அச்சகம் : ஜூபிடர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 24.

# உள்ளடக்கம்

# காணிக்கை

ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும்
என் அன்பு அன்னைக்கு

**அ. பிரஸில்லா**

# அணிந்துரை

முனைவர். கி. நாச்சிமுத்து
பேராசிரியர், தமிழ்த்துறை
கேரளப்பல்கலைக்கழகம்,
காரிய வட்டம், திருவனந்தபுரம்

1. தொல் இலக்கியமாகிய சங்க இலக்கிய இலக்கண ஆய்வு
2. வரலாற்று முறை இலக்கணம் சொல்லகராதி - ஐந்திலக்கண ஆய்வு
3. இலக்கிய வளர்ச்சி, திறனாய்வு வளர்ச்சி ஆய்வு
4. தமிழ் மலையாளம் மொழி பெயர்ப்பு ஒப்பாய்வுகள்
5. மூலபாடத் திறனாய்வுச் சுவடி பதிப்பித்தல்
6. கல்வெட்டு ஊர்ப் பெயராய்வு, பண்பாட்டாய்வு
7. நாட்டுப்புறவியல் பழங்குடி மக்கள் ஆய்வியல்

போன்ற பல துறைகளில் தன் ஆய்வுகளை முனைப்பாக நிகழ்த்தி வருகிறது.

கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நிலையத்திலிருந்த நான்காயிரம் அளவிலான சுவடிகளையும் ஆய்வுக்கு உட்படுத்த மூலபாடத்திறனாய்வு முறையில், சுவடி பதிப்பித்தல் முதலிய துறைகளிலும் மு. இராகவையங்கார் காலத்திலிருந்தே தமிழ்த்துறை கவனம் செலுத்தி வருகிறது. அவ்வழியில் வரும் முயற்சிதான் திருமதி. பிரஸில்லா அவர்களின் **ஆழ்வார் தாலாட்டு** என்னும் நூல் பதிப்பு முயற்சி.

இச்சுவடியிலுள்ள நூல் நம்மாழ்வார் திருத்தாலாட்டு, சுவாமி நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு என்ற பெயரிலும் அச்சிடப்பட்டுள்ளது. மேலும் இது திருக்குருகூர்க் கோயிலில் சடங்கு முறையிலும் பாடப்படுகிறது. இவற்றிலே பாடவேறுபாடுகளும் வேறு மாற்றங்களும் காணப்படுகின்றன. ஏடுகளையும் அச்சுப்பிரதிகளையும் ஒப்பிட்டுப் பார்த்ததோடு அமையாமல் நேரில் இது பாடப்படுவதையும் சென்று கண்டு ஒலிப்பதிவு செய்து ஒத்து நோக்கி இப்பதிப்பைத் தயார் செய்துள்ளார் திருமதி. பிரஸில்லா.

இந்நூல் (கி.பி. 16-17 நூற்றாண்டு) சமய வரலாற்றிலும் இலக்கிய வரலாற்றிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். வைணவ மரபில் நம்மாழ்வார் பெற்ற சிறப்பை இதன் மூலம் அறியலாம். அவர் வரலாறு கூறும் தாலாட்டு என்ற முறையில் வரலாற்றுச் சிறப்பும் உடையது இது. அத்துடன் தாலாட்டு இலக்கியப்பாங்கைப் பெற்ற போதிலும் இது போன்ற நூல்களில் அதன் பரப்பும் பண்பும் விரிவு பெறுவதைப் பார்க்கலாம். இவ்வாறு பல நிலைகளில் முக்கியத்துவம் வாய்ந்த இந்நூலை அச்சிடுவதில் பல சிரமங்கள் உள்ளன. அவற்றையெல்லாம் உணர்ந்து முயன்று கள ஆய்வின் மூலமும் பிறவாறும் மூலபாடத்தைத் தயார் செய்து பதிப்பித்து அந்நூலுக்குச் சொல்லடைவையும் அந்நூல் பற்றிய ஐந்திலக்கண ஆய்வையும் ஆயத்தம் செய்து நூல் வடிவில் வெளியிடும் ஆசிரியர் பிரஸில்லா அவர்களின் முயற்சியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இதில் நூலாசிரியர் பற்றிய ஆராய்ச்சியை முழுமை செய்ய வேண்டும். இதன் முழு வாய்மொழி வடிவையும் பதிவு செய்து வெளியிட முயலவேண்டும். இவற்றையெல்லாம் செய்து முடிக்கும்போது ஆராய்ச்சிக்குப் பல புதிய செய்திகள் கிடைக்கும்.

திருமதி. பிரஸில்லா முனைப்பான ஆராய்ச்சியாளர். எடுத்துக்கொண்ட பொருளில் மனம் நிறைந்த ஈடுபாடும் திருவினையாக்கும் முயற்சியும் உடையவர். அதனால் அவரால் ஆராய்ச்சித்துறையில் பல சாதனைகளைச் செய்ய முடியும் என்பது என் கணிப்பு. அதற்கு முன்னோடியாக இந்நூற்பதிப்பு அமைகிறது. அவர் இது போல மேலும் மேலும் பல ஆய்வுகள் செய்து நூல்களை வெளியிட்டுத் தம் அறிவையும் ஆற்றலையும் வெளிப்படுத்த வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

**கி. நாச்சிமுத்து**

# வாழ்த்துரை

முனைவர். பி. டாக்டர் நசீம்தீன்
பேராசிரியர், தமிழ்த்துறை,
கேரளப்பல்கலைக்கழகம்,
காரியவட்டம். திருவனந்தபுரம்

தமிழ்ச்சமய மரபுகளில் சைவமும் வைணவமும் தொன்மையான பதிவுகளைக் கொண்டமைந்துள்ளன. சங்க இலக்கியங்களில் காணலாகும் தொன்மத் தொடர்களும் சமய இலக்கியத் தொன்ம வளர்ச்சி நிலைகளும் மக்கள் மத்தியில் வைணவச் சார்பு மிகுந்திருந்ததனை எடுத்துக்காட்டுகின்றன. நாலாயிரத் திவ்யப்பிரபந்தமாகத் தொகுக்கப்பட்ட ஆழ்வார் பாடல்களில் அன்றைய மக்கள் மரபுகள் உட்கொள்ளப் பட்டிருக்கின்றன.

ஆண்டாள் பாடல்களில் பெண்ணிய உணர்வுகளும், பெரியாழ்வார் பாடல்களில் தாய்மை உணர்வுகளும் இன்று பல தலங்களில் விமரிசனத்திற்கு உள்ளாகின்றன.

இப்பாடல்களில் காணலாகும் இறைபுணர்வு பிற்காலத்திலும் தொடர்ந்து நாட்டுப்புற மரபுகளையும் உள்வாங்கிக் கொண்டு பரிணமிக்கின்ற முறைமையினை இலக்கிய வரலாற்றுப் பயணத்தில் காண்கிறோம்.

பதினாறு ஆண்டுகள் தவமிருந்து முப்பத்திரண்டு ஆண்டுகள் ஞானநிலையில் வாழ்ந்து பாசுரங்களை இயற்றிய சிறப்பினால் **ஆழ்வார்** என்ற பெயர் **நம்மாழ்வாரையே சாரும்** என்பர். சடகோபர் மீது பாடப்பட்ட **தாலாட்டு** இலக்கியப் பொருளிலான **ஆழ்வார் தாலாட்டு** எனும் இலக்கியச் சுவடியை எங்கள் துறை மாணவி, திருமதி அ. பிரஸில்லா படியெடுத்துக் கொண்டு வந்தபோது இதன் முக்கியத்துவம் கருதிப் பதிப்பிக்கும் நோக்கோடு ஆராய்ச்சியை மேற்கொள்ளுமாறு எங்கள் பேராசிரியர் முனைவர். கி. நாச்சிமுத்து

அவர்கள் பணித்தார்கள்.

திருமதி. பிரஸில்லாவும் அவரது கணவரும் ஆழ்வார் திருநகரி முதலான திருத்தலங்களுக்குச் சென்று அரிய பல செய்திகளையும் புகைப்படங்களையும் திரட்டி வந்தனர். குடும்பச் சூழல்களின் தாக்கங்களையும் கடந்து இவர் மேற்கொண்ட ஆய்வு முனைப்பு கண்டு அதிசயித்தோம். அவ்வுழைப்பிற்கான பலன் இன்று இந்நூலாகின்றது. ஆராய்ச்சியின்போது திருமதி பிரஸில்லா தொகுத்த அனைத்துச் செய்திகளும் இந்நூலில் இடம்பெற இயலவில்லை. அவை தனித்தவொரு நூல் அளவுடையவை.

இதுபோன்று மேலும் பல ஆய்வு நூல்களைத் திருமதி. பிரஸில்லா உருவாக்குவார் என்ற நம்பிகையிருக்கிறது. இவரது முயற்சிகளுக்குப் பாராட்டுகளும், வாழ்த்துகளும்.

பி. டாக்டர் நசீம்தீன்

# அன்புரை

முனைவர் கோ.வெ. கீதா
துணை முதல்வர், தலைவர் தமிழ்த்துறை,
எம்.ஓ.பி. வைணவ மகளிர் கல்லூரி,
நுங்கம்பாக்கம், சென்னை – 32.

கேரளப் பல்கலைக்கழகத்தில் எம்.ஃபில் பட்டப்படிப்பின் பாடப் பகுதியாகத் திருமதி பிரசில்லா, ஆழ்வார் தாலாட்டு என்ற தலைப்பில் ஆய்வு செய்துள்ளார்.

சுவடியிலுள்ள பாடல்களை நுட்பமாக ஆய்ந்து, வேறு பிரதிகளுடன் ஒப்பிட்டுப் பாடவேறுபாடுகளை எடுத்துக் காட்டியுள்ளார். சுவடி ஆய்வோடு நின்று விடாது இப்பாடல்கள் பாடப்படும் கோயிலுக்குச் சென்று கள ஆய்வும் செவ்வனே செய்துள்ளார். நிழற்படங்களும் எடுத்துள்ளார்.

எம்.ஃபில் தேர்வாளராக இவ்வாய்வேட்டைப் படித்தபோது, நூலாக வெளிவரவேண்டிய ஆய்வு என்று திருமதி. பிரசில்லாவிடம் கூறினேன்.

அது இன்று நிறைவேறுவதில் மிகுந்த மகிழ்ச்சி யடைகிறேன். பேராசிரியர், முனைவர். கி. நாச்சிமுத்து அவர்கள் குறிப்பிட்டிருப்பது போல நூலாசிரியர் குறித்தும், வாய்மொழி வடிவையும் முழுமையாக ஆய்வு செய்ய வேண்டுமென்றும் அச்செய்திகளையும் இணைத்து அடுத்த பதிப்பு வெளிவர வேண்டுமென்றும் விரும்பி, வாழ்த்துகிறேன்.

தமிழ் இளங்கலை, முதுகலை இரு பட்ட வகுப்புகளிலும் என் மாணவியாகப் பயின்ற திருமதி. பிரசில்லா, இன்று ஆய்வு நூலாசிரியராக வளர்ச்சியடைந்திருப்பதைக் காணும்போது பெருமிதமடைகிறேன்.

மாணவியாக இருந்தபோதே அவருடைய தமிழார்வம், கடின உழைப்பு இரண்டையும் கண்டு வியந்தி ருக்கிறேன். எதையும்

செம்மையாகவும் முழுமையாகவும் செய்ய வேண்டுமென்ற எண்ணமுடையவர். சிறு இடைவெளிக்குப் பின் கேரளப் பல்கலைக்கழகத்தில் எம்.ஃபில் பட்டப் படிப்புக்குச் சேர்ந்தார். சிறந்த ஆய்வாளரும், நல்லாசிரியருமான முனைவர் கி. நாச்சிமுத்து அவர்கள் கீழ்கற்கும் பேறு பெற்றார்.

கேரளத் தமிழ்த்துறை மாணவர்கள் நல்லாய்வாளராகவும் நூலாசிரியர் களாகவும் உருவாக ஊக்கமளித்து வருவது பாராட்டிற்குரியது.

திருமதி பிரசில்லா தொடர்ந்து நல்ல ஆய்வு நூல்களை வெளியிட வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

அன்புடன்
**கீதா, கோ. வே.**

# என்னுரை

மக்கள் மனதில் பதிந்து கிடக்கும் கருத்துச் சிந்தனைகளின் சிறகடிப்பே நாட்டுப்புற இலக்கியங்கள். இலக்கியங்கள் யாவும் ஏடுகளாய் உருப்பெறும் முன்னே ஏற்றமிகு கவிதைகளை வாய்மொழியாகவே பறைசாற்றிக் கொண்டிருந்தது மனிதகுலம். அவர்தம் எண்ண அலைகளில் வண்ணச் சரமாய் உருவெடுத்த பாடல்களில் ஒன்று **தாலாட்டு** எனலாம். இத்தாலாட்டு இலக்கியம் தாய்மை உணர்வின் கருவூலமாய் வெளிப்படுகின்றது.

காலவெள்ளத்தில் காணாமல் போன ஓலைச் சுவடிகளைக் கண்டெடுத்து அவற்றை அச்சில் ஏற்றித் தமிழுக்கு அணி செய்ய வேண்டும் என்ற முயற்சியில் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை ஈடுபட்டு வருகின்றது. அவ்வகையில் எனது எம்.ஃபில் பட்ட ஆய்விற்காகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் கி. நாச்சிமுத்து ஐயா அவர்களின் அறிவுரையில், முனைவர் திரு. டாக்டர். நசீம்தீன் ஐயா அவர்களின் நெறிப்படுத்தலின் கீழ்த் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்ட சுவடியே ***ஆழ்வார் தாலாட்டு*** என்னும் வைணவ சிற்றிலக்கியமாகும்.

ஆழ்வார் தாலாட்டுப் பதிப்பும், ஐந்திலக்கண ஆய்வும், சொல்லடைவும், என்பதே ஆய்வுத் தலைப்பாகும். இங்கு நூலாக்கத்தில் எழுத்து, சொல், யாப்பு ஆகிய பகுதிகள் தவிர்க்கப்பட்டுள்ளன. ஆசிரியனின் படைப்பு வழியாக அவர் காட்ட விழையும் வைணவச் சிறப்பு, படைப்பாக்க உத்தி, வரலாற்றுச் செய்திகள், புராணச் செய்திகள், சமுதாயப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியன பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

என்னைப் பற்றி நானே அறிந்து கொள்ளாத நிலையில் என்னை வெளிக்கொணரும் பொருட்டுக், காணும்போதெல்லாம் சுவடிப் பதிப்பை நூலாக்கம் செய்வது பற்றியும், அதற்காகப் பதிப்பகத்தாரைத் தொடர்பு கொண்டும் எனக்குத் தூண்டுதலாய் இருந்தவர்கள் முனைவர் கி. நாச்சிமுத்து ஐயா அவர்களும், முனைவர் டாக்டர் நசீம்தீன் ஐயா அவர்களும் ஆவர்.

என்னுடைய முன்னேற்றம் பற்றிய இருவருடைய எண்ணங்களுமே ஒருவருக்கொருவர் குறைவுபடாமல், எனக்குத் தூண்டுகோலாய் இருந்தனர். அணிந்துரை வழங்கிய முனைவர் கி. நாச்சிமுத்து ஐயா அவர்களுக்கும், வாழ்த்துரை வழங்கிய முனைவர் டாக்டர் நசீம்தீன் ஐயா அவர்களுக்கும் என்மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். கடந்த பத்து வருட காலமாய் என்னிடம் தாயாய் அன்பு காட்டி நேரில் காணும்போதும் தொலைபேசியில் தொடர்பு கொள்ளும்போதும் என் நலனில் தனிப்பட்ட அக்கறையைக் காட்டி அன்புரை வழங்கித் தமிழால் நான் வளர என்னை ஊக்கப்படுத்திக் கொண்டிருக்கும் முனைவர் கோ. வெ. கீதா அவர்களுக்கும் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆழ்வார் தாலாட்டைப் பற்றிய செய்திகளைத் திரட்டக் களப்பணி மேற்கொண்டபோது, தகவல்களைத் தந்து பல அரிய நூல்களையும் தந்து உதவிகள் செய்த திரு. அப்பு சடகோபன் சுவாமி, திரு. முத்தப்பன் ஆசிரியர், திரு. பாலாஜி சுவாமி, தலைமையாசிரியர், திரு. பெரியன் அழகிய நம்பி இவர்களுடைய உதவி என்றென்றும் மறக்க முடியாதது. இவர்கள் யாவரையும் சந்தித்துச் செய்திகளைத் திரட்ட உதவியாய் இருந்த திரு. பிச்சையா அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலாக்கத்தில் அச்சுப்பணியை மேற்கொண்டு செவ்வனே முடித்துத் தந்த சென்னை - கனகதுர்கா பிரிண்டர்ஸ் அவர்களுக்கும், தன்னலமில்லாப் பொதுநலவாதியாய் இயங்கும் சேகர் பதிப்பகத்தார் திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் ஐயா அவர்களுக்கும், நூலாக்கத்தில் எனக்கு உதவிய பி. எஸ். ராஜேஷ், தம்பி குழந்தை ஏசு அவர்களுக்கும், என் தம்பிக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வுப் பணியில் எனக்கு உறுதுணையாய் இருந்து என்னை ஆற்றுப்படுத்திய அன்புக் கணவர் ஈஷ்வர்க்கும், அன்புக் குழந்தை ரோஷினி வினோஷாவிற்கும், பெற்றோர், தம்பி தங்கைகள் அனைவருக்கும் அன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவை அனைத்திற்கும் காரணமாய் என்னை வழி நடத்தும் எல்லாம் வல்ல இறைவன் குழந்தை ஏசுவுக்கு என் நன்றியைச் சமர்ப்பிக்கிறேன்.

என்றும் அன்புடன்

*அ. பிரஸில்லா*

## சுருக்கக் குறியீடுகள்

| | | |
|---|---|---|
| ஆ | - | ஆசிரியர் |
| உ. ஆ | - | உரையாசிரியர் |
| உப. மாலை | - | உபதேச ரத்னமாலை |
| கம். சுந்தர | - | கம்பராமாயணம் சுந்தரகாண்டம் |
| கலி. பரணி | - | கலிங்கத்து பரணி |
| சட. அந் | - | சடகோபரந்தாதி |
| சட. சந்மாலை | - | சடகோபர் சந்திர கலா மாலை |
| சட. திவ்ய | - | சடகோபர் திவ்ய சரித்திரம் |
| சிலப். மங் | - | சிலப்பதிகாரம், மங்கல வாழ்த்துப் படலம் |
| சீவக. சிந் | - | சீவக சிந்தாமணி |
| தண்டி | - | தண்டியலங்காரம் |
| குறள் | - | திருக்குறள் |
| திரு. பவ. குறம் | - | திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம் |
| திருவா | - | திருவாசகம் |
| தொல். எழு. மரபு | - | தொல்காப்பியம், எழுத்ததிகாரம், மொழிமரபு |
| தொல். சொல். எச் | - | தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல் |
| தொல். பொரு. உவம | - | தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல் |
| தொல். பொரு. செய் | - | தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல் |
| தொல். பொரு. புறம் | - | தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல் |
| தொல். பொரு. அகம் | - | தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் |
| நம். திரு | - | நம்மாழ்வார் திருநாமங்கள் |
| நம். பிள் | - | நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ் |
| நன். சூ | - | நன்னூல் சூத்திரம் |
| ப. ஆ | - | பதிப்பாசிரியர் |
| புறம் | - | புறநானூறு |
| பெரி. திரு | - | பெரியாழ்வார் திருமொழி |
| பெரு. திரு | - | பெருமாள் திருமொழி |
| மேலது | - | மேல் சுட்டப்பட்டது |
| ஸ்ரீ ஆதி | - | ஸ்ரீ அருள்மிகு ஆதிநாதர் திருக்கோயில் |
| 7-ம் வே. உ | - | ஏழாம் வேற்றுமை உருபு |



புளிய மரம்



அப்பன் கோயில்

## 1. நூற்பதிப்பு வரலாறு

ஆழ்வார் தாலாட்டு என்னும் இச்சுவடி, ஆய்விற்காகத் திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் காப்பகத்தில் இருந்து பெறப்பட்டது. 8225 என்று நூலகத்தில் பதிவு செய்யப்பட்ட எண் கொண்ட இச்சுவடியைத், தமிழ் வித்துவான் டி.என். கிருஷ்ணஐயங்கார் என்பவர் நேரடியாக அக்காப்பகத்தில் கொடுத்ததாகக் குறிப்புகள் உள்ளன. ஊர் முகவரி ஒன்றும் இல்லை.

செய்திகள் திரட்டிய அளவில் இச்சுவடி இதற்கு முன் பதிப்பிக்கப்படவில்லை என்ற எண்ணத்துடன் ஆய்வுப் பாடமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. 4. 3. 2004 அன்று மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் சு.வேங்கடராமன் அவர்களைக் கேரளப் பல்கலைக்கழகம், தமிழ்த் துறையில் சந்திக்க நேர்ந்தபொழுது 'ஆழ்வார் தாலாட்டு' ஏற்கனவே அச்சுப் பிரதியில் வந்துள்ளதாகவும் திருநெல்வேலி-திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் உள்ள ஆழ்வார் திருநகரி என்னும் ஊரில் உள்ள வைணவத் தலத்தில் இத்தாலாட்டுப் பாடப்படுவதாகவும் சில செய்திகளைக் கூறினார்.

இச்செய்திகளுக்குப் பின் முயன்று தேடியதில் 'நம்மாழ்வார் திருத்தாலாட்டு' என்னும் பெயரில் 1951-ல் வெளியான தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் அச்சுப்பிரதி ஒன்று கிடைத்தது.

ஆழ்வார் திருநகரி சென்று தாலாட்டுப் பாடல் பற்றிய செய்திகளைத் திரட்ட வேண்டும் என்னும் நோக்கில் முதல்முறை (18.4.2004) சென்றபோது இதற்கு ஆதாரமானவர்களைச் சந்திக்க இயலாமல் போனதால், இரண்டாம் முறையாகச் (5.5.2004) செல்ல நேரிட்டது. அப்போது தாலாட்டுப் பற்றிய விவரங்களும் சுவாமி நம்மாழ்வார்

நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு என்ற பெயரில் ஆழ்வார் தாலாட்டு அச்சுப்பிரதி ஒன்றும் கிடைத்தன. இதில் சுவாமி "நம்மாழ்வார் தாலாட்டு" என்ற, முதற்பகுதி 350 கண்ணிகளை, அதனைத் தொடர்ந்து நூற்றெட்டு திவ்ய தேசங்களைப் பாடுவதாக "நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு" என்ற பெயரிலும் இது வழங்கப்படுகிறது. ஆனால் நூல் தலைப்பு மேற்கூறப்பட்டதேயாகும்.

ஆழ்வார் தாலாட்டுப் பாடல் வடிவத்தை அறிய வேண்டும் என்னும் முனைப்புடன் மூன்றாம் முறையும் (3.7.2004) ஆழ்வார் திருநகரி சென்று இன்று அத்தாலாட்டுப் பாடுபவர்களாலேயே தாலாட்டைப் பாடச் செய்து பதிவு செய்யப்பட்டது. எனினும் பாடுபவர்கள் முதுமை காரணமாக அப்பாடல் வரிகள் முழுவதையும் ( 350 கண்ணிகள் ) ஒரே நேரத்தில் பாட முடியவில்லை. இதனால் காப்புச் செய்யுள் தொடங்கி 40 கண்ணிகள் வரையும் 283 கண்ணிகள் முதல் 300 வரையும், 335 முதல் 350 கண்ணிகளையும் பாடச் செய்து பதிவு செய்யப்பட்டுள்ளது. முழுவடிவமும் அறிந்து கொள்ள முடியாமல் போனது வருந்தத் தக்கதே.

மார்கழி திருவிழாவில் ஆழ்வார் பகல்பத்து மண்டபத்திற்கு எழுந்தருளும்போது பத்து நாட்களும் 40 கண்ணிகள் வீதம் பாடுவதாகவும், அதை மொத்தமாக ஒரே தடவையில் சோர்வின்றிப் பாட முடியாது என்றும் காரணம் கூறுகின்றனர். (தாலாட்டுப் பாடுபவர்கள் தேவர் பிரான் (80), நம்பி (71)

## 1:1 சுவடியின் அமைப்பு

சுவடியின் தன்மை முழுவதும் நன்றாக இல்லை. மொத்தம் 33 ஏடுகள் உள்ளன. காப்புச் செய்யுளும் பாடல் தொடக்கமும் உள்ள முதல் ஏடும், இரண்டாம் ஏடும் சிதைந்து இரண்டாக ஒடிந்த நிலையில் உள்ளன. இறுதி 4 ஏடுகள் ஓரம் சிறிது ஒடிந்து சிதைந்துள்ளன. இடைப்பட்ட சுவடிகள் நன்றாக உள்ளன. என்றாலும் இடையிடையே இராம பாணங்களால் (சிறிய வால் பூச்சி) சிதைக்கப்பட்டு, சிதைந்த இடத்திலுள்ள எழுத்துக்களை அறிய முடியாத வண்ணம் உள்ளன. எழுத்துக்கள், 2 செமீ நீளமும், 2 செமீட்டரும் 8 மில்லி மீட்டரும் கொண்ட அகலமுடையதாக உள்ளன.

சுவடியின் இரண்டு பக்கமும் எழுதப்பட்டுள்ளது. ஒரு பக்கத்திற்கு 6 வரிகள் வீதம் எழுதப்பட்டுள்ளது. முதல் இரண்டு ஏடுகளில் 5 வரிகளே எழுதப்பட்டுள்ளன. காப்புச் செய்யுள் உள்ள ஏட்டின் இடது பக்கத்தில் ஹரி ஓம் நன்றாக ஆழ்வார் தாலாட்டு காப்பூ என்று எழுதப்பட்டுள்ளது. காப்புச் செய்யுள் முடிந்ததும் சடகோபர் திருவடிகளே சரணம் என்று மத்தியில் எழுதப்பட்டுள்ளது. அடுத்த பாடல் தொடங்கும் முதல் ஏட்டின் இடது பக்கத்திலும் ஹரி ஓம் என்று மட்டும் எழுதப்பட்டுள்ளது. இரண்டு பக்கமும் சட்டம் போடப் பட்டுள்ளது.

### எண்கள்

இச்சுவடிக்கென்று தனி எண்கள் எதுவும் கொடுக்கப் படவில்லை. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் தமிழ் எண்களே தொடர்ந்து கொடுக்கப்பட்டுள்ளன. எண்களை எழுதுவதற்கு இரண்டு முறைகள் உள்ளன. அதில் சுவடியில் பயன் படுத்தப்பட்டுள்ள முறை உதாரணமாக 215 என்பதை "உளயரு" என்ற தமிழ் எண் முறையில் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஏட்டிலும் ஒன்று இரண்டு என இடப்பக்கத்தில் தமிழ் எண்கள் எழுதப்பட்டுள்ளன.

## 1:2 எழுதப்பட்டுள்ள முறை

எழுத்துக்கள் ஒருவிதம் புரியும்படி அமைந்திருந்தாலும் சில எழுத்துக்களை வேறு பிரித்து அறிந்து கொள்ளக் கடினமாக இருக்கிறது. 'ற' என்ற எழுத்து இரண்டு வடிவத்தில் எழுதப்பட்டுள்ளது.

சறகரை - சற்கரை (57)

செ22 - செற்று (91)

1) குறில் நெடில் வேறுபாடுகளை உணர்த்த ஒற்றைக் கொம்பு (ெ) இரட்டைக் கொம்பு (ே) எனத் தனித்தனி வேறுபாடுகள் இல்லை. இரண்டிற்கும் 'ெ' என்ற குறில் வடிவமே உள்ளது.

எ.காட்டு நாடானொ - நாடானோ (92)

2) ழகர, ளகர வேறுபாடுகள் சில இடங்களில் சரியாக எழுதப்பட்டும் சில இடங்களில் பிழையாக எழுதப்பட்டும்

உள்ளன. சுவடித் தலைப்பே "ஆள்வார் தாலாட்டு" என்று பிழையாக உள்ளது.

எ.காட்டு

விழியார்(95) - சரியானது

வாள்த்தெடுப்ப (49) - பிழையானது

நல்வளமும் (15) - சரியானது

பொருழும் (5) - பிழையானது

இதே அமைப்பில் ற,ர,ன,ண போன்றவை உள்ளன.

3) சொல்லோ, எழுத்தோ விடப்பட்டிருப்பின் வரிக்கு மேலேயும் எழுதப்பட்டுள்ளது. வரிக்குக் கீழேயும் எழுதப் பட்டுள்ளது.

எ.காட்டு

மாசுராககும(மெ)வளஙகி - மேலே எழுதப்பட்டுள்ளது. (ஆசுரார்க்கு மேவழங்கி)

இடைவிடாதிததெ(னீ)ரெஙகழுகசு- கீழே எழுதப்பட்டுள்ளது. (இடைவிடா தாராதித் தேத்தினீ ரெங்களுக்கு)

4) ஓர் எழுத்தை அடித்துவிட்டு வேறு எழுத்தை எழுதுவதாக இருந்தால் அவை எழுத்தாணியாலே அடிக்கப்பட்டுள்ளது.

எ. காட்டு

விடுபூ (71)

5) ' ர் ' என்ற குறியீடு ர விற்கும், காலுக்கும் (ா), ர் என்ற எழுத்திற்கும் பொதுவானதாக உள்ளது.

6) மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியில்லை.

## பிழைகள் ஏற்படக் காரணம்

ஆழ்வார் தாலாட்டுச் சுவடியைப் பார்க்கும்போது இது மூலச் சுவடி அல்ல, படி எடுக்கப்பட்டதே என்பது புலனாகிறது. குறிப்பிட்ட காலகட்டத்தில் ஒருவரால் எழுதப்பட்ட சுவடி பலராலும் படி எடுக்கப்படும்பொழுது பல காரணங்களால் எழுத்துப் பிழைகள் ஏற்பட்டுவிடுகின்றன.

இச்சுவடியில் 38, 39 கண்ணிகளில் வரிகள் மாற்றி எழுதப்பட்டு எதுகை, மோனை நயங்கள் சிதைந்துள்ளன.

38) ஆதிநம்பி கண்ணுகணித்தாயெழுந்தருளி
கண்ணீர் துடைத்து கரத்தினால ரவணைத்து பெண்ணிர்மையி

39) நீதி மைந்தனா முமக்கு நீரேகுவீரென்று
னால் நீர் பேதலியாதே குமென

என வரிகள் முற்றிலுமாக மாறி உள்ளன. இது பதிப்பித்தலின்போது திருத்தி,

38) ஆதி நம்பி கண்ணுக் கணித்தா யெழுந்தருளி
நீதி மைந்த னாமுமக்கு நீரேகு வீரென்று

39) கண்ணீர் துடைத்துக் கரத்தினா லரவணைத்து
பெண்ணீர் மையினால்நீர் பேதலியா தேகுமென

என்று எதுகை நயம்சிதயாமல் எழுதப்பட்டுள்ளது.

அது போன்றே 270 (உளஎய) என்ற எண் இரண்டு இடங்களில் போடப்பட்டு 350 வரிகளில் இறுதி வரி 349 என்ற தமிழ் எண்ணுடன் முடிகிறது. அத்தோடு ஆழ்வார் தாலாட்டு முற்றிற்று என்றுமுள்ளது. ங,உ என்ற இரண்டு தமிழ் எண்களுமே 'உ' என்ற எண்ணாலேயே எழுதப்பட்டுள்ளது. (உ.ம்) நுளஉக (341), நுளஉநு (343), உளஉக (221).

இவை யாவும் காலச்சூழ்நிலை, மனநிலை, அறிவுத் தெளிவின்மை, பொறுமை இன்மை, பிணி மூப்பு ஆகிய காரணங்களாலும் "படி எடுப்பவரின் கவனக் குறைவினாலும் ஏற்பட்ட பிழைகளாக இருக்கலாம். மேற்காட்டப்பட்ட காரணங்களால் இது மூல ஏடல்ல, படியெடுக்கப்பட்ட ஏடு என்பது உறுதியாகிறது.

## பிழை நீக்கி எழுதுதல்

1 சுவடியில் உள்ள பிழைகளை நீக்கித் திருத்தி எழுதப் பட்டுள்ளது.

2 சிதைந்த இடங்களிலுள்ள வார்த்தைகள் அடைப்புக் () குறிக்குள் இடப்பட்டிருக்கிறது.

3 சிதைந்த பகுதிகள் ஆழ்வார் திருநகரி அச்சுப் பிரதியிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது.

4 சிதைவு அல்லாமல் பொருளில் நெருடல் ஏற்படும் இடங்களிலுள்ள சொற்கள் அச்சுப் பிரதியிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

5 அவை யாவும் பாட வேறுபாடுகளாகப் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

6 வரிகள் சீர் பிரித்து எழுதப்பட்டுள்ளன.

7 பாட வேறுபாட்டு எண்கள், பாடல் வரிகள் கொடுக்கப்பட்டுள்ளன.

8 வாசிப்பதற்குச் சற்று சிரமம் தெரிகிற இடங்களில் சொற்கள் பிரித்து எழுதப்பட்டுள்ளன.

## 1:3 மொழிநிலை

மொழிநிலையில் முன்பு சுட்டியது போலவே மாற்றங்கள் மிகுந்து காணப்படுகின்றன. எழுத்துக்களின் வேறுபாடு கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

<u>ர/ற</u> வேறுபாடு

| | | |
|---|---|---|
| சுடறோ | - | சுடரோ |
| மூற்தியை | - | மூர்த்தியை |
| பாற்த | - | பார்த்த |
| வாற்தை | - | வார்த்தை |
| விறோதம் | - | விரோதம் |

<u>ற/ர</u> வேறுபாடு

| | | |
|---|---|---|
| துரையான | - | துறையான் |
| குரித்து | - | குறித்து |
| அர்புதனே | - | அற்புதனே |
| திரந்து | - | திறந்து |
| கூர | - | கூற |

<u>ழ/ள</u> வேறுபாடு

| | | |
|---|---|---|
| தாள்ந்து | - | தாழ்ந்து |

| | | |
|---|---|---|
| தந்தொளிய | - | தந்தொழிய |
| மகிள்ச்சுடரே | - | மகிழ்ச்சுடரே |
| ஏளாம்பத்து | - | ஏழாம்பத்து |
| வாள்வ | - | வாழ்வ |

ள/ழ வேறுபாடு

| | | |
|---|---|---|
| பொருழும் | - | பொருளும் |
| வெழுவெழுத்து | - | வெளுவெளுத்து |
| எங்கழுக்கு | - | எங்களுக்கு |
| என்நாழும் | - | எந்நாளும் |
| வழயாழி | - | வளயாழி |

ன/ண வேறுபாடு

| | | |
|---|---|---|
| கன்னா | - | கண்ணா |
| அனி | - | அணி |
| மனி | - | மணி |
| தன்புனல் | - | தண்புணல் |

ண/ன வேறுபாடு

| | | |
|---|---|---|
| நண்மரபு | - | நன்மரபு |
| தாணித்தனைக்கும் | - | தானித்தனைக்கும் |

ன/ந வேறுபாடு

| | | |
|---|---|---|
| வருனாள் | - | வருநாள் |
| னாளாகிலும் | - | நாளாகிலும் |
| னாட்டும் | - | நாட்டும் |
| னீடுழி | - | நீடுழி |

ற/த வேறுபாடு

| | | |
|---|---|---|
| றசரதன் | - | தசரதன் |
| றொட்டிலிலே | - | தொட்டிலிலே |
| றழுவணை | - | தழுவணை |
| றருவளம் | - | தருவளம் |
| றற்றின | - | ரத்தின |

ய/அ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| அற்புதன் | - | யற்புதின் |

| | | |
|---|---|---|
| அனுபவிக்கும் | - | யனுபவிக்கும் |
| அனைவோரும் | - | யனைவோரும் |
| அடங்கியது | - | யடங்கியது |

ஆ/யா - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஆலின் | - | யாலின் |
| ஆடை | - | யாடை |
| ஆதரிக்கும் | - | யாதரிக்கும் |
| ஆமப்படியே | - | யாமப்படியே |

இ/யி - வேறுபாடு

| | | |
|---|---|---|
| இகலி | - | யிகலி |
| இருக்க | - | யிருக்க |
| இன்று | - | யின்று |
| இச்சோதி | - | யிச்சோதி |
| இயம்பி | - | யியம்பி |

ஈ/யீ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஈதேது | - | யீதேது |
| ஈராரும் | - | யீராறும் |

உ/யு - வேறுபாடு

| | | |
|---|---|---|
| உச்சிக்கு | - | யுச்சிக்கு |
| உரைக்க | - | யுரைக்க |
| உங்களுக்கு | - | யுங்களுக்கு |
| உரைகோயில் | - | யுரைகோயில் |
| உண்மை | - | யுண்மை |

ஊ/யூ-வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஊட்ட | - | யூட்ட |

எ/யெ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| எவ்வண்ணம் | - | யெவ்வண்ணம் |
| எல்லவரும் | - | யெல்லவரும் |
| என்று | - | யென்று |
| எங்கள் | - | யெங்கள் |

| | | |
|---|---|---|
| எங்கே | - | யெங்கே |

ஏ/யே - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஏதும் | - | யேதும் |
| ஏலக்குழல் | - | யேலக்குழல் |
| ஏங்கிஏங்கி | - | யேங்கியேங்கி |

ஒ/யொ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஒரு வார்த்தை | - | யொருவார்த்தை |

நா/யா - வேறுபாடு

| | | |
|---|---|---|
| நானறிய | - | யானறிய |
| நாமுமக்கு | - | யாமுமக்கு |

யா/ஆ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| யார் | - | ஆர் |
| யானை | - | ஆனை |

அ/வ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| அரிகேசவா | - | வரிகேசவா |
| அணிமுரசம் | - | வணிமுரசம் |
| அரிதாம் | - | வரிதாம் |
| அரவிந்தம் | - | வரவிந்தம் |

இ/வி - வேறுபாடு

| | | |
|---|---|---|
| இருந்தோம் | - | விருந்தோம் |
| இனிய | - | வினிய |

உ/வு - வேறுபாடு

| | | |
|---|---|---|
| உரோமச்சடை | - | வுரோமச்சடை |
| உனக்கே | - | வுனக்கே |
| உண்மை | - | வுண்மை |

எ/வெ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| எம்பெருமான் | - | வெம்பெருமான் |

| | | |
|---|---|---|
| எகினவாகனன் | - | வெகினவாகினன் |
| என்றுரைத்து | - | வென்றுரைத்து |
| எனையும் | - | வெனையும் |

ஒ/வொ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஒருவர் | - | வொருவர் |
| ஒளிபோல் | - | வொளிபோல் |

ஓ/வோ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஓணம் | - | வோணம் |

எ/மெ - வேறுபாடு

| | | |
|---|---|---|
| எவ்வளமும் | - | மெவ்வளமும் |

ஏ/மே - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஏதுவும் | - | மேதுவும் |

ஒ/மே - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஒன்றாய் | - | மொன்றாய் |

ஆ/மா - வேறுபாடு

| | | |
|---|---|---|
| ஆருயிர் | - | மாருயிர் |

ல/ற - வேறுபாடு

| | | |
|---|---|---|
| கால்கொட்டை | - | காற்கொட்டை |
| சூல்கட்டு | - | சூற்கட்டு |
| மேல்கட்டி | - | மேற்கட்டி |

த/ட - வேறுபாடு

| | | |
|---|---|---|
| எண்திசை | - | எண்டிசை |
| திங்கள்தொறும் | - | திங்கடொறும் |

## 1:4 சுவடியின் பயன்

8225 என்ற எண்கொண்ட "ஆழ்வார் தாலாட்டு" என்னும் சுவடியின் பயன் கொடுக்கப்படவில்லை. இத்தாலாட்டானது பக்தி மேலீட்டை உணர்த்துவதாக அமைந்துள்ளது. குழந்தையில்லாப் பெற்றோர் படும்

துயரங்களைப் படிப்பவர் உள்ளத்தைக் கரையச் செய்யும் வகையில் காட்டப்பட்டுள்ளது. குழந்தை வரம் வேண்டி, தெய்வ அம்சமாகப் பிறந்த குழந்தை, தெய்வ நிலை அடைந்ததையும், மக்களை இறைவன்பால் ஈடுபடச் செய்ய வேதத்தை அருளியதையும் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

நம்மாழ்வாரின் அவதாரச் சிறப்பும், மதுரகவிகள் தன்னை ஆழ்வாருக்கு அர்ப்பணித்ததும், நாதமுனிகளால் நாலாயிர திவ்ய பிரபந்தம் தொகுக்கப்பட்ட வரலாறும், வைணவ இலக்கியத்தின் சிறப்பம்சமாகக் காட்டப்பட்டுள்ளன. புராணச் செய்திகளும் 'கூன்பாண்டியனின் வழி வந்தவர்களே திருவழுதி நாட்டை ஆட்சி செய்தவர்கள்' என்ற வரலாற்றுச் செய்திகளும் குறிப்பிடப் பட்டுள்ளன.

## 1:5 காலம்

சுவடியில் காலம் பற்றிய குறிப்புகள் இல்லை. "சுவாமி நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு" என்னும் நூலில், " இத்தாலாட்டிய உபயகவி அப்பா என்பார். ஸ்ரீ வானமாமலை மடம் பட்டம் 6வது விஞ்சை சுமார் 54 வருடகாலம் ஸிம்ஹாஸனத்தை அலங்கரித்துள்ளார். காலம் 780 தை முதல் 834 கார்த்திகை கொல்லம் ஆண்டு என அடியேன் தகப்பனார் தக்க ஆதாரங்களுடன் குறிப்பிட்டவை" என்று பதிப்புரையில் பெரியன் வெ.நா. ஸ்ரீநிவாஸன் உறுதிபடக் கூறியுள்ளார். இவர் கருத்துப்படி இந்நூலின் காலம் 16-ம் நூற்றாண்டின் பிற்பகுதி, 17-ம் நூற்றாண்டின் முற்பகுதி எனக் கொள்ளலாம். ஆனால் ஏட்டில் இரு ஆசிரியர்களின் பெயர்கள் குறிப்பிட்டுள்ளமையால் இது ஆய்வுக்குரியது ஆகும்.

## 1:6 ஆசிரியர்

சுவடியில் இதன் ஆசிரியர் யார் என்று தெரியவில்லை. சரஸ்வதி மஹால் அச்சுப்பிரதியிலும் ஆசிரியர் இன்னார் என்று தெரியவில்லை என்றே உள்ளது. சுவாமி நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டில் இதன் ஆசிரியர் உபயகவி அப்பா என்றுள்ளது. ஆனால் தமிழ்ப் புலவர் அகராதி என்ற நூலில் நம்மாழ்வார் தாலாட்டு பாடியவர் பிச்சுவையங்கார் (1900) என்றும், சிற்றிலக்கியம் புலவர்

அகராதி பிச்சுவையங்கார் (19-20 ஆம் நூற்றாண்டு) என்றும் கொடுக்கப்பட்டுள்ளது.

ஆனால் "நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு" என்ற நூலின் பதிப்புரையில் " இத்தாலாட்டுப் பாடிய உபயகவி அப்பா என்பார், ஸ்ரீ வானமாமலை மடம் பட்டம் 6-வது விஞ்சை மூர்ஸ்வாமி என்ற எம்பெருமானார் ஸ்வாமி திருவடி சம்பந்தியாவார்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆனால் இச்சுவடியிலுள்ள 350வது கண்ணி,

வாழி குருகூரன் வாழிதிருக் கோளூரன்
வாழி பெரும்பூதூரன் வாழியென வாழ்ந்தனனே

என்னும் வரிகள் உபயகவி அப்பா இயற்றிய நம்மாழ்வார் தாலாட்டில் இல்லாத வரிகள்.

தன்னில் மகிழ்ந்து தன்னிலே பூரித்து
நன்னிலை யனாகிநின்ற னாதமுனிவன் வாழி

என்ற 349 வது கண்ணி (சுவடியில்) உபயகவி அப்பா பாடிய நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டில் உள்ளது. நம்மாழ்வார் தாலாட்டில் இல்லை.

அது போன்று உபயகவி அப்பா பாடலில் ,

செல்வத்தர்ஆகித் திருநாட்டு அரசாகி
நல்வார்த்தை நல்கும் நங்கைகுமாரன் கருணை (349)

என்றும், சுவடியில்-

நல்வாரதை நல்குமென நங்கைகுமாரன் கருணை
இல்வாரதை தோறும் இகல்புதல் வனென்றுமென் (347)

என்றும் உள்ளது.

இவை யாவற்றையும் நோக்கும்போது ஒருவர் இயற்றியதை மற்றொருவர் படி எடுக்கும்போது, தம் புலமைக் காரணமாகத் தம் கருத்தைப் புலப்படுத்தியிருக்கலாம் என்று எண்ணலாம். இவ்வாறு கூறப்படுகின்ற இந்த இருவேறு ஆசிரியர் பற்றிய குறிப்புகள் இவ்வாய்வில் முடிவானதல்ல. ஆய்வுக்குரியதாகும்.

## 2. ஆழ்வார் தாலாட்டு – ஆய்வு முன்னுரை

### முன்னுரை

மக்கள் மனதில் பதிந்து கிடக்கும் கருப்பொருள்களே, அவர் தம் உணர்வுகளின் வெளிப்பாடாகப் பாடல் வடிவம் கொள்கின்றன. இப்பாடல்களே நாட்டுப்புறப் பாடல்கள் என்றாகின்றன. இதன் காலம் இது என்று வரையறுக்க முடியாத பழமையான சிறப்பு வாய்ந்ததாக இந்நாட்டுப் புறப்பாடல்கள் அமைகின்றன. அதில் தாலாட்டுப் பாடல்களும் விதி விலக்கல்ல. இத்தாலாட்டுப் பாடல்கள் தாய்மை என்னும் உணர்வின் பிறப்பாகத் தோன்றுகின்றன. ஒவ்வொரு தாயின் ஆசைகளும், கனவுகளும், கற்பனைகளும், வெவ்வேறாக அமையும்போது, வெவ்வேறு வகையில் தாலாட்டுப் பாடல் உருப்பெருகிறது.

### 2:1 தாலாட்டு

"தாலாட்டு என்ற சொல்லுக்கு (தால் + ஆட்டு) நாவினை ஆட்டுதல் என்பது பொருள். குழந்தையின் அழுகை ஒலியை, அடக்கத் தாய் இதழ்களைக் குவித்து, நாவினை ஆட்டிக் குரவையிடுகிறாளே அதைத்தான் தாலாட்டு என்பர்."[1] அழுகின்ற குழந்தையை அமைதி பெறச் செய்யவோ, அல்லது உளநலம், உடல் நலம் கருதி நீண்ட நேரம் விழித்திருக்கும் குழந்தையை அமைதி பெறச் செய்யவோ, துயில் கொள்ளச் செய்யும்போது பாடும் பாடலே தாலாட்டாகின்றது. குழந்தையைத் துயில் கொள்ளச் செய்யத் தாலாட்டுப் பாடுபவர்கள் தாய், பாட்டி, அத்தை இவர்களில் ஒருவராக இருக்கலாம்.

"சேய் துயில் கொள்ளும் காலத்தையும், தாலாட்டு வோரின் மனநிலையையும் ஒட்டித் தாலாட்டின் அடி வரையறை அமையும். குழந்தை தூங்கிவிட்டால்கூட, தாலாட்டுவோரின் நெஞ்சில் அவ்வப்போது அலைமோதும் உணர்வுகளின் புலப்பாடாய், இனிய நினைவுகளின் வடிகாலாய் தாலாட்டு தொடருவதை உணரமுடிகிறது".[2]

## 2.2 தாலாட்டின் தோற்றமும் வளர்ச்சியும் :

தாலாட்டுப் பாடலுக்கான கரு தாயின் மனதிலேயே பதிந்து கிடப்பதால் அவ்விதையைத் தேடித் தாய் அலைய வேண்டிய தேவை யில்லை. இவ்வளவு சிறப்பு இப்பாடல் வடிவம் ஆகியன தொல் பெரும் நூலான தொல்காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதற்கான சான்றுகள் இல்லை எனலாம்.

ஆனாலும், இதன் அமைப்பில்,

கண்படை கண்ணிய கண்படை நிலையும்
(தொல். பொரு.புறம்-87)

என்ற வரி, கண் உறங்கும் நிலையினையும்,

தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்
(தொல். பொரு. புறம்-88)

எனப், பள்ளி எழுச்சிக் குறிப்புக் காணப்படுவதாலும், கண்படை நிலை என்பதனைத் தாலாட்டு போன்ற ஓர் அமைப்பு என்று கருத இடமுண்டு.

சங்க கால இலக்கியமான "பரிபாடலின் வையைப் பாடலொன்றில் வரும்,

வரையழி வாலருவி வாதாலாட்ட...... (6-52)

எனும் அடி இச்சொற் பயிற்சியைத் தருகின்றது. அருவியோசை தாலாட்டாகக் காதலர் துயிலல் இங்குக் காட்சியாகப் பொருந்துகின்றது.[3] என்கிறார். ச.வே.சு.

குழவி மருங்கினும் கிழவதாகும்
(தொல். பொரு. புறம் - 82)

என்ற தொல்காப்பிய நூற்பா பாட்டுடைத் தலைவனைக் குழந்தையாகப் பாவித்துப் பாடும் பிள்ளைத் தமிழ் என்னும் சிற்றிலக்கியம் பிற்காலத்தில் ஏற்பட்டதைக் குறிப்பிடுகின்றது. இது குழந்தையின் பருவங்களைப் பிரித்து, ஆண்பால் பிள்ளைத் தமிழ் என்றும் பெண்பால் பிள்ளைத் தமிழ் என்றும் வகை செய்யப்பட்டுள்ளது. இதனைப் பிள்ளைக்கவி என்றும், பிள்ளைப்பாட்டு என்றும் அழைப்பர்.

அற இலக்கியமான திருக்குறளில்,

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற (குறள் - 71)

என, ஒருவன் பெறும் பேறுகளுள், மக்கட்பேற்றை விடச் சிறந்தபேறு எதுவுமில்லை என்று கூறுவதோடு புதல்வரைப் பெறுதல் என்ற ஓர் அதிகாரமே இயற்றியுள்ளார் திருவள்ளுவர். இவை யாவும் தாய்மையின் உள்ளத்து உணர்வுகளாகத், தாலாட்டாகப் பிறப்பெடுத்தன எனலாம்.

பக்திக் காலத்தில் ஆழ்வார்களும், நாயன்மார்களும் அரசனை மட்டும் பாடும் நிலையை மாற்றி, இறைவனையும் பாடும் நிலையை உருவாக்கினர். இந்த வகையில் பெரியாழ்வார் திருவாய்மொழியில் கண்ணனைத் தாலாட்டும் பாசுரங்களை அமைத்தார். குலசேகர ஆழ்வார் பெருமாள் திருமொழியில் கண்ணனைக் குழந்தையாகத் தாலாட்டும் பாடல்களை இசைத்தார். இந்த அமைப்புகளே பிற்காலத்தில் தாலாட்டு என்னும் தனியொரு இலக்கிய வகை உருவாக மூலமாய் அமைந்தது எனலாம்.

"இறையன்பை, பக்தியைப் பரப்புவதற்கு இன்னிசையைத் துணையாகக் கொண்ட அடியார்கள், அவ்விசைக்கு ஏற்ற நாட்டுப்பாடல் வடிவங்களையும் ............, சொற்களையும், அடைகளையும், அடிகளையும், திரும்பத் திரும்பக் கூறுதல் போன்ற நாட்டுப்பாடல் உத்தியையும் கையாண்டனர்".(4) இவ்வாறு பக்தி காலக் கவிஞர்கள் தனியொரு நாட்டுப்பாடல் உருவாக வழி வகுத்துள்ளனர் எனலாம்.

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட
அஞ்சனவண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய
(பெரி. திரு - 10)

என்னும் பெரியாழ்வார் திருமொழி ஆய்ச்சி தாலாட்டியதாகத் தாலாட்டுக் குறிப்பைத் தருகிறது.

மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே-
-------------------------------------------------
-------------------------------------------------
என்னுடைய இன்னமுதே! இராகவனே! தாலேலோ!
(பெரு.திரு.-1)

என்று பெருமாள் திருமொழியில் குலசேகராழ்வார் கண்ணனின் பெற்ற தாயாகிய தேவகி அவனுடைய பால லீலைகளை அனுபவிக்க முடியாததை நினைத்துப் புலம்புவதாகப் பாடியுள்ளார்.

பிற்காலத்தில் நாட்டுப்புற இலக்கியம் என்ற தனியொரு இலக்கியமாகத் தாலாட்டுப் பாடல் இசை இனிமையும், சொற்சுவையும், பொருட்சுவையும் நிறைந்த ஈடு இணையற்ற கற்பனைக் களஞ்சியமாகத் திகழ்கிறது. இத்தாலாட்டுப் பாடலுக்கு என்று அடிவரையறை எதுவுமில்லை. "சேய் துயில் கொள்ளும் காலத்தையும், தாலாட்டுவோரின் மனநிலையையும் ஒட்டித் தாலாட்டின் அடிவரையறை அமையும்"(5)

தாலாட்டுப் பாடல்கள் அனைத்துமே ஆரிராரி ...ராரி..ராரி...ரோ போன்ற ஒலியமைப்புடன் தொடங்குவனாக உள்ளன. இப்பாடல்கள் மாமன் புகழ் பாடுவதாகவும், தந்தை புகழ் பாடுவதாகவும் அமைந்துள்ளன. குழந்தையைப் பற்றிய எண்ணங்களும், கனவுகளும் பாடல்ளாக வெளிப்படுவதும் உண்டு.

## 2:3 ஆய்வில் தாலாட்டு

ஆய்வுப் பகுதியில் ஆழ்வார் தாலாட்டு என்னும் பாடல் தொகுதி நம்மாழ்வாரின் குழந்தைப் பருவ நிகழ்வுகளாக அமைந்துள்ளன. குழந்தையின் பெருமைகளைக், கேட்பவருக்கு கூறும் உரையாடல் அமைப்பில் இத்தாலாட்டுப் பாடல் அமைந்துள்ளது. பிள்ளை வரம் வேண்டி கிடைத்த பிள்ளையின் பெருமைகளைப் பாடுவதும் தாலாட்டின் மரபுகளுள் ஒன்றாகும். இதே அமைப்பில் ஆழ்வார் தாலாட்டும் பிள்ளை வரம் பெற்று குழந்தையின் சிறப்புக்களை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. தாய் மட்டுமே தாலாட்டுகிறாள். தந்தை, பாட்டி, பணிப்பெண்கள், மந்திரிமார் எனப் பலபேர் இவ்வுரையாடல் தாலாட்டில் பங்கு வகிக்கிறனர்.

பிள்ளைப் பேறு வாய்ப்பதற்கு முன் அந்தாயின் உள்ளக் குமுறல்களையும், பிள்ளையைப் பெற்ற பெண் அக்குழந்தைக்கு செய்யும் சிறப்புக்களையும் அவர்கள் அடையும் மகிழ்ச்சியினையும் கற்பனை நயம் பொங்க, உவமை, உருவகங்களுடன் கூறும் தன்மையும் அத்தாயின் உள்ளத்து உணர்வினையும், மனக்கிளர்ச்சியினையும் எடுத்தியம்புவதாக உள்ளது. "காப்பியக் கதை மாந்தர்களை உருவகப்படுத்தி வருணிப்பது கவிஞர்களுக்குக் கைவந்த கலை. ஆனால் வாய்மொழிப் பாடல்கள், இலக்கியங்களுக்கு முன்னோடி என்பதால் இவ்வுருவகச் செழிப்பைத் தாலாட்டில் காணலாம்"(6)

முற்பகுதியில் குழந்தைப் பருவ நிகழ்ச்சிகளாகக் காட்டிய ஆசிரியர் பிற்பகுதியில் மதுர கவிகளின் வருகையையும், நாத முனிகள் நாலாயிரப் பாசுரங்களைப் பெற்ற வரலாற்றினையும் நம்மாழ்வார் இயற்றிய பாசுரங்களின் தன்மையை அடிச்சுருக்கமும், சொற் பொருள் பெருக்கமுமாய் அமைத்துக் காட்டியுள்ளார். இறுதிப் பகுதியில், நம்மாழ்வார் வழிவந்த இராமனுஜரையும், பாடல்களைத் தொகுத்தளித்த நாதமுனிகளையும் வாழ்க என வாழ்த்துவதாக இத்தாலாட்டுப் பாடல் முற்றுப் பெறுகிறது.

## 2:4 நூல் - பெயர்க் காரணம்

" ஆழ்வார்த் தாலாட்டு" என்னும் இத்தலைப்பு நம்மாழ்வாரையே குறிக்கிறது. ஆண்டாள் திருமாலையே கணவனாக எண்ணியதாலும், மதுரகவியார் திருமாலை வணங்காததாலும் இவர்கள் இருவரை ஒளித்து ஏனையவரை மட்டும் பதின்மர் என்பர். இதில் "இறைவனுடைய குணக் கடலில் ஆழங்கால்பட்டு நீந்துபவர் ஆழ்வார் என்பர்". இம்முறையில் பதினாறு ஆண்டுகள் தவமிருந்து முப்பத்திரண்டு ஆண்டுகள் ஞானநிலையில் வாழ்ந்து பாசுரங்களை இயற்றிய சிறப்பால் ஆழ்வார் என்ற பெயர் நம்மாழ்வாரையே சார்ந்தது எனலாம்.

"வைணவத்தில் ஆழ்வார் என்றால் நம்மாழ்வாரைத் தான் குறிக்கும்".[7] "எம்பெருமானே ஒரு சமயம் கம்பரை நோக்கி நம்மாழ்வாரைப் பாடினையோ எனக் கடாட்சித்ததால், நம்மாழ்வார் என்னும் சிறப்புப் பெயரும் இவர் பெற்றார்"[8] என்று பலவாறாக நம்மாழ்வார் என்னும் பெயர்க் காரணம் விளக்கப்படுகிறது.

இவ்வாறு நம்மாழ்வாரைப் பற்றிய தாலாட்டாகையால் ஆழ்வார் தாலாட்டு என்னும் பெயர் பெற்றது. நம்மாழ்வார் தாலாட்டு என்றும், நம்மாழ்வார் திருத்தாலாட்டு என்றும் இருவேறு நூல்களில் அழைக்கப்படுகிறது.

"சீலத்தாலும், ஞானத்தாலும், பக்தியாலும் சிறந்து விளங்கிய சடகோபரை அனைவரும் இவர் நம்மவர் என்று உரிமையுடன் போற்றினர். இதனால் நம்மாழ்வார் என்னும் திருப்பெயர் பெற்றார்."[9]

## 2:5 ஆழ்வார் திருநகரியில் தாலாட்டு

இன்றும் ஆழ்வார் திருநகரியில் மார்கழி மாதம் மார்கழி உற்சவத்தில் பகல் பத்து மண்டபத்திற்கு நம்மாழ்வார் எழுந்தருளும்போது, பத்து நாட்கள் தாலாட்டு பாடப்படுகிறது. நாள் ஒன்றுக்கு 40 கண்ணிகள் வீதம் பத்து நாட்களும் 350 கண்ணிகள் பாடப்படுகிறது என்ற செய்தி உண்டு.

இத்தாலாட்டு சங்கீதக் கைங்கர்யம் (கவிராயர் மரபு) செய்பவர்களால் மட்டுமே வழிவழியாகப் பாடப்பட்டு வருகிறது. பலரால் பாடப்பட்டு வந்த இத்தாலாட்டை இன்று இருவர் மட்டுமே பாடுகின்றனர். 1) தேவர்பிரான் (வயது-80), 2) நம்பி (வயது-71). இவர்கள் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர் (வைஷ்ணவதாசன் நம்பிகள்) குலத்தைச் சார்ந்தவர்கள். பூணூல் அணிவதில்லை. ஆனால் ஏனைய வைஷ்ணவர் (ஐயங்கார்) களுக்குரிய மரியாதைகள் இவர்களுக்கும் உண்டு. மார்கழித் திருவிழாவில் இவர்களுக்கு மாலை மரியாதைகள் செய்வதுண்டு.

நம்மாழ்வார் தாலாட்டு ஆழ்வார் எழுந்தருளும்போது உபச்சாரத்திற்காகப் பாடப்படுகிறது. தாள இசைகள் கிடையாது. ஒருவகை பாடல் ஓசை மட்டும்தான் உண்டு.

## 2:5 பாட்டுடைத் தலைவன் பெயர்

பெற்றோர், தொட்டிலிட்டு விழா எடுத்துச் சூட்டிய பெயர் மகிழ்மாறன். ஆனால் அனைவராலும் அறியப்படுகின்ற பெயர் நம்மாழ்வார். (இது இறைவனால் அழைக்கப்பட்ட பெயர் என்னும் சிறப்பும் பெறுகிறது).

பிற பெயர்கள்

1) அருள்மாறன் - அருள் தருகின்ற திருவாய் மொழியைக் கூறியமை.
2) உதைய பாஸ்கர் - தென்திசையில் உதித்த சூரியன்.
3) காரி மாறன் - காரியாருடைய மகன் மாறன்
4) குருகைக் காவலன் - குருகூரில் பிறந்ததால்
5) குருகூர்நம்பி - நம்பி என்றால் பரிபூரணன்- எல்லாம் நிறைந்தவன் என்பது பொருள்குருகூரைச் சார்ந்ததால் குருகூர் நம்பி

6) குமரித்துறைவன் - திருவண்பரிசாரத்திலிருந்து வந்தமை (கன்னியாகுமரி மாவட்டம்)

7) குழந்தைமுனி - 32 ஆண்டுகள் வாழ்ந்து குழந்தையாக இருந்து கொண்டே முனித்தன்மை யடைந்தவன்.

8) சடகோபன் - சடம் என்னும் வாயுவைக் கோபித்தமை.

9) சீர் மாறன் - சிறப்பு மாறாதவர்

10) சொல் மாறன் - சொல் புலமை மாறாதவர்

11) ஞானத் தமிழுக்கரசு- வெறுந்தமிழல்லாது ஞானமாகிய தமிழுக்கு அரசராக இருந்தவர்.

12) ஞானத் தமிழ்க்கடல்- ஞானம் நிறைந்த தமிழ்க் கடலாக விளங்குபவர்.

13) ஞானபிரான் - ஞானத்தைக் கொடுக்கின்ற மூர்த்தி

14) ஞானதேசிகன் - ஞானம் நிறைந்த ஆசிரியர்

15) திருவழுதி வளநாடன்-திருவழுதி நாட்டுக்குத் தலைவன்.

16) திருவாய் மொழிப் பெருமாள் - திருவாய்மொழி இயற்றியவர்.

17) திருநாவீறுடையான்- சொல்வன்மையுடையவர்.

18) திருநாவுடைய பிரான் - சொற்சிறப்புக்களையுடைய தலைவர்

19) துடரி அருளாளர் - துடரி மலையருகிருந்து அருள்பவர்

20) தென்னரங்கன் - ஆயிரம் பாசுரங்களும் வான் திகழும் சோலை மதில் அரங்கன் வன்புகழ் என்று புகழ்ந்தவர்.

21) தெய்வ ஞானச் - இறைவனாலே ஞானம் செம்மல் கொடுக்கப் பெற்று, அயர்வற மயக்கம் அருளப் பெற்றவர்.

22) தொண்டர் பிரான் - தன்னை அடியவராகக் கொண்டவர்

23) நாவலர் பிரான் - கவிச் சிறப்புடையவர்

24) நாவீறர் - நாவன்மை படைத்தவர்

25) நாதமுனித் தம்பிரான்- நாதமுனிக் குரலுக்கு செவி மடுத்தவர்

26) நாவலர் பெருமான் - கவித்திறம் படைத்தவர்

27) பரப்பிரம்ம யோகி - உலகிலுள்ள தெய்வங்களை யல்லாமல் பர பிரம்மனானமோன இறைவனையே யோகியாக இருந்து கொண்டு சிந்தை செய்தவர்.

28) பவரோக பண்டிதன்-பிறவிப் பிணியை நீக்குகின்றவர்.

29) பராங்குசன் - பிற மதங்களாகிய யானையைக் கண்டித்தவர்.

30) பாவலர் தம்பிரான்- பாடல்பாடுகின்ற புலவர்களுக் கெல்லாம் தோழர்

31) பிரபந்தஜநகூடஸ்தர்-ஆழ்வார்கள் கூட்டத்திற்கு தலைவர்.

32) புகழ்மாறம் - புகழ் மாறதவர்

33) பொன்னடி - அரங்கநாதனுக்குத் திருவடி

34) பொருநல்துறைவன்- தாமிரபரணி நதிக்குத் தலைவர்

35) பொருநை ஆறன் - தாமிரபரணி ஆற்றையுடையவர்.

36) மகிழ்மாறன் - மகிழம்பூ மாலையணிந்தவர்

37) மாறன் - உலக நடைக்கு மாறுபட்டு வாழ்ந்தவர்

38) முனி வேந்து - உலகில் கவி, ரிஷி, முனி போன்றவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பவர்.

39) மெய்ஞானக்கவி - இறைவனைப் பற்றி உண்மை யான உள்ளத்துடன் கவி பாடுவதால் மெய்ஞானக்கவி.

40) வகுளபூஷ்ணபாஸ்கர்- மகிழமாலையை அணிந்தசூரியன் (மக்களின் மன இருளை நீக்கும் சூரியன்)

41) வகுளாபரணர் - மகிழம்பூ மாலையணிந்தவர்.

42) வினவாது உரைத்த வித்தகர் - வினா கேட்காமலே உரைத்த வித்தகர்

43) வேதம் தமிழ் செய்த- நான்கு வேதங்களின் தமிழ் பிரான்சாரங்களைத் தந்தவர்.

44) ஸ்ரீ வைஷ்ணகுலபதி- ஸ்ரீ ..வணவ சமயத்திற்கு முதல் ஆசிரியர்.

## தாலாட்டில் குழந்தையின் பெயர்:

மைந்தர், மகவு, பிள்ளை, பாலகர், குழவி, குழந்தை, மெய்ப்புதல்வன், சிறுபாலன், புத்திரன், வித்தகன், காதலர், அச்சுதன், காரிமாறன், மகிழ்ச்சுடர், நங்க குமாரன், ஆவி மைந்தன், சடகோபன், முந்தை முதல்வன், பாவலர் கோமான், குருகூரன், கமலாசனன், நாவீறன், குருகைப்பெருமான், குமரித்துறைவன், பொருணைத் துறையான், பொதியமலைக் காவலன், தொடரி மலைக் காவலன், கோதிலா பாலகன், எகின வாகனன்.

## தாலாட்டில் உருவகப் பெயர்கள்

செழுமணி, முழுச்சோதி, கோவாமணி, ஆருயிர், ஒளிவிளக்கு, இனியான், சக்கரை, தேன், மதுரம் கருப்பந்திம்பால், குலமயில், தேமாம்பழச்சுவை, கல்விக் களஞ்சியம், காமருசீரோவியம், திரவியம், மெய்யுணர்வு, ஆணிப் பசும்பொன், பிள்ளைமயில், மாணிக்கம், நித்திலம், கோமேதகம், கோமளம், மணி, தெள்ளமுது, தெய்வத்தனிச்சுடர், செம்மல், முக்கனி, அற்புதன் எனப்பல பெயர்கள் உருவகமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## 2:6 தாய் தந்தையர்

தந்தையார் - காரிமாறன். பாண்டிய நாட்டிலுள்ள குறுநில மன்னர்களில் ஒருவர். இவர் ஆண்ட பகுதி திருவழுதிநாடு என்று அழைக்கப்படுகிறது. ஆழ்வார் திருநகரியைச் சுற்றிலும் உள்ள நவதிருப்பதிகள் அடங்கிய ஊர் திருவழுதிநாடு என்றழைக்கப்படுகிறது. அந்நாட்டில் செல்வச் சிறப்புமிக்க குடிவழியில் வந்தவர்.

தாயார் - உடைய நங்கை. நாகர்கோவிலுக்கு வடக்கே இரண்டரை மைல் தூரத்தில் இருக்கும் திருவண்பரிசாரம் என்பது அவரது ஊர்.

| | | |
|---|---|---|
| குலம் | : | வேளாளர் குலத்தில் வந்தவர் |
| சமயம் | : | வைணவம் |
| வாகனம் | : | அன்னம் - எகினவாகனன்(87) |
| முத்திரை | : | ஞானமுத்திரை |

நாசிநுனி னோக்கி நாட்டம் பிரளாமல்
மூசியெதி ரோடுபெரு மூச்சுகத் தூணில்
மார்பை நிமிர்த்துதிரு மந்திரமே தாரகமாய்
ஆர்வமுடன் கொப்பூழில் அம்புயமாம் அக்கரத்தை
வைத்துயோ கத்திருந்த வாறு ......... (கண்ணி. 158-159)

என மூக்கின் நுனியை நேரே பார்த்த நிலையில் மூச்சை அடக்கி, உடம்பை நிமிர்த்து இருந்து, கையைக் கொப்பூழுக்கருகில் நிமிர்த்துப் பிடித்து மந்திரமே தாரகமாய் அமர்ந்திருந்தார் என விளக்கப்படுகிறது.

செய்யச் சந்திர முகமும் நகையும்-பெய்யுங் கருணைக் கமலக் கண்களும்
துய்யதான ஞானமுத்திரைக்-கையுங் கண்டேன் சாமி (நம்.திரு-9)

என ஞான முத்திரைகைகாட்டி இருக்கும் நம்மாழ்வாரின் தோற்றம் காட்டப்படுகிறது.

## பிறப்பிடம்

நம்மாழ்வார் பிறந்தது குருகூரில். இன்றைய ஆழ்வார் திருநகரியே குருகூர் என்றழைக்கப்பட்டது. இறைவன் (நம்பி) குழந்தையாகக் கருக்கொண்டது குறுங்குடியில். இது நாங்கு நேரியிலிருந்து எட்டு மைல் தூரத்தில் மேற்குத் திசையில் உள்ளது. காரியார் செல்வக்குடியில் வந்த குறுநில மன்னராதலால் தாய்வீடான திருவண்பரிசாரத்தில் பிறக்காமல், குருகூரில் பிறந்தார் என்று கொள்ளலாம்.

## 2:7 தலச்சிறப்பு

இன்று ஆழ்வார் திருநகரி என்றழைக்கப்படும் ஊர் குருகூர் என்றும் ஆதிநாதர் ஆழ்வார் திருக்கோவில் என்பது ஆதிநாதர் கோயில் என்றும் அழைக்கப்பட்டது. நம்மாழ்வாரின் அவதாரத்திற்குப் பிறகே ஆழ்வார் திருநகரி என்று அவர் பெயரால் வழங்கலாயிற்று. ஆய்வில் திருநகர் (22) என்ற குறிப்பும் உள்ளது.

தாமிரபரணி ஆறு சூழ்ந்த வளம் மிக்க நாடாகக் குருகூர் திகழ்ந்திருக்கிறது. ஊழிப்பெருவெள்ளம் முடிந்து முதன் முதலாகத் திருமால் குடிகொண்ட ஊர் என்ற சிறப்புடையது. அதனாலேயே "ஆதிநாதர்" கோயில் என்றழைக்கப்பட்டது. இதற்கு "..றைகோயில்" (1521) என்ற பெயரும் உண்டு.

ஒன்றுந் தேவுமுலகு முயிருமற்றும் யாதுமில்லா
அன்றுநான் முகன்றன்னோடு தேவருலகோடுயிர் படைத்தான்
குன்றம் போல் மணிமாட நீடு திருக்குருகூரதனுள்
நின்ற வாதிப்பிரானுரையுமூர். (10)

என்று குருகூரின் பெருமையை நம்மாழ்வாரே பாடியுள்ளார்.

படைப்புத் தொழில் அதிகாரத்தைப் பெற்ற பிரம்மன், தன்னுடைய சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள விரும்பி விஷ்ணுவைச் சந்திக்கக் கடுந்தவம் புரிந்தார். அத்தவ வலிமையைக் கண்ட விஷ்ணு பிரம்மன் முன் தோன்றி உபதேசித்தார். திருமாலே நேரில் சென்று குருவாக உபதேசித்ததால் குருகூர் எனப் பெயர் பெற்றது.

இவ்வாறு வேறு பல சிறப்புக்களாலும், ஆழ்வார் திருநகரியாகிய குருகூருக்கு 1. ஆதிசேத்திரம் 2. வராக சேத்திரம், 3. சேசசேத்திரம், 4. தீர்த்த சேத்திரம் 5. தாந்தசேத்திரம் என்னும் பெயர்களும் உண்டு.

ஆழ்வார் தாலாட்டு என்னும் ஆய்வு நூலில் "திருநகரி" என்ற பெயரேஇடம் பெற்றுள்ளது. ஆகையால் நம்மாழ்வாரின் அவதாரத்திற்குப் பிறகே இப்பெயர்(ஆழ்வார் திருநகரி) பெற்றுள்ளது என்றும், அதற்கு முன்பு வரை குருகூர், குருகை, திருநகரி என்ற பெயரே நிலைபெற்று இருந்தது என்றும் உறுதிபடக் கூறலாம்.

வளம் தழைக்க உண்டால் என்? வாசம் மணத்தால் என்?
தெளிந்த கலை கற்றால் என்? சீசீ. குளிர்ந்த பொழில்
தண்குருகூர் வாவி சடகோபன் ஊர் எங்கள்
வண்குருகூர் என்னாதவாய். (11)

எனப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இவ்வூரைப் பற்றிப் பாடியுள்ளார். இப்பாடல் வரிகளுக்கு ஏற்றவாறே அக்காலத்து மக்கள் வாழ்ந்தார்கள் என்பது விளங்குகின்றது.

எண்ணற்ற இலக்கிய நூற்கள் எழுந்துள்ள ஊர் இக்குருகூர். தலத்தின் பெயராலும், தலத்தில் எழுந்தருளி யிருக்கும் ஆழ்வார் பெயராலும் ஏராளமான நூல்கள் தோன்றி இவ்வூரைச் சிறப்புச் செய்கின்றன.

## தலவரலாறு

திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் பாதையில் இன்று ஆழ்வார் திருநகரி என்றழைக்கப்படும் குருகூர்

அமைந்துள்ளது. தாமிரபரணி நதிக்கரையில் ஒன்பது திருப்பதிகள் இருந்தன. அதில் முதலாவதான பதி குருகூர். குருகு என்ற சொல்லுக்கு நாரை, கோழி, சங்கு எனப்பல பெயர்கள் உள்ளன.

பிரம்மன், திருமாலை வைகுந்தத்தில் வணங்கி வேண்ட, "உன்னைப் படைப்பதற்கு முன்பே தாமிரபரணி நதிக்கரையில் ஓர் இனிய இடத்தைக் கண்டுள்ளோம். அதை ஆதி சேத்திரமாகக் கொண்டு வழிபடு"[17] என்று கூறினார்.

பிரம்மன் தவம் செய்தற்குரிய தலம் யாது என்று நினைத்துக் கொண்டிருக்கும் வேளையில், பிரம்மனே இங்குசெல் (குரு-செய், கா-பிரம்மம், புரி-நகரம்) என்று திருமால் கட்டிக்காட்டியதால் குருகாபுரி எனப்பெயர் பெற்றது என்றும் ஒரு வரலாறு உள்ளது.

நம்மாழ்வார் மூதாதையரில் முதலாமவர் குருகனார். அவர் அந்நாட்டை ஆண்டதால் குருகூர் எனப்பெயர் பெற்றது என்பர்.

குருகு (சங்கு) ஆகிய சங்குராசன் கோயிலை வலம் வந்து வழிபட்ட இடமாதலால் குருகூர் எனப்பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

## 2 : 8 குருகூர் நம்மாழ்வார் பெயரில் எழுந்த நூற்கள்

1. அண்டகோலத்துறை - மாறன் செந்தமிழ் மகாநாட்டுமலர்
2. அழகர் குறவஞ்சி
3. ஆச்சாரிய ஹிருதயம்
4. ஆழ்வார்கள் சரிதம்
5. ஆழ்வார் வைபவம்
6. குருகூர்ப்பள்ளு
7. குருகைமாலை
8. குருகைமான்மியம்
9. குருகைநாடகம்
10. குருகைவரி
11. சடகோபன் சந்திரகலா மாலை

12. சடகோபாந்தாதி
13. சுவாமி திருவேங்கடமுடையார் பிள்ளைத்திருநாமம்
14. திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம்
15. திருக்குறுங்குடிப் பிள்ளைத்தமிழ்
16. திருக்குருகூர் வேங்கடநாதன் பிள்ளைத்தமிழ்
17. திருவாய்மொழி நூற்றந்தாதி
18. திருப்பணிமாலை
19. தேவர்பிரான் சந்திரகலாமாலை
20. நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி தாலாட்டு
21. நம்மாழ்வார் வண்ணம்
22. நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ்
23. நவதிருப்பதி ஊஞ்சல்
24. நவதிருப்பதி மகாத்மியம் குருகூர்
25. நம்மாழ்வார் திருநாமங்கள்
26. மாறனலங்காரம்
27. மாறன் திருப்பதிக்கோவை
28. மாறன் பாப்பாவினம்
29. ஸ்ரீபராங்குச நாடகம்
30. ஸ்ரீசடகோப திவ்விய சரித்திரம்

ஆய்வாளருக்குக் கிடைத்த தகவல்களின்படி 30 நூற்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. மேலும் எண்ணிறந்த நூற்கள் இருந்திருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

## ஊரின் பிற பெயர்கள்

குருகை, திருக்குருகூர், குருகாபுரி, ஆழ்வார், ஆழ்வார் திருநகரி.

## தாலாட்டில் பிற ஊர்களின் பெயர்

குறுங்கை (25-1) குறுங்குடி (23:1), திருவண்பரிசாரம் (2:1) குருகாபுரி(47:2) குருகூர் (99:2), குருகை (95:2), கோளூர் (197:1), வேளூர் (197:2).

## திருமால் பெயர் (தாலாட்டில்)

அச்சுதானந்தன் (27:1), அரிகேசவன் (27:1), கண்ணன் (27:1), மச்சரூபன் (27:2), அனந்தன் (27:2), வாமனன் (27:2), மாதவன் (27:2), அச்சுதர் (76:2), சக்கிரபாணி (77:2), மால் (22:1), நாராயணன் (142:1), தாமோதரன் (170:1) பரந்தாமன் (170:2), மூர்த்தி (171:1), யாதவன் (172:2)

## பெயர் சிறப்பு

அச்சுதர் - தன்னைப் பற்றினவரைக் கைவிடாதவர்

அனந்தன் - அனந்தன் என்னும் பாம்பணை மேல் பள்ளி கொண்டவர்.

மச்சரூபன் - மீன் அவதாரம் எடுத்தவர் (மச்சம்-மீன்)

வாமனன் - உடலைக் குறுக்கி மூன்றடி மண் வேண்டினவர்.

மாதவன் - மா (இலட்சுமி) இலட்சுமியை மார்பில் தரித்தவர்.

மூர்த்தி - உருத்திரனின் பெயர்

சக்கிரபாணி - கையில் சக்கிரத்தைக் கொண்டவர் (பாணி-கை).

நாராயணன் - உயிர்கள் அனைத்திற்கும் கண் போன்றவர். (நாரம்-உலகு)

தாமோதரன் - வெண்ணெய் திருடாதே என்று தாம்பினால் கட்டிய தழும்பை உடையவர் (தாம்பு - கையிறு)

பரந்தாமன் - எங்கும் நிறைந்திருப்பவர்

## தாலாட்டில் அவதாரம்

" மீன் முதலான .... மேவும வதாரங்கள்" (27:1) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. திருமால் அவதாரங்கள் பத்து. அவை

1. மீன்
2. ஆமை
3. கேளல் (பன்றி)
6. பலராமன்
7. பரசுராமன்
8. தசரதராமன்

4. அரி (நரசிம்மன்) 9. கிருஷ்ணன்

5. குறள் (வாமனா) 10. கல்கி

## பஞ்ச அக்கினி

தாலாட்டுப் பகுதியில் பஞ்சாக்னி (199.1) என்ற குறிப்பு உள்ளது. அவை,

1. ராகம், 2. காமம், 3. கோபம் , 4. சடம், 5. தீமனம் - இவையாவும் தவம் செய்பவருக்கு அமைந்த குணங்களாகும்.

## புளியமரம்

நம்மாழ்வார் யோக நிலையில் இருக்கும் புளியமரம் திருவனந்தபுர அனந்தன் என்றும் ராமனின் தம்பி லட்சுமணன் என்றும் புராணச் செய்திகளில் உள்ளன.

புளியமரம் உற்பவித்த நட்சத்திரம் ஆணி மூலம் (153).

இன்று இப்புளியமரம் மூன்று மரமாக நிற்கின்றது. ஒரே மரமாக இருந்ததுவே சுற்றிச் சுவர்கள் எழுப்பப்பட்டு, தரையெல்லாம் பூசப்பட்டுள்ளதால் அதன் அடிப்பாகம் தெரிய வில்லை. காண்போர்க்கு மூன்று மரமாகத் தெரிகிறது என்றும் கொள்ளலாம்.

## 2:9 நம்பிக்கை

இம்மரத்தின் பட்டையைச் சிறிது எடுத்து உடல்நலம் (காய்ச்சல்) குன்றிய குழந்தைகளுக்குப் பாலில் அரைத்துக் கொடுத்தால் நோய் குணமாகும் என்ற நம்பிக்கை இன்றும் உள்ளது.

" குழந்தைப்பேறு இல்லாதவர்கள் அதன் பட்டையை அறைத்துப் பக்கத்திலுள்ள குழந்தைகளுக்குக் கொடுத்தால் தனக்கு பிள்ளைபேறு வாய்க்கும் என்ற நம்பிக்கையுள்ளதாகத் தகவல்கள் கிடைத்தன".[13]

இம்மரத்தின் பட்டையை ஒடித்து அடுப்பில் இட்டு எரித்தால் ஒடித்த இடத்தில் இருந்து இரத்தமும், சீலும் வடியும். வடியும் இடத்தில் சந்தனத்தைப் பூசினால்தான் நிற்கும் என்றும் நம்பப்படுகிறது.

கவரி வீசுவதற்குப் பணியாட்கள் இருந்தது போலவே குடைபிடிக்கவும் இருந்தனர் என்பதை "வண்ண வட்டக் குடை நிழற்ற" 145.2) என்ற வரிகள் சுட்டுகின்றன.

## மாற்றரசர்கள்

வங்க நாடு, கலிங்க நாடு, மகத நாடு ஆகியவை பாண்டிய நாட்டின் கீழ் இருந்திருக்கின்றன.

வங்கர் கலிங்கர் மகதர் (77.1)

## கப்பம் செலுத்தல்

வங்கர், கலிங்கர், மகதர் மூன்று நாட்டு மன்னர்களும் கப்பம் செலுத்தினர் என்பது வங்கர் கலிங்கர் மகதர் திறையீட்டும் (77.1) என்ற குறிப்பால் புலப்படுகிறது.

இவர்கள் மட்டுமல்லாது சோழ அரசனும் பாண்டிய மன்னனுக்குக் கப்பம் செலுத்தினான் என்றோர் குறிப்பும் உள்ளது. "வளவரசர் கப்பம் மலைபோல்" (193.1) என்ற குறிப்பு சோழர்கள் மலைபோல் பொருட்களைக் குவித்து கப்பமாக செலுத்தினர் என்பதைத் தெளிவுறுத்துகிறது.

## மணி முடி சூடல்

நாடாளும் அரசனின் மரபு வழி மக்களே அரசாண்டனர் என்பதை உணர்த்தும் வகையில் " பெருவழுதி நாடாளும் பிள்ளையி வனென்றே திருவபிஷேகம் புனைய தேசிகரெல்லாம் வந்தார்" (194) என்று மணிமுடிசூடும் குறிப்பும் உள்ளது.

## சேனைத்தலைவர்

அரசனின் படைக்கு சேனைத்தலைவர் இருப்பர். காரியாரின் அரசவையிலும் சேனைத்தலைவர் காணப்படுகிறார். " சேனைத் தலைவருடன் செல்வனைக் கொண்டு" (64.2) என்ற குறிப்பின் மூலம் இதை அறியலாம்.

## தேர்

குழந்தை பிறந்ததும் மகிழ்ச்சி பொங்க, குழந்தையை யானையின் கழுத்தில் அலங்கரித்தத் தேரில் கொண்டு சென்றுள்ளனர்.

ஆனைக் கழுத்தி லலங்கரித்த பூந்தேர் (64.1)

### பல்லக்கு

பல்லக்கில் பயணம் செய்யும் வழக்கம் இருந்த தென்பதை "வண்ண தந்த சிவிகையின்மேல்" (143.1) என்ற குறிப்பு காட்டுகிறது.

### வ்ரி செலுத்துதல்

வருவாயில் ஆறில் ஒரு பங்கு அரசுக்கு செலுத்தும், பழக்கம் இருந்திருக்கின்றது. " ஆறில் ஒன்று கொள்ளாது அவனிப் புறந்தோமோ?" என்று காரியார் புலம்புகிறார். இதிலிருந்து வரி செலுத்தும் செய்தி தெரிய வருகிறது.

## 2:11 சமுதாய பழக்க வழக்கங்கள்

எந்த ஒரு இலக்கியமும் அது தோன்றிய காலத்து சமுதாய நிலைகளைப் பிரதிபலிக்காமல் போவதில்லை என்று கூறலாம். எனவே தான் இலக்கியம் காலம் காட்டும் கண்ணாடியாக திகழ்கிறது. ஆழ்வார் தாலாட்டிலும் சமுதாயப் பழக்க வழக்கங்கள் எதிரொலிக்கின்றன.

### திருமணம்

பெண் பிள்ளையைப் பெற்ற பெற்றோர் அப் பெண்ணின் திருமணப் பருவம் வந்தவுடன் மணமுடித்துக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் முயற்சிகள் மேற்கொள்வது எல்லா சமூகத்திலும், சமுதாயத்திலும் மாற்றப் படாத நிகழ்ச்சியாகும். அதிலும், பெண்ணுக்கேற்ற மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுக்கப் பெற்றோர் எடுக்கும் முயற்சிகள் அளவிட முடியாதது.

இங்கும் உடைய நங்கையின் திருமணப் பருவம் வந்தவுடன் அவளுக்கேற்ற கணவனைப் பல இடங்களிலும் தேடி இறுதியில் காரியாரைத் தேர்ந்தெடுக்கின்றனர்.

> திருவின்வடி வுக்கேற்ற செல்வி மணவாளன்
> எவனா மெனப்புவன மெல்லாங் குறித்தெடுத்து
> நவநா கரிகனிவ னாகுமென நன்னி (கண்ணி.4-5)

என்று திருமணத்திற்குப் பெண் தேடும் வழக்கம் போய் மாப்பிள்ளைத் தேடும் ஒரு வழக்கத்தை இங்கு காண முடிகின்றது. திருமணம் பெண் வீட்டில் நடக்கும் வழக்கமாக இருந்திருக்கிறது.

## திருமண முறை

திருமணத்தின் போது மணமகனின் கையில் மணமகள் கையை பிடித்துக் கொடுப்பது வழக்கம்.

காரியார் செங்கமலக் கைபிடித்திம் மாதுனக்குப்
பாரியா மென்றே பரிவாயளித் தருளி (கண்ணி-8)

என்ற பாடல் வரிகள் இவ்வழக்கத்தை விளக்கி நிற்கின்றன.

சிலப்பதிகாரத்திலும்,

காதற் பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி

(சிலப்.மங்கலம்-61-62)

என்று கோவலன், கண்ணகி திருமணத்தைப் பெரியோர் வாழ்த்தியதை காணலாம்.

ஆழ்வார் தாலாட்டிலும்,

கோசலையும்.......... தசரதனும்
நேசமுடன் வாழ்ந்தது போல் னீடுழி வாழுமென
(கண்ணி.9)

மணமக்களின் பெற்றோர் வாழ்த்துகின்றனர்.

## பிறர் வாழ்த்தல்

பெற்றோர்கள் வாழ்த்தியபின் முறையே வேதியர்களும், தவத்தை மேற்கொள்பவர்களும் வாழ்த்துகின்றனர். பல திசை யிலிருந்து வந்தவர்களும், பாவலர்களும் வாழ்த்துகின்றனர்.

## அலங்கரித்தல்

செல்வச்செழிப்பு மிக்க அரசகுடும்பத்து திருமணம் ஆகையால் நகரே அலங்கரிக்கப்பட்டது. அலங்கரிக்கப்பட்ட நகரில் மணமக்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவதால் வழியில் எதிர்கொண்டு வந்து மக்கள் வாழ்த்துகின்றனர்.

நந்தாத தெய்வ நகரை அலங்கரித்து
வந்தார்க ளெல்லாம் வழியெதிரே வந்தேத்த (கண்ணி.11)

என்று திருமண முறை பலவாறாகக் காட்டப்பட்டுள்ளது.

## பிள்ளைப் பேற்றிற்குத் தவமிருத்தல்

*குழலினி துயாழினி தென்பதம் மக்கள்*
*மழலைச்சொல் கேளா தவர் (குறள் - 66)*

என்கிறார் பொய்யாமொழிப் புலவர். ஒருவர் பெறக்கூடிய செல்வங்களுள் எல்லாம் சிறந்தது பிள்ளைச் செல்வம். பிள்ளைச் செல்வம் இல்லையேல் சமூகத்தாரால் அவமதிக்கப் படுவர். அதனால் சமுதாயத்தில் பிள்ளை இல்லையென்றால் உடனே கோயில் தோறும் சென்று தவமிருக்கின்றனர். ஏதாவது ஒரு தெய்வத்தின் கருணைப் பார்வை தம் மேல் விழாதா? என்று ஏங்குகின்றனர்.

இங்கு திருமணமாகிச் சில நாட்கள் சென்ற பின், உடைய நங்கையாரின் தாய்வீட்டிற்குச் சென்ற போது குழந்தைபேற்றை நினைத்து திருக்குறுங்குடியில் எழுந்தருளி இருக்கும் இறைவனிடம் (நம்பி) பலவாறாகப் புலம்பி, உள்ளக்குமுறல்களையெல்லாம் வெளிப்படுத்தி பிள்ளைவரம் கேட்கின்றனர்.

*மிகப்பே றளித்து விரசை நீராட்டும்*
*மகப்பே ரடையாத வாழ்வுமொறு வாழ்வாமோ?*
*(கண்ணி-19)*

என மனம் வெதும்புகின்றனர். ஐயோ மலடாய்ப் பிறந்தோமோ? (34.2 ) எனத் தங்களையே வருத்துகின்றனர். இறுதியில் வீடேற்றி வீரளிக்கும் மெய்புதல்வன் வேண்டுமென (21.2) திருநகரி மாமாலை வந்தித்திறைஞ்ச (22.3) எண்ணுகின்றனர். குழந்தை பேற்றிற்காக அவர்கள் மேற்கொள்ளும் வேதனைகளும், புலம்பல்களும் 27-37 கண்ணிகள் வரை காட்டப்பட்டுள்ளது. இதன் விளக்கங்கள் பொருளியலில் இடம்பெற்றுள்ளது.

## மகப்பேற்றுக் காலம்

மகப்பேற்றின் போது பெண்கள் உணவை வெறுத்துப் புளிப்பை விரும்புவது இயற்கை. சிலர் மண், திருநீறு ஆகியவற்றை உண்ணுவர். அதை

*சாலப் புளித்ததுவந் தண்சுவர்மேல் பூசுமண்ணும்*
*பாலொத்த நீறும் பலகாலமு மருந்தி (கண்ணி-48)*

என்று சமுதாயத்தில் மேற்கொள்ளும் வழக்கம் காட்டப் பட்டுள்ளது.

## குழந்தை பிறப்பு

பிறக்கும் குழந்தை நல்ல நேரத்தில் பிறக்க வேண்டும் என்றும், இன்னல் இல்லாமல் பிறக்க வேண்டும் என்றும் இறைவனை வேண்டுவது சமூக வழக்கம்.

ஆழ்வார் தாலாட்டில், பிறக்கும் குழந்தை நல்ல நேரத்தில் "விசாக நட்சத்திரத்தில் (55.1) பிறக்க வேண்டும் என்று பெண்கள் கடவுளை வணங்குகின்றனர்.

## குழந்தை பிறந்தபின் செய்யும் வழக்கங்கள்

குழந்தை பிறந்தவுடன் பொற்கலத்தில் ஏந்தி மெய்யைத் துடைத்துக் கொப்பூழ் கொடியை அறுத்து அதன் பின் சர்க்கரையும், தேனும் கலந்து, அந்த இனிப்பு நீரைக் குழந்தைக்கு முதன் முதலாக கொடுப்பார்கள். முதலில் யார் "சேனை" கொடுக்கிறார்களோ அவர்களின் குணத்தைப் பெற்று குழந்தை வளரும் என்பது நம்பிக்கை.

சற்கரையும் தேனுமொன்றாய் சாரித்துச் சங்கிலிட்டு
பொற்கொடியார் சேனைப் புகட்டி.... (கண்ணி-57)

அதன்பின் குழந்தையை நீராட்ட எடுத்துச் செல்கின்றனர்.

## குழந்தையை நீராட்டல்

குழந்தை பிறந்து சிறிது நாட்களாவது குழந்தையின் கை, கால், காது, மூக்கு, நெற்றி ஆகிய உறுப்புகளை உருவி நீராட்ட வேண்டும். இல்லையேல் உறுப்புகளின் வளர்ச்சி சீராகாது என்பது நம்பிக்கை.

இங்கு குழந்தை பிறந்ததும் உச்சிக்கு எண்ணெயிட்டு (57:2) நெற்றியைப் பிடித்து அழுத்தி விட்டுக் (58:1) கையை முறுக்கி (58:1) இரண்டு முழங்கால்களையும் நிமிர்த்து (58:2) காதருகே உருவி (59.1) மூக்கு தண்டை உருவி (59:1) நீராட்டியபின், குழந்தையின் நாவு திருந்த வேண்டும் என்பதற் காகச் சிறிது வசம்பு ஊட்டி (59:2) அதன் பின் குழந்தையின் தந்தையிடம் கொடுக்கின்றனர்.

இவையாவும் குழந்தை பிறந்தவுடன் நிகழ்த்தும் சமுதாய பழக்கங்கள் ஆகும்.

## குழந்தைக்குப் பெயர் சூட்டல்

குழந்தை பிறந்து பெயரிடும்போது வீட்டில் தொட்டில் கட்டி விழாக் கொண்டாடுவது இன்றைய வழக்கு. நம்மாழ்வார் பிறந்த பன்னிரெண்டாவது நாள் ஆதிநாதர் கோயிலில்

தொட்டில் கட்டிக் குழந்தையை அதில் போட்டு பெயர் சூட்டுகின்றனர். *(62-63)*

*ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும்*
*யாரும் சார்த்தி யவையவை பெருமே (தொல்-பொருள்-மரபு.619)*

எனப் பெயரிடுதல் பற்றி தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

இன்றும் குழந்தை பிறந்தவுடன் மகிழ்ச்சியை எல்லோருடனும் பங்கு வைத்துக் கொள்வதற்காக இனிப்புகள் வழங்கிக் கொண்டாடுவது வழக்கமாக இருக்கிறது. ஆனால் காரியார் செல்வச் செழிப்பு மிக்க அரசகுடி என்பதோடு மட்டு மல்லாமல் தவமிருந்து பெற்றக் குழந்தையின் பிறப்பைக் கொண்டாட, அந்தணர்களுக்கும், சாதாரண மக்களுக்கும், நிலமும், தானியமும் வழங்கி மகிழ்கின்றார்.

*பூதானங் கோதானம் பூரிதானம் வித்தின்*
*மாதானம் பூசுரர்க்கு மாசுரர்க்கு மேவழங்கி (கண்ணி-67)*

என்ற வரிகள் அவ்வழக்கைச் சுட்டுகின்றன.

### செவிலித்தாய்

குழந்தையைக் கவனிக்க வளர்ப்புத்தாய் வைக்கும் வழக்கம் சங்க காலத்திலேயே இருக்கின்றது. நம்மாழ்வாரையும் கவனித்துக் கொள்ளப் பணிப்பெண்கள் இருக்கின்றனர். குழந்தை பாலுண்ணாமல், அழாமல் இருப்பதைக் கண்டு குழந்தையைத் திருமால் முன் கொண்டு செல்வோம் (141:2) என்று கூறுகின்றனர். அதைக்கேட்டுத் தாயும் "நன்றுரைத்தீர் தாதி" (142:1) என்று உடன்படுகின்றாள்.

மதுரகவியார் குழந்தையைக் கண்டபோது, அவரைப் பார்த்து இப்பணிப்பெண்கள் "குருவே எங்கள் ஆவிமைந்தன்" *(219:2)* பேசினால் நாங்கள் உமக்குத் தொண்டு செய்கிறோம் என்று கூறுகின்றனர். இன்றும் சமுதாயத்தில் செல்வச் செழிப்புடைய வீடுகளில் குழந்தையைக் கவனித்துக் கொள்ளப் பணிப்பெண்கள் இருப்பதைக் காணலாம்.

### 2:12 நம்பிக்கைகள்

நம்பிக்கை என்பது மக்கள் சமுதாயத்தால் தோற்று விக்கப்பட்டு கடைப்பிடிக்கப் படுவதாகும். நகர்ப்புற மக்களைவிடவும் கிராமப்புற மக்களால் அதிகமாகவே நம்பிக்கைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. நம்பிக்கை சில

வேளைகளில் அச்சத்தால் ஏற்படுவனவாகவும் இருக்கிறது. "நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்ச உணர்வின் அடிப்படையாகத் தோன்றுவதாகக் காட்சியளித்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராதபொழுதும் மனித வாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத பொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக் கொள்கிறது".[14]

இவ்வடிப்படையில் ஆழ்வார் தாலாட்டில் அமைந்துள்ள நம்பிக்கைகளைக் காண்போம்.

## மந்திரமும் மருத்துவமும்

மந்திரத்தால் நினைத்த காரியங்கள் நிறைவேறும் என்பது நம்பிக்கை. குழந்தை இயற்கைக்கு மாறாகப் பாலுண்ணாமல், அழாமல், கண் திறவாமல் உடல் அசையாமல் கிடந்த நிலையைக் கண்டு மந்திரத்தால் மாற்ற முடியுமா? மருத்துவத்தால் மாறுமா? என்ற நம்பிக்கையுடன் மருத்துவரையும், மந்திரவாதியையும் அழைத்துப் பார்க்கின்றனர்.

................................ படித்த மந்திரவாதியரும்
பண்டிதரும் தங்கள்தங்கள் பார்வைக்கும் மூலிகைக்கும்
தண்டுதலில்லாது சலித்துத் தடுமாறும் (173-2,174)

என்று அவர்களும் முடிந்தவரை முயற்சி செய்து கைவிட்டு விட்டனர்.

## பேய் பற்றிய நம்பிக்கை

"பேய்க்கும் மருந்து, நோய்க்கும் மருந்து" என்பது பழமொழி. குழந்தை தவழ்ந்து சென்று புளியமரத்தின் கீழ் அமர்ந்தபின் அசையாமல் இருந்த நிலையிலேயே இருந்ததைக் கண்டு பேய் பிடித்து விட்டதோ என்று நினைத்தனர்.

........................ கொண்ட நோய்
பேயென்றால் பேயுமன்று .................. (கண்ணி-211)

என்று பின்பு தெளிகின்றனர். இது பேய் பற்றிய நம்பிக்கை இருந்ததைக் காட்டுகிறது.

## பால் பற்றிய நம்பிக்கை

குழந்தைகளுக்குச் சங்கிலோ, மடியிலோ வைத்துப் பால் கொடுக்கும்போது சிறிது பாலை தரையிலே ஊற்று வார்கள். சங்கில் வைத்துக் கொடுக்கும்போது கண்ணேறு வரக்கூடாது என்பதற்காகத் தரையில் ஊற்றுவார்கள்.

மடியில் வைத்துக் கொடுக்கும்போது நீண்ட நேரமாக ஊறிய பால் கெட்டுவிடும். குழந்தைக்கு வயிற்றுக் கோளாறுகள் வரும் என்ற நம்பிக்கையில் பாலைத் தரையில் ஊற்றுவார்கள். அதே நம்பிக்கையில் இத்தாலாட்டிலும் " ஊருபால் தக்கபடி முன்னே தரையில் சிறிது ஊற்றி" (126) அதன்பின் தாய் மடியில் வைத்துப் பால் ஊட்டுகிறாள்.

## கண்ணேறு கழித்தல்

"கல்லடி பட்டாலும் கண்ணடி படக்கூடாது" என்பது சமுதாயத்தில் வழங்கி வரும் நம்பிக்கை. குழந்தையைக் காண்பவர்களில், எல்லோர் பார்வையும் நல்லதாக இருக்காது. சிலரது பார்வை தீமையைக் கொடுப்பதாக இருக்கும். அதற்காகவே குழந்தையைச் சுற்றி, கண்ணேறு கழிப்பர்.

கண்ணேறு கழித்தல் என்பது சமுதாயத்திற்கு சமுதாயம் மாறுபடுகிறது. சிலர் மஞ்சள் நீரும், சுண்ணாம்பும் கொண்டு சுற்றுவர். சிலர் உப்பும் மிளகாயும் கொண்டு சுற்றுவர். சிலர் மண்ணெடுத்துச் சுற்றுவர்.

சிலர் கற்பூரம் கொண்டு சுற்றுவர். இங்கும் குழந்தையை ஊர்வலமாக எடுத்து வந்ததால்,

.......................... காண்போர்கள் கண்ணேறு வாராமல்
......................கற்பூர ஆலாத்தி பங்காட்டீ (கண்ணி-65)

கண்ணேறு கழிக்கின்றனர். கண்ணேறு கழித்தலைப் பெரியாழ்வார் திருமொழியிலும் காணலாம்.

## 2:13 நல்ல நேரம்

எந்தவொரு நல்ல நிகழ்ச்சிக்கும் முகூர்த்தம் பார்க்கும் வழக்கம் சமுதாய வழக்கில் உள்ளது. குழந்தை பிறந்தவுடன் சாதகம் பார்க்கும் வழக்கமும், திருமணத்திற்கு முகூர்த்தம் பார்க்கும் வழக்கமும் நாட்டுப்புற நம்பிக்கைகளாக மக்கள் மனத்தில்

நிலவுகிறது. இறப்பிற்குக் கூட நல்ல கிழமை பார்க்கும் வழக்கம் மக்களிடையே உள்ளது. "திருத்தக்க தேவர் காலத்திலேயே குழந்தை பிறந்தவுடன் சாதகம் எழுதுவதும், திருமணத்திற்குச் சாதகம் கேட்பதும் இருந்தது என்பதால் அக்கால மக்கள் சோதிடத்தில் வைத்திருந்த நம்பிக்கை தெரியவருகிறது."(15)

## திருமணத்திற்கு நல்ல நேரம்

காரியாருக்கும் உடைய நங்கைக்கும் திருமண நாள் குறிக்கப்படுகிறது.

**சித்திரை மாதத்திரு வோண நன்னாளில்**
**உத்தம யோகத்தினல் லவோரை முகிழ்த்தத்தில்** *(கண்ணி-6)*

திருமணநாள் நிச்சயிக்கப்படுகிறது. மாதம், நாள், யோகம், முகூர்த்த நேரம் அனைத்தும் பார்க்கப்படுகிறது.

## பிறப்பில் நல்ல நேரம்

குழந்தையாகிய நம்மாழ்வார் பிறக்கும் நேரத்தை கூறவந்த ஆசிரியர் மக்களின் நம்பிக்கையை காட்டுகின்றார்.

**திருவிசாகத் துதயஞ் செய்ய மடமானார்**
**மருவி ஐயன் அய்யனென்றே வாழ்த்திக் குரவை யிட்டு**
*(கண்ணி-55)*

என்ற வரிகளில் குழந்தை நல்ல நேரத்தில், நல்ல நட்சத்திரத்தில் பிறக்க வேண்டும் என பெண்கள் இறைவனை வேண்டினார்கள் என்ற வழக்கத்தையும் நம்பிக்கையையும் காண முடிகிறது.

## 2:14 வான சாஸ்திரம்

இந்நூலின் ஆசிரியர் அனைத்தும் கற்றறிந்த அறிஞராக இருந்திருக்க வேண்டும். வான சாஸ்திரத்திலும் சோதிடத்திலும் வல்லவராகத் திகழ்ந்திருக்க வேண்டும். திருமணத்திற்கு (6) நல்ல நேரம் குறித்த ஆசிரியர் குழந்தை பிறப்பையும், ஆண்டு முதல் நாள், கிழமை என்று வரிசையாகத் தருகிறார்.

**நாட்டுங் கலியாதி நாற்பத்தி மூன்றாநாள்**
**வேட்டதிரு வைகாசி வெள்ளி நாட் பூரணையில்**
**திருவிசாகத்து..................** *(கண்ணி 54-55)*

என கலியாண்டு பிறந்து 43-ஆம் நாள் வைகாசி மாதத்தில், வெள்ளிக்கிழமை பவுர்ணமியில், விசாக நட்சத்திரத்தில்

குழந்தை பிறந்தது என்று குறிப்பிட்டு இருப்பது அவரது நுண்மான் நுழைபுலத்தைக் காட்டுகிறது.

திருப்புளியின் அவதாரத்தைச் சொல்லும்போது

........................ சீர்மைபெருகும் துவாபரத்துள்

ஒரு சுத்த ஆணித்திரு மூலத்தியுற் பவித்து (கண்ணி-152,153)

என்று ஆணி மூலத்தில் புளியமரம் அவதரித்ததைக் கூறுகிறார்.

மதுரகவியாரின் பிறப்பைப் பற்றி கூறும் போது,

........................ துவாபரத்தில் சித்திரையிற் சித்திரை நாள் (கண்ணி-196)

என்று சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தார் என்று குறிப்பிடுகிறார்.

நாதமுனிகளைப் பற்றி கூறும்போது,

ஆணிமா தத்தில் அனுடதிரு நாளில் (கண்ணி-352)

தோன்றியவர் என்று குறிப்பிடுகிறார். ஒவ்வொரு வரையும் அறிமுகப்படுத்தும்போது அவர்கள் உதித்த நட்சத்திரத்துடனும், நாளுடனும் அறிமுகப்படுத்துகிறார் ஆசிரியர். இவையாவும் வான சாஸ்திரத்தில் ஆசிரியருக்கு இருந்த ஈடுபாட்டைக் காட்டுகிறது.

## 2:15 கணித சாஸ்திரம்

வான சாஸ்திரம் அறிந்ததைப் போலவே கணிதத்திலும் ஆசிரியரின் பட்டறிவு குறைவு படவில்லை. ஒன்று முதல் கோடி வரையுள்ள எண்களை நயம்பட கையாண்டுள்ளார். எண்களை வரிசை முறையிலும், பெருக்கல் முறையிலும், வகுத்தல் முறையிலும் காட்டியுள்ளார்.

நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், திருவந்தாதி ஆகிய நூல்களின் இயல்புகளைச் சுருங்கிய வரிகளில் விளக்கியுள்ளார்.

### வரிசை முறை

திருவாய் மொழி பற்றிக் கூறும்போது 255-300 வரையுள்ள பாடல்களில் ஒன்றாம் பத்தில் —— பத்தாம் பத்தில் என முடிக்கிறார்.

திருவிருத்தம் நூறும் (282-2) திருவாசிரியம் ஏழும் (283-2) திருவந்தாதி எண்பத்தேழும் (284-2)' எனக் கணக்கிட்டுக் கூறுகிறார்.

'ஆயிரங்களைப் பற்றிக் கூறும்போது, ஓராயிரம் (335-2) மூவாயிரம் (342-1) நாலாயிரம் (343-1) பன்னீராயிரம் (339-1)' எனக் குறிப்பிட்டுள்ளார்.

'கோடி(200-1)' என்று எண்கள் வரிசை நிலையில் கூறப்பட்டுள்ளது.

## பெருக்கல் முறை

குழந்தை பேற்றின் காலத்தைக் குறிக்க ஈரைந்து (49-1) என்றும், பன்னிரண்டு ஆண்டுகள் குழந்தை அசையாமல் புளிய மரத்தின் கீழ் இருந்ததை ஈறாரு (159-1) என்றும், மதுரகவியார் ஆழ்வாரைப் பேச வைத்ததை கண்டு பன்னிரண்டு நாட்கள் ஆடிப்பாடி மகிழ்ந்திருந்தனர் என்பதை ஆறிரண்டு (243-1) என்றும், பதினாறு ஆண்டுகள் புளியமரத்தடியில் குழந்தைக்குக் காவல் இருந்ததை எண்ணிரண்டாண்டு (267-1) என்றும் எண்கள் பெருக்கல் முறையில் கூறப்பட்டுள்ளன.

## வகுத்தல் முறை

வரிவாங்கும் முறையைக் கூறவந்த ஆசிரியர் ஆறில் ஒருபாகம் வாங்குவதை .ஆறில் ஒன்று (36-1) என்று வகுத்தல் முறையைக் காட்டியுள்ளார்.

(ஆய்வில் எண்கள் பற்றிய விளக்கங்கள் நடையியலில் கொடுக்கப்பட்டுள்ளது)

## கலைகளும் விழாக்களும்

குருகூர் நகர் எப்பொழுதும் விழாக்கோலம் பூண்டதாகவே இருந்தது என்னும் குறிப்புக் காணப்படுகிறது. வேதங்கள் மட்டுமல்ல, எல்லாவிதக் கலைகளும் அங்குப் பயிலப்படுவதால் அவ்வூர் திருவிழாக் கோலம் பூண்டதாகவே காணப்படுகிறது.

நாலா கலைப்பொருளும் நாள்வேதமும் பயில
கோலா கலைமாங் குருகை பெருமானோ (கண்ணி - 96)

என்று மட்டுமல்லாமல் நாள்தோறும், மாதந்தோறும், திருவிழாக்களும் குறைவில்லாமல் நடந்தன என்பதை

திருநாளு மாதத் திருநாளும் சான்றோர்
வருனாளும் ........................................... (கண்ணி-83)

என்று விழாக் குறிப்புகள் காட்டப்பட்டுள்ளன.

அந்தமிலா மறையாயிரந் தாழ்ந்த வரும்பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும்
தந்தம் விழாவும் மழகு மென்னாம் தமிழார் கவியின்
பந்தம் விழா வொழுகும் குருகூர் வந்த பண்ணவனே
(சட . அந்-14)

எனக் கம்பர் கூறுகிறார்.

## இசைச் கலை

எல்லாவிதக் கலைகளும் சிறப்புற்றிருந்தது என்பதைக் காட்டிய ஆசிரியர் குறிப்பாகப் பெண்கள் இசைக் கலையில் சிறந்திருந்திருந்தனர் என்ற செய்தியைத் தருகிறார். " இருகூர் விழியார் இசைபோல்" (95-1) கூகை கூவும் என்று காட்டுகிறார். அவ்வளவு இனிமையானது பெண்களின் இசை என்கிறார். தாலாட்டில் காட்டப்பட்டுள்ள இசைக் கருவிகளைப் பார்க்கும்போது இசை வல்லுநர்கள் நிறைந்திருந்தனர் என்பது தெரிகிறது.

## ஒற்றுமை

பல இனமக்களும் வாழ்ந்திருப்பர், எனினும் பாடல் மூலம் வேற்றுமையில் ஒற்றுமையைக் காணமுடிகிறது. பிறர் துன்பத்தையும் தன் துன்பத்தைப் போல கருதுகின்றனர். குருகூரில் வாழ்ந்த மக்கள் 'கடுகு உள்ளம்' கொண்டவர்கள் அல்ல. 'எல்லோரும் ஓரினம் ' என்ற எண்ணம் கொண்ட மக்கள்

செய்யெனாமுனஞ் செய்தவர் நன்றியுடன்
மையதாக மறந்தனனே கொலோ [16]

என வேலை ஏவும் முன்னம் ஏவல் செய்யும் மக்களாய் காரியார் நாட்டு மக்கள் இருந்திருக்கின்றனர் என்பது புலப்படுகிறது.

காரியார், உடைய நங்கைத் திருமணத்தின் போது மக்கள் எல்லோரும் எதிர் கொண்டு வாழ்த்துகிறார்கள். (11). குழந்தை பிறக்கும் தருவாயில் குழந்தை நல்ல நேரத்தில் பிறக்க வேண்டும் (55) என்று இறைவனை வேண்டுகின்றனர். குழந்தை பிறந்தவுடன் அதற்குச் செய்ய வேண்டிய முறைகளை எல்லாம் பெண்கள் செய்கின்றனர். (56-60)

குழந்தை பாலுண்ணாமல் இருக்கும் தருவாயில் குழந்தையைக் காண வந்தவர்கள் பயப்படுகின்றனர் (128). அவர்களைப் பார்த்துத் தாய் கூறுகிறாள்,

எங்கள் குடிக்கு மிறையோன் பெருங்குடிக்கும்
உங்கள் குடிக்கும் ஒருமகவாய்த் தோன்றினான் (கண்ணி-129)

எனப் பிறந்த குழந்தை அனைவருக்கும் குழந்தைதான் என்று பாராட்டுகிறாள் தாய்.

குழந்தையின் நிலையினைக் கண்டு அழுது புலம்பும் தாயிடம் நாராயணன் சந்நதியில் கொண்டு இட்டுவேண்டுவோம் என்று ஆலோசனை வழங்குகின்றனர் பெண்கள். (142)

குழந்தை தவழ்ந்து ஓடுவதைக் கண்டு, தாய் மனம் மகிழ்வதை பார்த்து பெண்கள் மனம் மகிழ்கிறார்கள் (149). சுற்றத்தாரெல்லாம் அதைக் கண்டு மகிழ்கிறார்கள் (150).

மதுரகவியார் ஒளியைக் கண்டு குருகூர் வந்தடைந்து இங்கு நடந்த அற்புதம் என்ன என்று கேட்கும்போது, "எங்கள் அரச குலக் குமரன்" (208) வாய் திறக்கவில்லை, கண் விழிக்கவில்லை என்று கூறுகின்றனர். அதோடு மட்டுமல்லாமல் குழந்தையைப் பேச வைத்தால் " வையகமெல்லாம் உமக்கு முதல் அரசு நல்கும் முயற்சி இடுவோம்" என்று மந்திரிமார் கூறுகின்றனர் (215). நாங்களும் " உமக்குத் தொண்டு செய்வோம் " (220) என்கின்றனர்.

"குழந்தை முனி பேசியவுடன், அம்மகிழ்ச்சியை ஆடிப் பாடிக் கொண்டாடுகின்றனர்" (243). ஆடையும், அணிகலன் களும் மலைப்போல் குவித்து (240-241) பரிசாக அளிக்கின்றனர். குழந்தையான ஆழ்வார் யோகநிலையில் இருந்த பதினாறு ஆண்டுகளும் குழந்தையின் பெற்றோருடன் குழந்தைக்கு காவல் இருக்கிறார்கள் (267).

இவ்வாறு பல நிலைகளிலும் பெண்கள் குழந்தையைக் காத்து வந்தார்கள் என்பதை விட அடுத்தவர் துன்பத்தில் பங்கு கொண்டார்கள் என்று சொன்னால் மிகையாகாது.

## 2:16 புராணச் செய்திகள்

கடவுளைப் புகழ்தல் என்ற அடிப்படையிலும் புராண கால மக்களை உயர்வுப்படுத்தல் என்ற அடிப்படையிலும் புராணச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. புராண வரலாறுகளைக் கூறும் சில விளக்கங்களையும் ஆய்வுப் பகுதியில் காணலாம்.

1. ஏழு உலகங்களையும் திருமால் அளந்த வரலாறு(233:1)
2. கிருஷ்ணன் உலகை வாயில் காட்டிய செய்தி (233:2)
3. ஆல் இலையில் பள்ளி கொண்ட செய்தி (234:4)
4. மாலின் உந்தியிலிருந்து தோன்றியவன் பிரம்மன் என்ற செய்தி (231)
5. குருகூரில் யானையும் வேடனும் வீடுபெற்ற வரலாறு (97)
6. சங்கராசன் வலம் வந்த வரலாறு (98)
7. கருவூர்ச் சித்தனின் நாய் வீடுபெற்ற வரலாறு (99)
8. தசரதனும் கோசலையும் வாழ்ந்த செய்தி (9)
9. மரபு வழியாகக் காரியாரின் முன்னோர்கள் வரை வழுதி நாட்டை ஆண்டனர் என்ற குறிப்புகள் (74-79)

ஆகியன புராணச் செய்திகளாக இடம் பெறுகின்றன.

## மக்கள் பயன்படுத்திய பூக்கள்

குருகூரில் குளங்கள் தோறும், ஆறு முதலான நீர் நிலைகள் தோறும் தாமரை மலர் மலர்ந்து நின்றது. தாமரை மலரல்லாது மக்கள் வேறுபல வகை மலர்களையும் பயன்படுத்தினர்.

மருக்கொழுந்து, பிச்சி, இருவாச்சி, மல்லிகை, சாதிவேர், சண்பகப்பூ, முல்லை (72) முதலான மலர்களின் பெயர்கள் தரப்பட்டுள்ளன.

## 2:17 மக்கள் பயன்படுத்திய இசைக்கருவிகள்

பல கலைகளும் நிறைந்து சிறப்புற்ற ஊர் குருகூர். ஆதலால் அங்கு பல இசைக் கருவிகள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

வெண்சங்கு, பன்சங்கு(50), முரசு (52), பல்லியம் (144), மேளம் (146), யாழ் (146) போன்ற கருவிகள் பயன்படுத்தப் பட்டன.

இன்றும் ஆழ்வார் திருநகரியில் நாயக்கர் காலத்தில் அளித்த ஒரு கல் நாதஸ்வரம் ஒன்றில் பித்தளை நாண் பூட்டப்பட்டுள்ளது.

மார்கழி மாதம் 7ஆம் திருநாளில் அதை வாசிக்கின்றனர். இரண்டு இசைத் தூண்கள் கண்ணாடி மண்டபத்தில் உள்ளன. அதில் ஒவ்வொரு சிறிய கல் தூண்கள் இணைந்த இணைப்பாக அத்தூண்கள் உள்ளன.

ஒவ்வொரு தூணிலும் ஒவ்வொரு இசைப் பிறக்கிறது. இசை வல்லுநர்களால் அவ்விசை இசைத்துக் காட்டப்படுகிறது.

## 2:18 அணிகலன்கள்

ஆழ்வார் தாலாட்டில் காணப்படும் அணிகலன்கள் குழந்தைக்கு அணிவிப்பதாக இருந்தாலும் அவை சமுதாயத்தில் மக்களால் பயன்படுத்தப்பட்ட அணிகலன்கள் என்று கொள்ளலாம். குழந்தைக்குக் கேசாதி பாதமாக அணிகலன்கள் அணிவிக்கிறார்கள். *(103-114)*

1. தலையலங்காரம்
    - பூந்தெரியல்
    - பொற்பட்டம்
    - வீரபட்டம்
    - சுட்டி
2. காதணி
    - வள்ளைக் குழை
    - குதம்பை
    - மகரக்குழை
    - ரத்னக் கொப்பு
    - பச்சைமணி வாளி
    - மூக்குப்பூ
    - மூக்குத்தி
3. கழுத்தணி
    - காறை
    - ஐம்படைத்தாலி
    - மாலிகை
    - தரளமாலிகை

4. தோள்அணி

தோள் வலை

நற்பவளம்

5. முன்கை அணி

முதாரி

முத்தின் கடகம்

6. கை அணி

வெள்ளிவளை

தந்த வளை

செம்பொன் வளை

7. அரை (இடுப்பு அணி)

அரைவடம்

கிண்கிணி

அமச்சு

அரைநாண்

8. கால் அலங்காரம்

தண்டை சிலம்பு

சதங்கை

மை - கண்ணுக்கு

கஷ்தூரிகாப்பு - நெற்றிக்கு

பட்டாடை - உடலுக்கு

## தாலாட்டில் காணப்படும் நீர்நிலை

நீர்நிலை நிறைந்த ஊரே செழிப்பான ஊர் என்பது உலகியலுண்மை. குருகூரிலும் தாமிரபரணி ஆறு நாட்டைச் செழிப்புறச் செய்கிறது. தாலாட்டில் பயன்படுத்தப்பட்ட நீர்த்துறைகள் - சங்கனி நீர் (207), பொருணை (124), குமரித் துறை (124), கங்கா நதி (198).

## தாலாட்டில் இடம் பெற்றுள்ள தமிழ்

குருகூர் சான்றோர்கள் தமிழைத் தித்திக்கும் தெள்ளமுதாகத் தமிழ் தம் மூச்சாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். தமிழ்ப்

பற்றி தண்டமிழ் (81), வேதத்தமிழ் (251), முத்தமிழ் (284), மறைத்தமிழ் (328), வேதகுலத்தமிழ் (341) என்றெல்லாம் பலவாறு இனிமைப்படுத்துகின்றனர்.

### தென்திசை

நான்கு திசைகளிலும் தென்திசை மட்டுமே தாலாட்டில் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது.

தென்திசை (202), தென்குருகை (269), தென்பால் (200), தென்னன் (186), தெற்கு (154), தென்குருகை (25).

### மலைகள்

ஆழ்வார் தாலாட்டில் இரண்டு மலைகள் இடம் பெற்றுள்ளன. 1. பொதிய மலை 2. துடரி மலை. இது திருநெல் வேலியில் உள்ளது.

## 2:19 குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள்

குழந்தையின் பருவங்களை வகுத்துப் 'பிள்ளைத் தமிழ் இலக்கியம்' என்ற தனியொரு இலக்கிய வகையே தோன்றி யுள்ளது. அதன் பருவங்களை இத்தாலாட்டிலும் காணமுடிகிறது.

தொட்டில் (185), அம்மம் உண்ணல் (125), சப்பாணி (187), தளர்நடை (187), புறம்புல்கி (17), அப்பூச்சி (187). இவை இருபாலுக்கும் பொதுவானவை.

சிறுதேர், சிறுபறை (185)
ஆண்பாலுக்குரியது.

அம்மானை (186)
பெண்பாலுக்குரியது.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள், ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என்று வகுத்து அதன் பருவங்களையும் வகுக்கின்றன.

இங்கு இருபாலாருக்கும் பொதுவான பருவங்களும், ஆண்பாலுக்குரிய பருவங்களும், பெண்பாலுக்குரிய பருவங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதன் விளக்கங்கள் சிற்றிலக்கிய வகை என்னும் தலைப்பில் பொருளியியலில் காட்டப்பட்டுள்ளது.

## பிற செய்திகள்

### பெண்கள் - குழந்தைகள் பெயர்

ஆழ்வார் தாலாட்டு என்னும் இப்பாடப்பகுதியில் பெண்களைக் குறிக்க ஏராளமான சொற்களும், குழந்தையைக் குறிக்க ஏராளமான சொற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவை பற்றி நடையியலில் விளக்கப்பட்டுள்ளது.

### சூரியன்

சூரியனைக் குறிக்கப் பல பெயர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இவை நடையியலில் விளக்கப்பட்டுள்ளன.

## 2:20 மொழி நடை

### உவமை உருவகம்

கவிகள் இலக்கியத்தை எழுதுவதற்கு முன்பே திட்டமிட்டுத் தொடங்குவதில்லை. அவை 'மடைதிறந்த வெள்ளம் போல' இலக்கியச் சுவை கலந்து தானாகவே எழும். இந்த வகையில் ஆழ்வார் தாலாட்டிலும் ஏராளமான உவமைச் சொற்களும் உருவகச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. அவை நடையியலில் விளக்கப்பட்டுள்ளன. உவமை அணியும், உருவக அணியும் அணியியலில் விளக்கப்பட்டுள்ளன.

### பன்மொழிப் புலமை

ஆசிரியர் பன்மொழிப் புலமையுடையவர் என்பது தெரிகிறது. ஆசிரியரின் மனப்போக்கிற்குத் தகுந்தவாறு அவரது மொழி நடை அமைந்துள்ளது.

வடமொழிச் சொற்கள் குறை வாகவும், மலையாள மொழிச் சொற்கள் கூடுதலாகவும் காணப் படுகிறது. அது புலவர் வாழ்ந்த பகுதியின் 'மொழிக்கலப்புப்' பண்பாட்டைக் காட்டுகிறது.

### அடுக்குத் தொடர்

உள்ளத்து உணர்வுகளை உணர்ச்சி பொங்க வெளிப் படுத்தும் போது சொற்கள் அடுக்கி வருகின்றன. அடுக்குத் தொடர் பற்றிய குறிப்புகள் நடையியலில் காட்டப்பட்டுள்ளது.

## எதுகை மோனை

ஆசிரியர் கையாண்ட சொற்சிலம்பு தான் எதுகை மோனை என்று சொல்லாம். அந்த வகையில் நூல் முழுவதுமே எதுகை நயம் இடம் பெற்றுள்ளது. மோனை நயமும் பல இடங்களில் இடம் பெற்றுள்ளது.

## நாட்டு வளம் நகர் வளம்

இயற்கை சூழ்ந்த, மாடங்கள் நிறைந்த, வேதங்கள் நிறைந்த ஊராகக் குருகூர் திகழ்கிறது. அதன் சிறப்புகள் பொருளியலில் இடம் பெற்றுள்ளன.

## தாய் புலம்பல்

குழந்தைப் பேற்றிக்காகக் தாய் புலம்பும் செய்தி, குழந்தை பிறந்தவுடன் பால் உண்ணவில்லை, உடல் அசைய வில்லை என்பதைக் குறித்துக் கதறும் செய்திகள் பொருளியலில் இடம் பெற்றுள்ளன.

## வேதம் தமிழ் செய்த பிரான்

நம்மாழ்வார் பாடிய பாடல்கள் திருவிருத்தம், திருவாசிரியம், திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு நூல்களாகும். அவை முறையே ரிக், யசூர், சாம, அதர்வண வேதங்களின் சாரம் என்பர்.

திருவிருத்தம் 100 பாடல்களையும், 7 பாடல்களை கொண்டு திருவாசிரியமும், திருவந்தாதி 87 பாடல்களையும், திருவாய்மொழி 1102 பாசுரங்களையும் கொண்டுள்ளது. (282-300). இதன் விளக்கங்கள் பொருளியலில் இடம்பெற்றுள்ளன.

## மதுரகவிக்கு நம்மாழ்வார் அருளல்

32 ஆண்டுகள் தவம் மேற்கொண்டு உயிர் நீத்த நம்மாழ்வார் மீண்டும் எழுந்தருளியதைக் கண்டு " காரிமாறா என்னையும் கொண்டு சென்றால் நாய்போன்ற இழி பிறப்பையுடைய என் குறையும் தீரும்" (310) என்றுரைத்த மதுரகவியை நோக்கி உலக மக்களுக்குச் செய்ய மறைத்தமிழை யார் கூறுவார் (311) என்று அருளிச்செய்கிறார். இதன் விளக்கங்கள் பொருளியலில் காணலாம்.

## நாதமுனிக்கு அருளல்

மாறனாகிய நம்மாழ்வார் அருளிச் செய்த பாசுரங்களை யெல்லாம் பட்டோலை கொள்வதற்காக வந்த நாதமுனிகளுக்கு, ஆழ்வார் எழுந்தருளி, பொய்கையாழ்வார் தொடங்கி ஆழ்வார்கள் சொன்ன பாடல்களையும் பின்னோர் தெரிந் துரைத்த பாடல்களையும் தொகுத்து உபதேசம் செய்யும் (309) என்று அருளுகின்றார்.

## மதுரகவியாரின் தொண்டு

நம்மாழ்வாரின் அருளிச் செயல்களுக்கு பின் மதுரகவி யார், ஆழ்வாருக்கு மஞ்சள் நீரால் நீராட்டி, மலரால் அருசித்துப் பூசைகள் (312) செய்து வந்தார். 240 ஆண்டுகள் முன்னாழ் வார்களும், பின்னாழ்வார்களும் அருளிச்செய்த பாடல்களை யெல்லாம் தொகுத்து உபதேசம் பண்ணிப் பிறந்த உடலுடன் வைகுந்தம் அடைந்தார்.

## நாதமுனிகள் தொண்டு

மதுரகவியார் வைகுந்தம் சேர்ந்த பின் நாதமுனிகள் திருமால் பதிகள்தோறும் சென்று தொழும் வேளையில், குருகூரை அடைந்து மதுரகவி இயற்றிய கண்ணிநுண் சிறுதாம்பை ஓதி, வேண்டிட, நம்மாழ்வார் எழுந்தருளி, வேதகுலத்தமிழ் ஓராயிரமும், ஒன்பது ஆழ்வார்கள் உரைத்த மூவாயிரமும் நாதமுனிக்கு அளித்து எட்டெழுத்து மந்திரத்தையும் அளித்து உபதேசம் பண்ணும்படி அருளிச் செய்கிறார்.

## முடிவுரை

“சொற்புதிது
பொருள் புதிது
வளம் புதிது
சொல் புதிது
சோதிமிகு
நவகவிதை
என்னாளும் அழியாத மாக்கவிதை”[17]

என்ற பாரதியின் பாடலுக்கேற்ப வளம் நிறைந்த ஒரு நவ

கவிதையாக, சிறந்த இலக்கியப் போக்குடன் ஆழ்வார் தாலாட்டு இடம் பெற்றுள்ளது எனலாம். உயர்வு நவிற்சிக்காகச் சொற்களை அள்ளிக் குவித்திருக்கிறார் ஆசிரியர். தவமிருந்து பெற்ற பிள்ளையல்லவா? அதனால்தானே தேனே — திரவியமே ...... மயிலே ...... மாணிக்கமே...... என்று சொற்சிலம்பம் ஆடியிருக்கிறார். தாயின் உள்ளத்தை தெள்ளத்தெளிவாகப் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார் ஆசிரியர். முன்னுரையில் குறிப்பிட்டுள்ளது போன்று எல்லாத் தாலாட்டுப் பாடல்களும் குழந்தையைப் பற்றிய வருங்காலக் கனவுகளையும், பிறந்த வீட்டுப் பெருமையையும் பேசுவதாக அமையும். ஆழ்வார் தாலாட்டு இதிலிருந்து மாறுபட்டதாகக் குழந்தையின் சிறப்புகளை உரையாடல் வடிவில் எடுத்தியம்புவ தாக அமைக்கப்பட்டுள்ளது. இது குழந்தையின் வரலாற்றைக் கூறுவதாகவே அமைந்துள்ளது.

நம்மாழ்வார் இயற்றிய நால்வகைப் பாசுரங்களும் பதினைந்து பாடல்களில் சிறிய சொற்களில் பெரிய பொருளைத் தருவதாக அமைந்துள்ளன. 282-347 வரையுள்ள 64 பாடலடிகளில் மதுரகவி இயற்றிய கண்ணிநுண் சிறுதாம்பு பற்றிய குறிப்பும் ஏனைய ஆழ்வார்கள் இயற்றிய நூல்களின் எண்ணிக்கையும், நம்மாழ்வார் இயற்றிய பாடல்களின் குறிப்பும் இடம்பெற்றுள்ளமை ஆசிரியர் கவித்திறத்தைப் பாராட்டச் செய்கிறது.

புராணச் செய்திகளும், திருமாலின் பெயர்களும், அவதாரங்களும், இராமானுஜர், நாதமுனி குறிப்புகளும், வரலாற்றுச் செய்திகளும் வைணவத்தின் மீது ஆசிரியருக்குள்ள எல்லையற்ற பற்றும், வைணவத்தை அனைவரும் கற்று உணர வேண்டும் என்ற துடிப்பும் இப்பாடல்களின் வழித் தெரிகிறது.

## மேற்கோள் விளக்கம்


1. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி - 10, பக்-209
2. முனைவர் அ. கருணாநிதி (ப.ஆ), தொகுதி-4, நாட்டுப் புறப் பாடல் களஞ்சியம், பக்கம்-33,34
3. ச.வே. சுப்பிரமணியம், தமிழ் இலக்கிய வடிவும் வகையும், பக். 499-500

4. டாக்டர். முத்து சண்முகம், நிர்மலா மோகன், சிற்றிலக்கிய தோற்றமும் வகையும், பக். 84.

5. முனைவர். அ. கருணாநிதி (ப.ஆ.) மு.சு.நூ.பக்.36

6. தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப் படைகள், பக்-165.

7. டாக்டர் சு. வேங்கடராமன், தமிழ் வளர்த்த வைணவம், பக்.124.

8. சேஷாத்ரி மணவாளன், திருமால் அடியார்கள் (ஆழ்வார்களும், அருளிச் செயல்களும்) பக்-64.

9. ஆதி நாதர் ஆழ்வார் திருக்கோயில் ஸ்தல வரலாறு, ஆழ்வார் திருநகரி பக்.25.

10. திருவண்ணாமலை-பெருந்துறைப்பட்டு ஸ்ரீநா. ராமு செட்டியார் மணிவிழா மலர், பக்-62.

11. மேலது பக்கம்.189

12. ஆதிநாதர் ஆழ்வார் திருக்கோயில் வரலாறு, பக்.5

13. நம்பி (தகவலாளி), வயது-71, கோயில் பராமரிப்பாளர் தாசன் அடிகள், ஆழ்வார் திருநகரி, ஏப்-18

14. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, பக்-188

15. மேலது பக்-12

16. சடகோப திவ்ய சரித்திரம், பக்-60

17. பாரதியார் கவிதைகள், பக்-257.

# 3. பொருளியல்

*முன்னுரை*

மனித வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்து, அழகுப்படுத்தியது தமிழ் மொழியின் தனிச்சிறப்பாகும். வேறு எந்த மொழியிலும் வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்ததைக் காண முடிவதில்லை. தொல்காப்பியம் இலக்கணங்களை எழுத்து, சொல், பொருள் என மூன்றாக வகுத்துள்ளது. மூன்றாவதான பொருள், அகம், புறம் என இருவகையாகப் பகுக்கப்பட்டு இலக்கணம் கூறப்பட்டுள்ளது இவ்வமைப்பில் ''ஆழ்வார் தாலாட்டு'' என்னும் இவ்வாய்வுப்பகுதி புறப்பொருள் அமைப்பில் செய்திகளை உள்ளடக்கியுள்ளது.

*3:1 காப்பு*

பெரும்பாலான இலக்கிய நூல்களில், முதலில் திருமாலையே காப்புத் தெய்வமாக முன்நிறுத்தி செய்யுள்கள் இயற்றப்பட்டுள்ளன. ''ஆழ்வார் தாலாட்டு'' என்னும் ஆய்வுப்பகுதி அதிலிருந்து மாறு பட்டதாக பாட்டுடைத் தலைவரையும், அவர் வழி முன்னோரையும் காப்பாகக் காட்டியுள்ளது.

மட்டுமல்லாமல் முதல் நான்கு வரிகள் 'மாறன் திரு அவதார சரிதையைத் தாலாட்டாகக் கூற' என்னும் வரிகளால் இத்தாலாட்டு உலக நடையிலுள்ளத் தாலாட்டைப் போலல் லாமல், பாட்டுடைத் தலைவன் வரலாற்றைப் பிறருக்குத் தாய் கூறுவதாக அமைந் துள்ளது.

அடுத்த நான்கு வரிகளில் கூன்செழியன் (பாண்டியன்) மகன் திருவழுதி என்றும், அவர் வழியில் வந்தவர்கள் பெயரினையும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளதால், வரலாற்றுச் செய்தியை உள்ளடக்கிய தன்மையினையும் காப்புச் செய்யுளில் காண முடிகிறது.

*3:2 திருவண்பரிசார நகர்வளம்*

''ஆழ்வார் தாலாட்டு'' என்னும் இப்பாடப் பகுதியைத் தொடங்கும் ஆசிரியர் திருவண்பரிசாரம் என்னும் ஊர் வருணனையுடன் தொடங்குகிறார். சி ப்பாக அமைந்த நீண்ட

மதில்களும், செம்பொன்னால் செய்த கோபுரமும், மேகம் தவழுகின்ற மாளிகையும், மரங்களும் நிறைந்த திருவண்பரிசாரம் என்று அந்நகர் சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

### 3:3 குருகூர் நகர்வளம்

குருகூர் நகர் பற்றிக் கூறும்போது உயரமான மாடங்கள் நிறைந்த மாநகர் என்று நகர்ச்சிறப்பு அறிமுகப்படுத்தப்படுகிறது.

மாடத் திருகுருகூர் மாநகரி லெண்டிசையோர்
நாட...........................................

(கண்ணி - 12)

எனக் குருகூர் சிறப்பைக் காட்டுகிறார் ஆசிரியர்.

மாடத்திருக் குருகூர் வந்துதித்த நாரணா

(நம் - திரு - 16)

என ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.

### 3:4 நாட்டுவளம்

ஒரு நாட்டின் செழிப்பே மக்களின் வாழ்க்கைத் தன்மைகளை நிர்ணயிக்கிறது. நாடு செழிக்கும்போது நாட்டு மக்கள் இன்னல்கள் இல்லாமல் வாழ்கின்றனர். திருவழுதி நாட்டு வளம் அழகாகப் படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது.

#### மலர்வளம்

குளங்கள்தோறும் தாமரை மலர்களும், சோலைகளில் நறுமணமுடைய மலர்களும் மலர்ந்து மணம் வீசுகின்றன. அங்கெல்லாம் சிவந்த கால்களையுடைய அன்னப்பறவை செல்கிறது. முல்லை மொட்டுக்கள் விரிந்து மணம் வீச, அதில் வரியுடைய வண்டுகள் மொய்க்கின்றன. அவ்வளவு அழகான மலர்கள் நிறைந்த நாடு திருவழுதி நாடு.

#### நெல்வளம்

உழவுத் தொழிலில் சிறந்த நாடு திருவழுதி நாடு. சுரங்கமாகிய வயல்களில் கிடைக்கும் வைரம், வைடூரியமாகிய முத்துக்களோ என்று ஐயப்படும் அளவுக்கு செந்நெல் நாட்டைச் சூழ்ந்து விளைந்து நிற்கிறது.

கனிவளம்

உயரமாக நிற்கும் தென்னம் பழம் அதனை அடுத்துக் கீழே நிற்கும் பலாமரத்திலுள்ள பழத்தின் மீது விழ, பலாப்பழம் சிதறுகிறது என்று கனிவளம் காட்டப்படுள்ளது.

காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் நெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங்கனி கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
- (சீவக -சிந் - 31)

என்ற சீவகசிந்தாமணிப் பாடல் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

நீர்வளம்

உழவர்கள் உழுத சேற்றில் பாய்ந்த கருமையான எருமை மாடுகள் நீந்தும் குளங்களில் கெண்டை மீன்கள் ஆய்கின்றன என்று நீர்வளம் காட்டப்பட்டுள்ளது.

3:5 செல்வச் செழிப்பு

வளம் பொருந்திய நாடு செல்வம் மிகுந்ததாகத் திகழ்ந்தது என்பது இயற்கையே. அத்தகைய செல்வச் செழிப்புள்ள திருவழுதி நாட்டு அரசன் காரியார் அதிலும் செல்வக் குடியில் பிறந்த அரசன், செல்வம் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்தான் என்பதில் வியப்பில்லை.

பிறமன்னர்கள் வணங்க, உலக மக்கள் எல்லாம் ஏவல் செய்யச் சீரும் சிறப்புமாக வாழ்கின்றான். தனக்குக் குழந்தை பிறந்தவுடன் மகிழ்ச்சியால் பொன்னையும், மணியையும், தானியங்களையும் எல்லோர்க்கும் அள்ளிக் கொடுத்து மகிழ்கிறான் மன்னன்.

கோயிலில் பெயர் சூட்டுவிழா நடக்கிறது. யானையின் கழுத்தில் அலங்கணுறயரித்த பூந்தேரில் குழந்தையை வீட்டிற்குக் கொண்டு செல்கின்றனர்.

மதுரகவியார், மோன நிலையிலிருக்கும் மாறனைப் பேசுவித்தவுடன் பெற்றோர்க்கும், சுற்றத்தாருக்கும் எல்லை யற்ற மகிழ்ச்சி. நாட்டு மக்களின் கொண்டாட்டத்திற்கு எல்லையே இல்லை. பன்னிரண்டு நாட்களும் பெற்ற மகிழ்ச்சியைக் கொண்டாடி மகிழ்கின்றனர்.

எண்ணெய் மஞ்சனீர் களபமெலச் செழும்பனிநீர்
வெண்ணெய்த்தயிர் பால்நறுநெய் வீதிதோறும் பெருக்கி
(கண்ணி - 242)

என்ற வரிகள் வீதிதோறும் வெண்ணெய் தயிர், பால், நெய், எண்ணெய் போன்றவற்றைப் பெருக்கி மகிழ்ந்தார்கள் என்னும்போது ஆநிரைகள் குறையாத செல்வமிக்கவர்களாக இருந்திருக்கிறார்கள் என்று அவர்களின் செல்வச் செழிப்பு புலப்படுகிறது.

### 3:6 தொட்டில் அலங்காரம்

குழந்தைக்குத் தொட்டில் அமைக்கிறார்கள். பொன்னாலாகிய தகட்டில் ஒருவகை இரத்தினத்தால் அலங்காரம் செய்து, வயிரத்தாலான கால் நாட்டி, வைடூரியத்தை அறுத்து விட்டமாக அமைத்து, நீண்ட பொன்னாலாகிய தங்கச் சங்கிலிகளை மேலிருந்து தொங்கவிட்டு, தொட்டில் அமைத்தனர்.

அதனுள் குழந்தையைக் கிடத்துவதற்காக, சிவப்பு நிறத்தாலான துணியில், பஞ்சை அடக்கிய சிறுமெத்தையின் மேல் ஏழடுக்கு வெண்பட்டு விரித்து, மேகத்தில் சிதறிக் கிடக்கின்ற நட்சத்திரங்களைப் போன்று உதிரிப் பூக்களை மெத்தையில் சிதறி, மருக்கொழுந்து, பிச்சி, இருவாட்சி, மல்லிகை, முல்லை, சண்பகம் முதலான மலர்களையும் சாதி வேரினையும் தொட்டிலைச் சுற்றிலும் தொங்கவிட்டிருக் கிறார்கள். இவ்வலங்காரங்கள் யாவும் காரியாரின் செல்வச் செழிப்பினைக் காட்டுகின்றன.

ஆழ்வார் திருநகரியிலிருந்து ஐந்து கிலோமீட்டர் கிழக்கு திசையில் அப்பன் கோயில் என்ற இடம் உள்ளது. இதுவே நம்மாழ்வார் பிறந்த இடமாகும். அந்த அரண்மனை இன்று கோயில் அமைப்பில் அமைக்கப்பட்டு வழிபடு தலமாக உள்ளது. ஆழ்வார் பிறந்த இடத்தில் தொட்டில் அமைக்கப்பட்டு இன்றும் வழிபடுகின்றனர். ஆனால் அத்தொட்டில் அலங் கரிக்கப்பட்ட நிலையில் இல்லாமல், கல்லால் அமைக்கப் பட்ட ஒரு மேடை போன்றதொரு அமைப்பாக உள்ளது. வருடத்திற்கு ஒருமுறை ஆழ்வார் தம் தாய்வீடு சென்று பால் அருந்துவதாக ஐதீகம். இந்நம்பிக்கையின்படி ஆழ்வார் அவதரித்த வைகாசி மாதத்தில், ஆழ்வாரை அப்பன் கோவிலுக்கு எழுந்தருளச் செய்து வழிபாடுகள் நடத்துகின்றனர்.

### 3:7 பிள்ளையில்லையென்று காரியார் இறைவனிடம் வேண்டல்

எவ்வளவு செல்வங்களைப் பெற்றிருந்தாலும் பிள்ளை இல்லாத செல்வம் கள்ளிச்சோறு போன்றதுதான் வழிவழியாகத் திருமாலுக்குத் தொண்டு செய்து என்ன பயன்? காரியார் புலம்புகிறார்.

*வழுதி மன்னர் மரபிலுதித்தயான்*
*ஏழுதலை முறையாயுனையே தொழ*
*மழலைநன்மக வில்லென் மாட்சியோ*
*ஊழ்வினைப் பயனோ........* (சட - திவ்ய - 20)

என்று, ஏழு தலைமுறைகளாகத் தொண்டர்களாக இருக்கும் எங்களுக்கு மக்கள் பேறு இல்லையென்றால் ஊழ்வினையோ, தெய்வமே! உன்னுடைய அருளும் பொய்யானதுதானே! வாழ்வின் பொருளைத் தரக்கூடிய மகவைத் தரக்கூடாதா? என்று இறைவனிடம் புலம்புகிறார்.

குடிவழி

குருகனார் (இவர் ஆண்ட ஊர் குருகாபுரி)

|
|
|

மகனார்

|
|

பேரனார்

|
|

திருவழுதிவள நாடார்

|
|

அறந்தாங்கியார் தர்மதரன்

|
|

சக்கிரபாணியார்

|
|

அச்சுதர்

|

செந்தாமரைக் கண்ணர்

|

செங்கண்ணர்

|

பொற்காரியார்

|

காரியார்

|

மாறன் சடகோபன்

மேற்காட்டப்பட்ட குடிவழி குருபரம்பரையிலுள்ளதன்சுருக்கம்'' (ஸ்ரீ.ஆ.தி.10)

முற்பிறப்பில் செய்த மாதவத்தை முழுவதும் முடிக்க வில்லையோ? பாலுண்ணும் கன்றையும், பசுவையும் பிரித்தோமா? பிள்ளை பெற்றவர்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டோமா? ஆசைப்பட்டுக் குழந்தை உண்ணும் கையைப் பிடித்து விட்டோமா? கற்புடைய பெண்களின் கருவை அழித்தோமா? அழகான பிள்ளைகளை அணைத்து எடுக்க வில்லையோ?

செங்கோலாட்சி செலுத்தாமல் கொடுங்கோல் ஆட்சி செய்தோமோ? கோபங்களைத் துறந்த துறவோர்க்கு வேதனைகள் செய்தோமா? ஆறில் ஒரு பங்கை வாங்காமல் உலகை வெறுத்தோமா?

மெய்வருந்த விழைத்திரு வேலையர்க்
கெய்துகூலி கொடுத்தன வில்லையோ

.......................................

.......................................

ஆறிலொன்று கொளாதுறத் தாசையால்
ஊறு செய்துல கோம்பினனோ (சட - திவ் - 28)

என்று சடகோபத் திவ்ய சரித்திரம் இதே கருத்தைக் கூறுகிறது. நல்ல செயல்கள், எதுவும் செய்யாமல் நாங்கள் இருந்ததால் மலடாய் பிறந்தோமோ. ...ஐயோ...! என்று பலவாறு தன்னையே தாழ்த்தி வருத்தி, இறைவன் முன் புலம்புகிறார் காரியார்.

### 3:8 பிள்ளைபேற்றிற்காகக் காரியார் - உடையநங்கை உள்ளம் வாடல்

அரச குலத்தில் வாழும் தம்பதியரின் வாழ்க்கை இன்னலில்லாத மகிழ்ச்சிகரமான வாழ்க்கையாக இருக்கிறது. இருப்பினும் அவை யெல்லாம் வாழ்க்கையே அல்ல.

உடைப்பெருஞ் செல்வராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகைநீட்டி
இட்டுந் தொட்டுங்கவ்வியுந் துழந்தும்
நெய்யுடையடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறையில்லை தாம் வாழும்நாளே (புறம் - 8)

மழலைமொழி பேசி, கால் அணி கிலுகிலுக்க நடக்கும் குழந்தையை உடைய செல்வமே மகிழ்ச்சிகரமான செல்வ மாகும். அதுவே மகிழ்வான வாழ்க்கையுமாகும் என்று கூறுகின்றனர்.

சீறடிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப
வேறுபடு மேகலைகள் மெல்லென மிழற்ற

(சீவக - சிந் - 2019)

என்ற பாடல் வரிகளுக்கிணங்க, குழந்தை நடப்பதைக் காண வேண்டும்.

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ் (குறள் - 64)

என்கிறார் வள்ளுவர்.

பால்சோறு உண்டு தாயின் பின்புறத்தைக் கட்டிக்கொண்டு ஆடும் குழந்தையில்லாத வாழ்க்கை வாழ்க்கையாகுமா? ஐம்புலன்களையும் அடக்கித் தர்மங்கள் கோடி செய்தாலும்,

குழந்தைப் பெற்று மகிழாத வாழ்க்கை ஒரு வாழ்க்கையாகுமா? பெறுதற்குரிய பேறுகளில் எல்லாம் சிறந்த குழந்தைப் பேற்றைப் பெற்றுக் கர்ப்பத்தில் நீராட்டுதல் இல்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையாகுமா?

பிறவித் துன்பங்களையெல்லாம் ஒழித்து வீடுபேற்றின் பயனை அளிக்கும் பேறே குழந்தைப் பேறுதானே...! இவ்வளவு நாட்களும் நாம் இதை எண்ணாமல் இருந்து விட்டோமே, இனியும் காலம் தாழ்த்தாமல் திருநகரியில் எழுந்தருளியிருக்கும் இறைவனிடம் வேண்டுவோம் என உள்ளம் மிக வாடிச் சோர்ந்து நிற்கின்றனர்.

புத்தெனு மக்கொடு நரகப் புவியிலெம்மைத்
தங்கவிடா தீடேற்றிக் கதியளிக்குந்
தனையரெமக் கருளென வஞ்சன வெற்பூடே
செங்கமலக் காடுடனோர் மதியுங்கூடிச்
செறிந்ததென நின்றவன்முன் செப்பினாரே (சட - திவ் - 32)

என மேற்கண்ட பாடல், உடையநங்கையும் காரியாரும் குழந்தை வரம்வேண்டி இறைவன் வன் நின்ற நிலையனை விளக்குகிறது.

*3:9 நீதி மைந்தன் நாம் உமக்கு*

குறுங்குடியில் இறைவன் முன் பலவாறு புலம்பினவர் மேல் மனமிரங்கி நம்பி அவர்கள் முன் தோன்றிக் கண்ணீரைத் துடைத்து அன்பாய்த் தடவிக் கொடுத்து ''நாமே உமக்கு மைந்தன்'' பாற்கடலில் பள்ளி கொள்ளும் வேதாந்த மூர்த்தியைப் பிள்ளையாகப் படைக்கின்றோம். கவலைப் படாமல் குருகூர் செல்க! என்று திருவாய் மலர்ந்தார். இதை,

மன்ன வனடியினை வணங்கிடக் கண்டுமது
மலடறுத் தாளுமுன்றன்
மைந்தனாய் வருகிறேனென்றே சொற்கேட்டபின்
மகிழ்ந்திடுங் காரிமாறன் *(சட - சந் - மாலை - 14)*

என, நானே உனக்கு மைந்தனாய் வருவேன் என்று நம்பி கூறக் காரியார் மகிழ்ந்தார் என்று சடகோபன் சந்திரகலாமாலை குறிக்கிறது.

*3: 10 மகப் பேற்றின் அடையாளங்கள்*

தாய்மைப் பேற்றின் போது தோன்றும் அடையாளங் களையும் அறிகுறிகளையும் நயத்துடன் விளக்கியுள்ளார் ஆசிரியர். உடல்

முழுவதும் வெளுத்துக் கண்கள் கறுப்பு நிற மடைந்து, உடலில் பச்சை நரம்பு தோன்ற முகம் முற்றும் மாற்றம் அடைந்து தாய்மையின் அறிகுறிகளைச் சுட்டுகிறது.

வயிறு பெரிதாகி, மகப்பேறு வாய்த்ததற்கான அழகைத் தந்து, உணவை வெறுக்கச் செய்து, உறக்கமே பெரிதாகச் செய்யும் தொழிலையெல்லாம் கைவிட்டு, சோர்வாகி, நாக்கு உலர்ந்து, விரும்பாத பொருள்களையெல்லாம் மனம் விரும்பி, மிகப்புளித்த பொருட்களையும், சுவரிலுள்ள ஈரமடைந்த மண்ணையும், பால்போன்று வெண்மைநிறம் வாய்ந்த சாம்பல் நீறும் உட்கொண்டு, உடல் குழைந்து சோர்வாகக் காணப் பட்டாள் உடைய நங்கை என்று, கர்ப்பகாலப் பத்து மாதங்களின் நிகழ்ச்சிகளைக் கூறியுள்ளார் ஆசிரியர்.

### *3:11* குழந்தையின் சிறப்புகளை ஏற்றிச் சொல்லுதல்

தாய் குழந்தையைத் தாலாட்டும்போது, குழந்தையின் சிறப்புக்களையும், குழந்தை பற்றிய எதிர்காலக் கனவுகளையும் பாடலில் வடிப்பது வழக்கம். ஆனால் இங்கு குழந்தை பிறந்ததன் பயன்களைச் சிறப்புக்களாக தாய் கூறுகிறாள்.

### *3:12* வினா அமைப்பு

பிரபஞ்சமாய், பிரபஞ்சத்திலுள்ள உருவற்றக் கருவாய், பெருமைமிக்கவனாக இருப்பவனைச் சொன்னவர் யார்? நெருப்பும் ஆகாயமும் நிலவுலகமும் காற்றும் நீரும் ஆகிய அனைத்திற்கும் ஒப்பாக இருப்பவனைச் சொன்னவர் யார்? ஆலமரமாக இருந்து, அம்மரத்தின் இலையில் தங்கியிருந்த திருமாலாகிய அன்ன வாகனத்தை உடையவனானவனைச் சொன்னவர் யார்? பக்திக்கு விதையாய் அமைந்து, வீடு பேற்றிற்கும் விதையாய் அமைந்தவனைச் சொன்னவர் யார்? வறுமையும் செல்வமும், நரகமும் சுவர்க்கமுமாய் அமைந்த அறிவாற்றல் உடையவனைச் சொன்னவர் யார்? எனப் பலவாறாக வினா எழுப்பும் வகையில் அக்குழந்தையின் இறைமைத் தன்மை இங்கு விளக்கப் பட்டுள்ளது.

### *3:13* பிள்ளை இயங்காததைக் கண்டு தாய் வருந்துதல்

தாய்க் குழந்தைக்குப் பாலூட்ட, பால் கடவாய் வழியே வழிந்தோடுகிறது. தாய் பதறுகிறாள். இருந்தபோதிலும் அப்புலம்பல் தெய்வக் குழந்தையின் சிறப்பினைத் தான் பிரதிபலிக்கிறது.

உலகியல் வழக்கில், பிறந்த குழந்தை பாலுண்ணாமல், அழாமல் இருந்தால் குழந்தையைச் சார்ந்தவர்கள்அனைவருமே பதறிவிடுவார்கள். குழந்தைக்குத் தீங்கு ஏதும் நேரிடுமோ எனக் கலங்கி விடுவார்கள். ஆனால் இது உலகை உய்விக்க வந்த குழந்தை; பாலுண்ணவில்லை; பசித்து அழவில்லை. அத் தன்மைகளைப் புலம்பலாக ஏற்றிக் கூறுகிறாள் தாய்.

குழந்தை சுவாசிக்கும் அடையாளங்கள் எதுவுமில்லை. இயக்கமும் இல்லை. பெண்களே! தாய்மார்களே! பாலுண்ணாத பிள்ளைகளை மூன்று உலகங்களிலும் பார்த்ததுண்டோ? பாலுண்ண மனம் மறுத்து, கண்ணைப் பிசைந்து வாயைத் திறக்காத குழந்தைகளைக் கண்டதுண்டோ? சேனை கூட உண்ணாமல் முகம் மகிழ்ச்சியாய்ப் பூரித்து இருக்கும் குழந்தைகளைக் கண்டதுண்டோ?

கைகா லசையாமற் கண்ணும் விழியாமல்,
மெய்வாய் திறவாத வித்தகரைக் கண்டதுண்டோ

*(கண்ணி 136)*

கையையும், காலையும் அசைக்காமல் கிடத்தியவாறே படுத்திருக்கும் குழந்தைகளைக் கண்டதுண்டோ? கண்ணுக்கு மை எழுதும்போது மெல்ல கண்ணைத் திறந்து பின் கண்ணை மூடிக் கொள்ளும் குழந்தையை உலகில் கண்டதுண்டோ? தாய் வருத்தம் கொண்டு நிற்கும்போது. சற்றே கண்ணைத் திறந்து புன்சிரிக்கும் குழந்தையைக் கண்டதுண்டோ? என்று மேற்கூறப் பட்ட கருத்துக்கள் எல்லாமே வினா அமைப்பில் அமைந்து காணப்படுகின்றன.

### சேய்நிலை கண்டு தாய் தவித்தல்

தவமிருந்து பெற்ற குழந்தை, பிள்ளையில்லா நிலையினை நீக்கிப் பெருமகிழ்ச்சியை அளித்தக் குழந்தை, ஊனமான பிள்ளையைப் போல் அசைவற்றுக் கிடக்கிறது. தாய்மனம் பொறுக்கவில்லை. கதறுகிறாள்! முன்பு பிள்ளை வரம் கேட்டு மன்றாடியவள் இன்று பிள்ளையை இயங்கச் செய்ய வேண்டுகிறாள். அவளின் துயரத்திற்கோர் எல்லையே இல்லாத நிலையாகி விட்டது. இறைவன் சன்னதியில் தவழ்ந்து ஓடிய குழந்தை புளியமரத்தடியில் அமர்ந்தபின் அசையவே இல்லை. யாராவது இரங்கமாட்டார்களா? என்று ஏங்கித் தவிக்கிறாள் தாய்.

*யார் இரங்குவார்?*

தாமோதரனே! பரந்தாமனே! இரங்கமாட்டாயோ? அறமே இரக்கம் கொள். அருள்மூர்த்தியே! மறமே! இரங்கமாட்டாயோ? வன தேவதையே இரங்க மாட்டாயா? விண்ணே! இரங்காயோ? விதியே இரங்காயோ? மண்ணே இரங்காயோ? மதியாதவா இரங்காயோ? என்மேல் யார் இரக்கம் கொள்ளப் போகிறார்கள்? என்று மனம் ஏங்குகிறாள். அவளது எண்ணம், சொல், செயல் எல்லாம் குழந்தையை எப்படியாவது பேச வைக்க வேண்டும். உணவு உண்ணச் செய்ய வேண்டும் என்பதுதான். அதற்காக மந்திரவாதியரையும், மருத்துவரையும் நாடிச் செல்கிறாள். தன் நிலை கண்டு யார் இரங்குவார் என்று பரிதவிக்கிறாள். இங்கு அவள் ஒரு சராசரித் தாயாகவே காட்சியளிக்கிறாள்.

*நம்மாழ்வாரின் உருவச் சிறப்பு*

தெய்வப் பிறப்பாகப் பிறந்த குழந்தை பாலுண்ணாமல், அழாமல், அசையாமல் இருந்தாலும் உயிரோடு ஒளிவிடும் சூரியனைப் போலப் பிரகாசமாகத்தானிருந்தது. குழந்தையின் நிலை கண்ட தாய் தடுமாறுகிறாள். உண்மை விளங்கவில்லை. இருப்பினும், குழந்தையை எடுத்து பட்டாடை அணிந்து நெற்றியில் திலகமிட்டு மடியில் கிடத்திக் கொஞ்சுகிறாள். அப்பா; என் ஆருயிரே; ஆருயிர்க்கும் ஆருயிரே; ஒளிவிளக்கே; காணும் கண்களுக்கு இனிமையானவனே; அழகில் மிக்கவனே; இசையைவிடவும் சிறந்தவனே; தேனே; மதுரமே; கரும்பின் பாகே! பெண்களின் மனதை உருக்கும் குஞ்சரமே; கல்விக் களஞ்சியமே;, தேமாம்பழச்சுவையே; மன்மதனின் ஓவியமே; கிடைக்காத திரவியமே; குறைவில்லாத மெய்யுணர்வே; ஆணிப் பசும் பொன்னே; மாணிக்கமே; நித்திலமே; கோமேதகமே; கோமளமே; சிந்தாமணியே; தெள்ளமுதே; துன்பத்தை ஒழிக்கும் அருமைப் பெருமானே; நல்ல திருமகனே; நாவீறு உடையவனே! விசாகத்தில் வந்த தெய்வத் தனிச்சுடரே; தொடரிமலைக் காவலனே; பொதிய மலைக் காவலனே பொருனைத் துறையானே; குமரித் துறையானே; செம்மலே; தெகிட்டாத முக்கனியே, என்றெல்லாம் பலவாறு குழந்தையின் உருவச் சிறப்புகளை ஏத்திப் புகழ்கிறாள் தாய்.

*3:15 சிற்றிலக்கியக் கூறுகள்*

சிற்றிலக்கியங்கள் பெரும்பாலும், தெய்வங்களையும், மன்னர்களையும், மக்களில் சிறந்தவர்களையும் பற்றிப் பாடப்படும் இலக்கியவகை எனலாம். இடைக்காலத்தில் தோன்றிய பக்தி

இயக்கமே இவ்வகை இலக்கியங்கள் தோன்று வதற்குக் காரணமாக அமைந்திருந்தது எனலாம்.

காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர், அம்மானை, கழங்கு, நீராடல், ஊசல் எனச் சிற்றிலக்கியக் கூறுகள் அமைந்திருந்தன.

விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே
(தொல் - பொரு செய்யுள்- 239)

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் விருந்து என்பது, புதியதாகப் புகும் இலக்கிய வகைகளை உணர்த்துகிறது எனலாம். இவ்வகையில் பெரியாழ்வார் காட்டிய புதிய வடிவங்களாக, புறம்புல்கி, அம்மம் உண்ணல், அப்பூச்சி, காக்கையை வாவென அழைத்தல், அச்சோவச்சோ, பூச்சுடல் போன்ற இலக்கியங்கள் பல உருவாகின. இவையாயும் பக்தி இயக்கத்தின் வெளிப்பாடு எனலாம். 'பிள்ளைத்தமிழ்', ''இலக்கியத்தின் தனிச் சிறப்புக் களையும், இறையனுபவங்களையும், பெருமை மிக்கோரின் வரலாறுகளையும் அறிந்து கொள்ளும் வாய்ப்பினை நல்கும் இனியதோர் இலக்கியம் எனலாம். ''உலகை வாழ்விக்க வந்த கடவுள்களையும், பெரியோர்களையும் உலகின் முன்னணிச் செல்வங்களாக விளங்கும் குழந்தைகளாகப் பாவித்து அவர்களின் சீரிய செயல்களையும் சிறப்புக்களையும் போற்றிப் பாராட்டும் ஒப்பற்ற இலக்கியமாக விளங்குகிறது''[1]

தாலாட்டு

தாய்பாடும் பாடலைக் குழந்தை கேட்பது தாலாட்டு ஆகும். பிறந்த குழந்தையைத் தாய் நாவை அசைத்து ஒலி எழுப்பித் ''தாலேலோ'' என்று பாடி உறங்க வைப்பது தாலாட்டு ஆகும். ஆழ்வார் தாலாட்டு என்னும் இப்பகுதியில் 'தாலேலோ' என்ற அமைப்பு இல்லாவிடினும் இலக்கணத்தைக் கடந்த, தாலாட்டுவது போலமைந்த, ஒரு உரைநடையமைப்பைக் காண முடிகின்றது.

தென்குருகை மாறன் திருவவதா ரச்சரிதை
நன்குருகித் தாலாட்டில் நாட்டவே...

என்ற காப்புச் செய்யுளாலும்,

''என்று தாலாட்டு மிசைக்குருகி....'' *(கண்ணி - 101)*

என்ற பாடல் வரிகளாலும் இது தாலாட்டு எனலாம்.

சப்பாணி / தளர்நடை / அப்பூச்சி

குழந்தை அசைவற்றுக் கிடப்பதைக் கண்டு தாயின் மனம் வெதும்புகிறது. எல்லாக் குழந்தைகளைப் போலவும் குழந்தை பருவ இன்பங்களை அனுபவிக்கத் துடிக்கிறாள் தாய். அவள் மனம் கற்பனைக் கடலில் ஆழ்கிறது. தன் மகன் இரு கைகளையும் சேர்த்து சப்பாணி கொட்டமாட்டானா.... என ஏங்குகிறாள்.

... நுதற்கிடை கட்டிய கட்டியு
மிட்ட பவித்திரமுங்
குழையு மசைந்து குலுங்கி வரும்படி
கொட்டுக சப்பாணி
குருகை வரோதய திருமகழ் மார்பின
கொட்டுக சப்பாணி (நம் - பிள் - 44)

என்று சப்பாணிப் பருவத்தை நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ் காட்டுகிறது.

தளர்நடை

குழந்தையின் அங்க அவையங்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்கிறது. ஆனால் அசை வில்லை. தன் தவப்புதல்வன் தளர்நடை பயில மாட்டானா?

மின்னிப் பொலிந்ததோர் கார்முகில் போலக் கழுத்தினில்
காறையோடும்
தன்னில் பொலிந்த விருடீகேசன் தளர்நடை நடவானோ
(பெரி - திரு 1-7-3)

எனப் பெரியாழ்வார் கண்ணனின் தளர்நடையினைக் குறிப் பிடுவது போல் இங்கு உடைய நங்கையும் எண்ணுகிறாள்.

அப்பூச்சி

சிறுகுழந்தைகள் கண்களை மூடிக்கொண்டு, பூச்சி காட்டி விளையாடுவது வழக்கம். ஒளிந்திருந்தும் பூச்சி காட்டுவர். ஆனால் மகிழ்மாறன் பூச்சி காட்டி விளையாடுவதைத் தாய் உடைய நங்கையால் அனுபவிக்க முடியவில்லை.

....... பாரதம் கைசெய்த
அத்தூத னப்பூச்சி காட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்
(பெரி - திரு - 118)

எனக் கண்ணன் அப்பூச்சி காட்டி விளையாடுவதை பெரியாழ்வார் காட்டுகிறார்.

ஆனால் உடைய நங்கையோ தன்மகன் அப்பூச்சி எப்போது காட்டுவான்? என்று எதிர்பார்த்துக் காத்திருக்கிறாள்.

சப்பாணி கொட்டித் தளர்நடையிட் டப்பூச்சி
எப்போது காட்டியெ மக்கின்பந் தருவாய் (கண்ணி - 187)

என்று வாய்பேசாக் குழந்தையிடம் பரிதாபமாய்க் கேட்கிறாள் தாய்.

## சிறுதேர், சிறுபறை, சிற்றில்

ஆண்பால் பிள்ளைத் தமிழில் காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் எனப் பத்துப் பருவங்கள் காட்டப்படுகின்றன.

குழந்தை சிறுதேர் உருட்டி விளையாடுதல் சிறுதேர் எனப்படும். இங்கு குழந்தை பிறந்த உடனேயே, குழந்தை விளையாடுவதற்கான பொருட்கள் வாங்கப்பட்டுவிட்டன. ஆனால் குழந்தை நடக்க வில்லையே...

வட்டச்சிறு பறைகைக்கொடு வருசிற்ற வருடனே
கொட்டித் திரிதரவென்று கொல்....... (சட - திவ்ய - 64 )

பரவாவகன்மறு கூழமை பயில்சிற்றில்கள் முழுதுங்
திரமாக வெனொரு பாலக சிதைந்தென்றுகொல் வருவாய்
(சட - திவ்ய - 68)

எப்போது சிற்றிலை சிதைப்பாய்? எப்போது சிறு பறையைக் கொட்டுவாய்? என ஏங்கித் தாய் கேட்பதாக ஈ சடகோப திவ்யசரித்திரம் காட்டுகிறது.

செம்பொன்செய் கோயிலிவை பரவவிரு குருகூர
சிறுதேர் உருட்டி அருளே
சீமதுர கவிபுகழு மாமதுர கவிராச
சிறுதேர் உருட்டி அருளே (நம் - பிள் - 53)

என்று, மேற்கூறப்பட்ட இரண்டு இலக்கியங்களுமே குழந்தையாகிய ஆழ்வார் எப்போது விளையாடுவார் என்றே எதிர் பார்க்கின்றன.

உடையநங்கையும்,

*சிற்றில்சிதைத் தழிக்குஞ் சிற்றடியைக் காணவென்றே*
*சிற்றில் பலகோலித் தெரிவையர்கள் சூழ்ந்து நின்றார்*

*(கண்ணி-189)*

எனப் பெண் குழந்தைகள் கட்டிய சிற்றிலைச் சிதைத்து விளையாடும் சிறிய பாதத்தின் அழகைக் காணப் பெண்கள் எல்லோரும் கூடி நிற்கின்றார்கள்; பாண்டிய மன்னர், சிற்றரசனாகிய காரியாரின் குழந்தைக்குச் சிறுதேர், சிறு பறை, தொட்டில், பொன்னாலான அம்மானை எனப்பல விளையாட்டுப் பொருள்களையும் கொடுத்துள்ளதாகக் கூறுகிறாள் உடையநங்கை.

### அம்மானை கழங்கு

ஆண் குழந்தையைப் பெற்றவர்கள், பெண் குழந்தைக்கு ஆசைப்பட்டு, அக்குழந்தைக்குப் பெண் குழந்தை போல் ஆடை அணிவித்து, பூச்சூட்டி, அலங்காரம் செய்து பார்த்தல் என்பது இயற்கை, இங்கும் பெண் குழந்தையின் விளையாட்டுப் பொருட்களான அம்மானையும், கழங்கும் காமதேனும் பந்தும் இன்னும் விளையாட்டுப் பொருட்கள் பிறவும் காரியார் வரவழைத்துள்ளார்.

இவையாவையும் வைத்து குழந்தை விளையாடும் அழகைக் கண்டு அனுபவிப்பது எப்போது என்று தவித்து நிற்கிறாள் உடையநங்கை.

### புறம்புல்கல்

குழந்தை தாயின் பின்புறத்தைக் கட்டிக் கொண்டு ஆடுவது புறம்புகல் எனப்படும். குழந்தை பேறு வாய்க்காத போதே புறம்புல்கிக் கூத்தாட ஒரு மகவு வாய்க்காதோ என்று ஏங்குகிறாள் உடையநங்கை.

*புக்கடிசி லுண்டு புறம்புல்கிக் கூத்தாடும்*
*மக்கள்முகங் காணாத வாழ்வுமொரு வா்ழ்வாமோ?*

*(கண்ணி-17)*

என்று, வாழ்க்கைப் பேறே பிள்ளைப் பேறுதான் என வாழ்வின் பயனைக் கூறுகிறாள் உடையநங்கை.

### அம்மம் உண்ணல்

தாயானவள் குழந்தையை வயிற்றில் தாங்கியகாலத்தும், குழந்தை பிறந்தபின்னரும் மார்போடு அணைத்துப் பாலூட்டும்

போதும், புறநிலையில் அனுபவிக்கும் சுகத்தைவிடவும் அகநிலையில் அனுபவிக்கும் சுகம் சுகமானதே. பெரியாழ்வார் பாசுரத்தில் யசோதைக்குக் கிடைத்த சுகம், பெற்ற தாய் தேவகிக்குக் கிடைக்கவில்லை என்பதைப் பெரியாழ்வார் எடுத்துக் காட்டுகிறார்,

அதுபோலவே உடைய நங்கையும் பாலுண்ணாமல் கண்ணுறங்கும் குழந்தையை மடியில் கிடத்தி,

*அம்மமுண்டு கண்டுயில்வாய் அற்புதனே........*

*(கண்ணி-125)*

என்று வேண்டுகிறாள். குழந்தை பாலுண்ண மறுக்கும் நிலையில்,

*பெண்கொடியீர் அம்மமுண்ணப் பேதலித்து பண்டியெக்கி*
*கண்பிசைந்து வாய்காட்டாக் காதலரைக் கண்டதுண்டோ*

*(கண்ணி-134)*

என அங்குநின்ற பெண்கள் அனைவரிடமும் கேட்கிறாள்.

இவ்வாறு பெரியாழ்வாரின் பிள்ளைத்தமிழ்க் கூறுகள் ஆழ்வார் தாலாட்டில் இடம்பெற்றுள்ளன எனலாம். "பெரியாழ்வாரின் தளர்நடை, அப்பூச்சி இரண்டையும் பின்வந்த நம்மாழ்வார் தாலாட்டு அப்படியேத் தழுவிக் கொண்டது. இங்குக் குறிக்கத்தக்க செய்தியாகும்"[2] என ஆய்வு நூல்கள் குறிப்பிடுகின்றன.

## பாதாதிகேசம், கேசாதிபாதம்

பாதாதிகேசம், கேசாதிபாதம் என்பதுவும் ஒரு பிரபந்த வகையைச் சார்ந்ததாகவே உள்ளது. "இறைமக்கள் தலைவராகும் போது பாதாதிகேசமாகவும் மனிதர் தலைவராகும் போது "கேசாதிபாதமாக மாற்றியும் பாடுவதாகக் கூறுவர்"[3]. இது தனி ஒரு இலக்கியமாகத் தோன்றவில்லை என்றாலும் சங்ககாலம் தொட்டு பல இலக்கியங்களிலும் பாதாதிகேச, கேசாதிபாத வருணனைகள் இடம் பெற்றுள்ளன.

பக்திகாலத்தில் பெரியாழ்வார் திருமொழியில் யசோதை கண்ணனின் உடல் உறுப்புகளை வந்து காணும்படி முதறப்பத்து - இரண்டாம் திருமொழியில் பெண்களை அழைப்பதாக வருணனை அமைந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் மாதவி நீராடிக் கூந்தலையுலர்த்தி அணிகலன்கள் அணிந்ததாக பாதாதி கேசவருணனையாக இளங்கோவடிகள் காட்டுகிறார். (கடலாடு காதை 80-108)

குற்றாலக் குறவஞ்சியில், சிங்கன் சிங்கியின் அணிகலன் களைக் கண்டு வியப்பதாகப் பாதாதிகேச வருணனை அமைந்துள்ளது. (குற்றாலக்குறவஞ்சி)

இங்கு ஆழ்வார் தாலாட்டில் குழந்தையை, மடியில் கிடத்தித் தாய் அணிகலன்கள் அணிந்து அழகுபடுத்தியதைத் தலை யலங்காரம் முதல் கால் அலங்காரம் வரை 'கேசாதிபாத' வருணனையாகக் காட்டியுள்ளார் ஆசிரியர். *(கண்ணி-103-104)*

மடல்

தமிழில் அகப்பொருள் நூல்கள் 'மடல்' என்பதை ஒரு துறையாகவே கொண்டன. பக்திக்காலத்தில் திருமங்கை யாழ்வார் 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்' எனப்பாடி அதனைத் தனியொரு இலக்கியவகையாகப் படைத்துவிட்டார்.

*எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்*
*பொற்படை நெறிமை இன்மை யான்*

*(தொல்.பொரு.அகம். 54.)*

எனப் பெண்கள் மடலேறும் வழக்கம் இல்லாததைத் தொல்காப்பியம் காட்டுகிறது. ''திருமங்கையாழ்வார் பெண் ஒருத்தி மடலூரத் துணிந்தாளெனப் பாடியுள்ளார். அவருடைய வாக்கில் அகப்பொருள் இலக்கணமே புரட்சி பெறுகின்றது.'' [4]

திருமங்கையாழ்வாரின் மடல்கள் பெண் மட லேறுவது பற்றிப் பேசுவதால்.

*மடன்மாப் பெண்டிர் ஏறார்; ஏறுவர்*
*கடவுளர் தலைவ ராய்வருங் காலே*

*கடவுளர் மேற்றே காரிகை மடலே*

எனப் பன்னிருபாட்டியல் இலக்கணம் அமைக்கிறது.

இவ்வகையில் ஆழ்வார் தாலாட்டில், அசையா நிலையில் கிடக்கும் தன் தவப்புதல்வனைக் குறித்துக் கனவு காண்கிறாள் உடையநங்கை; தன் மகனும் வளர்ந்து இளமை யுடையவனாக அழகு வாய்ந்தவனாக வருவான், அவனை அடைவதற்காகப் பெண்கள் மடல் எழுதிப் பார்ப்பார்கள் என்று எண்ணுகிறாள்.

*அமரினும் மாறன் அழகுடையான் என்றே*
*குமரிருந்த மாதர்மடல் கொண்டெழுதிப் பார்க்கின்றார்*

*(கண்ணி-191)*

உலா

உலா என்பது, பவனி, உலாப்பிரபந்தம் ஆகிய பெயர்களில் அமைகின்றது.

*ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப*
*வழக்கொடு சிவணிய வகைமையான*

(தொல். பொருள்.புறம்- 1029)

எனத் தொல்காப்பியம் உலா பற்றிக் கூறுகின்றது. காப்பிய மாந்தர்கள் உலாவந்ததைப் போலவே பக்தி காலத்தில் இறைவனும் உலா வருவதாக இலக்கியங்கள் படைக்கப் பெற்றது.

தலைவன் வீதியில் உலாவரும்போது மங்கை, மடந்தை முதலான ஏழு பருவ மகளிரும் காதல் கொள்வதாக அமைவதே உலா இலக்கியமாகும்.

இங்கு ஆழ்வார் தாலாட்டில்,

***உண்கணவை னொருமடவீர் உன்னிலும் பெண்மை மிக்காய்***
***என்கணவன் என்றே இகலிமயல் கொண்டு நின்றார்.***

***(கண்ணி-194)***

என்றும், இதே அமைப்பில்,

*வற்றாத தண்பொருணைக் குருகைவரு மாறன்*
*மலரணையி லுனையுமின்று மருவுவன்கா ணம்மே*

(திரு.மகிழ்.பவனி-56)

என்றும் குருகை மாறனைக் கண்டு குறத்தி பாடுவதாக அமைந்துள்ளது.

பல்லாண்டு

''பல வருடம், நீடுவாழ்க என்னும் வாழ்த்து, திருப்பல்லாண்டு ஆகியனவற்றை இச்சொல் குறிக்கின்றது. இறைவனுக்குப் பாடப்படும் இத்தகு வாழ்த்து திருப்பல்லாண் டென சைவ, வைணவப் பக்திக் கவிஞர்களால் சுட்டப்படு கின்றது''[5]

*பண்பல பாடிப் பல்லாண் டிசைப்ப*

என்பது பெரியாழ்வார் திருமொழி(1-9-5)

*நாமகளோடும் பல்லாண்டு இசைமின்*

என்பது திருவாசகம்.[6] எனவே பல்லாண்டு என்பது 'பல்லாண்டு வாழ்க' என்று வாழ்த்தும் முறையில் தோன்றி இலக்கியம் எனக்

கொள்ளலாம். பெரியாழ்வாரின் 'திருப்பல்லாண்டு' முதல் எழுந்த பல்லாண்டு இலக்கியம் எனலாம்.

இங்கு, உடைய நங்கைக்குக் குழந்தை பிறந்தவுடன் இசை பல முழங்கி வேதியர்கள் பல்லாண்டு பாடுகின்றனர்.

*வெண்சங் கினமுழங்க வேதியர் பல்லாண்டிசைப்ப*
*பண்சங்கை பட்டமொழி பைந்தொடியார் வாழ்த் தெடுப்ப*

*(கண்ணி-50)*

எனப் பல்லாண்டு குறிப்பிடப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்டதுபோலவே பெரியாழ்வாரின் பாடல்களில் சிற்றிலக்கியக் கூறுகள் மிகுந்து காணப்படுகின்றன. இவையாயும் வைணவ இலக்கியங்களுக்கே உரிய தனிச்சிறப்பு என்றுகூடச் சொல்லலாம்.

*3:16* பேரொளி கண்ட பெருந்தகை:

*ஏரார்மதுரகவி இவ்வுலகத்தில் வந்துதித்த*
*சீராரும் சித்திரையில் சித்திரை நாள் - பாருலகில்*
*மற்றுள்ள வாழ்வார்கள் வந்துதித்த நாள்களிலும்*
*உற்றதெமக் கென்று நெஞ்சேயோர்* (உப.மாலை-18)

என்று புகழும்படி சித்திரைமாதம், சித்திரை நட்சத்திரத்தில் தோன்றிய மதுரகவி, கோளூர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். இறைவனின் பேரருளைப் பெற வேண்டும் என்னும் சிந்தையுடையவராய்க் கடுந்தவம் மேற்கொண்டு, கங்கை நதியில் நீராடி, மழைக்காலம், பனிக்காலம், வெயில்காலம் என்றுப் பார்க்காமல் எல்லாக்காலமும் கடுந்தவத்தை மேற்கொண்டு, பஞ்ச அக்னிநடுவே பழகலானார்.

*கங்கா நதிப்புனலில் கார்காலமும் படிந்து*
*வெங்கால் துகள்சருகு வெய்யோன் ஒளியருந்தி*
*பஞ்சாக் கினிநடுவே பலகால மும்பழகி*
*பஞ்சாயுதத் தோனை யாதரிக்கு மக்காலம்*

*(கண்ணி-198-199)*

அவரது மனம் பஞ்சாயுதங்களைத் தாங்கிய திருமாலையே எண்ணியது. இந்நிலையில் தென்திசையில் ஒரு ஒளியைக் கண்டார். அவ்வொளியானது எதுவோ? என்று திகைத்து நின்றார்.

*பின்னொருவர் காணாது பேதையேன் கண்ணருகு*
*மண்ணுவதே தென்றே ய...லத்தோ மறியாமல்*

*(கண்ணி-201)*

தன் கண்களுக்கு மட்டும் ஒளி தெரிகிறது. வேறு யாருடைய கண்களுக்கும் தெரியவில்லை.

*3:17 தென்திசைச் செல்லல்*

தென்திசையில் உதித்த பேரொளியைக் கண்ட வித்தகர் அவ்வொளி தோன்றிய இடத்திற்குச் செல்ல நினைத்தார்.

*மண்டலத்தில் செய்ததவம் வந்துவெளிப் பட்டதே*
*கண்ட கதிரோன் கதிரே வழிகாட்ட* (கண்ணி-203)

தான் செய்த தவமே வெளிப்பட்டு வந்து தன்னை ஒளியாய் வழிகாட்டுவது போல் தோன்றுகிறது என்று நினைக்கிறார்.

தாமிரபரணியின் கரையை அடைந்தவர் மறுநாள் ஒளிப் பிழம்பைக் காணாமல் தேடுகிறார். அய்யோ! என்று நிற்கும் போழுது, அந்த ஒளி மறைந்தது இந்த ஊரில் தான், என்று மனம் தெளிந்தவராய், சங்கனி நீர்த்துறையில் நீராடி எழுந்து அங்கு இருந்த மக்களிடம் இங்கு நடந்த அற்புதம் என்ன என்று வினவுகிறார்.

அங்குள்ள மக்கள்,

*........................எங்கள ரசக்குலக் குமரன்*
*வாயுந்திற வான்மலர்க் கண்ணினை னோக்கான்*
*தாயைமுகம் பாரான் தந்தையையும் வாவென்னான்*
(கண்ணி-208-209)

என்றும், தவழ்ந்து சென்று புளிக்கீழ் இருந்த நாள் முதல் இன்றுவரை இருந்த இடம்விட்டு அசையாமல் வீற்றிருக்கிறான் என்றும் குழந்தையின் நிலையினை எடுத்துச் சொன்னார்கள்.

*3:18 பாசிபற்றி மேனியான்*

குழந்தையைப் பற்றிக் கெள்வியுற்ற மதுரகவி நான் அக்குழந்தையைப் பார்க்க வேண்டும்; உங்கள் அரசரிடம் சென்று சொல்லுங்கள் எனக் கூறுகிறார். அரசனின் ஆணைப்படி மந்திரிமார் எதிர் கொண்டு வணங்கி, அவரை அழைத்து, முனிவரே எங்கள் குழந்தை மதலைமொழி பேசினால் 'வையகம் எல்லாம் உமக்கு முதலரசு நல்கும்' (215) முயற்சி செய்து பாருங்கள் என்று கூறுகின்றனர். மதுரகவியாரின் தோற்றத்தைக் கண்ட அம்மக்களில் சிலர்,

*ஊசிநுழையா உரோமச் சடை முடியான்*
*பாசிபற்று மேனியான் பார்க்குந் தொழிலறிய வல்லவனோ*
(கண்ணி-217)

என்று எள்ளி நகைக்கின்றனர். உடைய நங்கையோ,

*அண்டர்-குருவே! எங்கள் ஆவிமைந்தன் பேசினால்*
*யாமுமக்குத் தொண்டுசெய்வோம்....* (கண்ணி-219-220)

என்றுகூற, அனைவரும் கோயிலின்புறமாக நின்றால் குழந்தையைப் பேசவைப்பேன் என்று கூறுகிறார்.

*3:19* முச்சோதியினும் முழுச்சோதி எனல்

பதினாறு ஆண்டுகள் யோகநிலையில் அமர்ந்திருந்த குழந்தை முனியின் திருவுருவைப் பார்த்து மதுரகவியார்,

*இச்சோதி யோஎன் இதையம் உருக்கியது*
*முச்சோதி யினுமுழுச் சோதியென் றிறைஞ்ச* (கண்ணி-223)

எனக் கூறி மகிழ்கிறார்.

அசோகவனத்துள் சீதையைக் கண்ட அனுமன் உள்ளம் மகிழ்ந்து களிப்பதை,

*தேடினேன் கண்டனென் தேவி யேயெனா*
*ஆடினன் பாடினனாண்டு மீண்டும் பாய்ந்து*
*ஓடின னுலாவின னுவகைத் தேனுண்டான்*
(கம்.சுந்தர- 65)

என்று அனுமன் மகிழ்ச்சியைக் கம்பர் காட்டுவதைப் போல, சடகோபனின் யோக நிலையைப் பார்த்த மதுரகவியாரும், ஆடினார், பாடினார், அங்கும் இங்கும் ஓடினார் என்பதை,

*ஆடியாடிப் பாடியங் கோடியிங் கோடி*
*நாடிநாடிப் பார்த்து........* (கண்ணி-224)

என ஆசிரியர் காட்டுகிறார்.

இந்த ஞானியைப் பெற உடையநங்கை என்ன தவம் செய்தாளோ? வானத்தவர் செய்த பேறோ? மானிலத்தில் உள்ளவர்கள் செய்த பேறோ? ஞானம் நிறைந்தவர்கள் செய்த பேறோ? நாவலர்கள் செய்த பேறோ! என்றெல்லாம் பலவாறு கூறி இறுதியில் 'இது என் பேறு ஆகும்' என்று கூறுகிறார்.

இவ்வாறு ஆயிரம்முறையாய்ப் பலவாறு கூறி ஆடிப் பாடினவரைப் 'பித்து பிடித்தவரோ' என்று மக்கள் எண்ணு கின்றனர். மதுரகவிகளோ, பூக்களைப் பறித்து மகிழ்ச்சியால் தன்னைத் தானே பூசித்துக் கொள்கிறார். பின்னர் நம்மை உய்வித்தருள்பவர் இவர்தான் என்பதை உணர்ந்து தெளிகிறார்.

### 3:20 ஞானமுனியை மாலின் அவதாரமாகக் காணல்

மோன நிலையில் அமர்ந்திருக்கும் திருவுருவைக் காணும் மதுரகவி, ஆழ்வாரைத் திருமாலின் அவதாரம் என எண்ணுகிறார், எனவே அப்பெருமானின் முகில்போன்ற கருமையான திருமேனி எங்கே? நான்கு கைகளில் இரண்டு கைகள் எங்கே? கொப்பூழிலுள்ள தாமரையிலிருந்து தோன்றிய பிரம்மன் எங்கே? மார்பில் வாசம் செய்யும் இலட்சுமி எங்கே? என வினவுகிறார்.

*கரியதிரு மேனியெங்கே? கைநான் கிலிரண் டெங்கே?*
*பெரியவுந்தி மலர்பெற்ற பிரம னெங்கே?*
*பாகத்தில் வாழும் பரசுதவித் தோனெங்கே?*
*ஆகத்தில் வாழும் அலர்மெல்மடந் தையெங்கே?*

(கண்ணி-231-232)

ஆசிரியரின் இந்நடை,

*பொருதடக்கை வாளெங்கே? மணிமார் பெங்கே?*
*போர்முகத் தில்எவர் வரினும் புறங்கொடாத*
*பருவயிரத் தோளெங்கே? எங்கே ? என்று* (கலி-பரணி-485)

என்னும் கலிங்கத்துப் பரணிப் பாடல் நடையை ஒத்திருக்கிறது.

*சேமம் குருகையோ! செய்ய திருப்பாற் கடலோ!*
*நாமம் பராங்குசமோ! நாரணமோ? - நாமம்*
*துளவோ? வகுளமோ? தோள்இரண்டோ? நான்கும்*
*உளவோ பெருமானுக்கு'*

என்ற பாடல் ஆழ்வாரை நாராயணனாக நினைக்கச் செய்கிறது.

உலகை வாய்க்குள் அடக்கிய செவ்வாய் இதுதானோ? ஏழு உலகையும் அளந்த பாதம் இதுதானோ? ஆலந்தளிரில் அடங்கிக் கிடந்த வடிவம் இதுதானோ? என்று வினவியவருக்கு, இந்த மோன நிலையைப் பார்த்தால், நன்னெறிகள் அனைத்தும் உணர்ந்தவர் போலத் தோன்றுகிறது. அந்நெறிக்கு எந்தத் தீங்கும் வராதபடி குன்றே! குளிர் புனலே! காப்பாற்றுங்கள் என்று வேண்டுகிறார். தன் தாயைப் பிரிந்த கன்று, தாயைக் காணும்போது துள்ளிக்குதித்து மகிழ்வதைப் போல மகிழ்கிறார், மதுரகவியாரே இதை,

*முன்னந் தாயினை நீங்கிய முலைவிடாக் கன்று*
*பின்னங் காண்குறு வகையெனப் பொய்யொளி பிறக்க*
*மன்னுந் தாருநன் னிழலிடைக் கதிரென வைகும்*
*பொன்னந் தேசினம் மாறனைக் கண்டனன் புனிதன்*

(சட.திவ்ய-52)

எனச் சடகோபன் திவ்ய சரித்திரம் கூறுகிறது. மாறனைக் கண்ட மதுரகவி, அவர் திருமாலின் அவதாரமே என்றுணர்ந்து 'நிலை வணங்கி', மெய் ஒடுக்கி, நீதிநெறியாகத் தலையை வணங்கி, முறை தவறாமல் வழிபட்டார்.

3:21 புத்திரனைப் பேசுவித்த புண்ணியன்

இறையுருவான மாறனை வணங்கிய மதுரகவியார், அவ்வுருவிற்கு உணர்ச்சியுள்ளதா? எனச் சோதிக்க, ஒரு சிறிய கல்லை எடுத்து அருகில் போட அவ்வோசை கேட்ட மாறன் கண்விழித்து மதுரகவியை நோக்கினார். உடனே தன் தலையை வணங்கி, தாழ்ந்து வாய்ப்புதைத்து, ஆடையை ஒதுக்கி, கை ஒடுக்கி, செவியில் ஓர் வசனம் கூறலானார். அது,

*செத்ததின் வயிற்றில் சிறியபொருள் கிடந்தால்*
*எத்தைத்தின் றெங்கே கிடக்குமெனவே கோமான்*
*அத்தத்தின் றங்கே கிடக்கும்* (கண்ணி-238-239)

என்கிறார். அறிவற்ற உடலினுள்ளே, சிறிய உயிர் தோன்றினால், எதை உண்டு எந்த இடத்தில் தங்கியிருக்கும்? என்பது கேள்வி, அந்த உடலோடு கூடிய இன்பதுன்பங்களை அனுபவித்து உயிர்வாழ்கின்ற உடலில் பொருந்தி வாழும் என்பதே அதன் பொருள்.

ஆழ்வார் வாய்திறந்து பேசிய வார்த்தையானது பத்து திசையும் கேட்க, எல்லோரும் மனம் மகிழ்ந்து, 'புத்திரனைப் பேசவைத்த புண்ணியனே' என்று மதுரகவியைப் புகழ்ந்து பொன்னையும் மணிகளையும் மலைபோல் பரிசாகக் குவிக்கின்றனர். குருகூரெங்கும் கொண்டாட்டம்.

*எண்ணெய் மஞ்சனீர் களபமெலச் செழும்பனிநீர்*
*வெண்ணைத் தயிர்பால்நறு நெய்வீதி தோறும் பெருக்கி*
(கண்ணி-242)

12 நாட்கள் கொண்டாடி மகிழ்கிறார்கள். ஆனால் மதுரகவி பரிசுப் பொருட்களை வாங்கவில்லை. காரியாரும் உடைய நங்கையும், 'இன்னும் புத்திரனை நன்றாகப் பேசவைத்து, பாலுண்ணவைத்து, உடையை உடுக்க வைத்து எங்களுக்கு வாழ்வருள்வீர்' என்றுரைக்க, மதுரகவிகளோ, பரமபத நாதன் உங்களுக்குக் குழந்தையாகப் பிறந்தவர்; குழந்தை ஆசையை மாற்ற வந்தவர் அல்லாது உங்களுக்கு குழந்தையாய் இருப்பதற்கு தோன்றினாரல்ல என்று உரைக்கிறார். அதற்குக் காரியாரும் உடையநங்கையும்,

*நம்பி யுரைத்ததுவும் நாங்கள் மறந்துவிட்டோம்*
*எம்பெருமா னீருரைக்க இன்று தெளிந்தோமே*

*(கண்ணி-261)*

என்று கூறி, மகன் என்றும் பாராமல் முந்தை முதல்வன் என்று எண்ணி மூன்று காலங்களும் வலம் செய்து வணங்கினார்கள்.

அவர்கள் மதுரகவியைப் பார்த்து,

*எண்ணிரண் டாண்டும் எறும்பீக் கடியாமல்*
*கண்ணின் மணிபோலக் காத்திருந்தோம்... (கண்ணி-267)*

ஐயா! உமக்கே அடைக்கலமாக இக்குழந்தையைத் தருகிறோம் எனக் காட்டிக் கொடுத்து, நீர் செய்த பாக்கியத்தை இந்தவுலகில் செய்தவர் யார்? எங்களுக்கு உடையவர் (இறைவன்) நீரேயல்லாமல் வேறு யாருமில்லை எனப் புகழ்ந்து போற்றினார்.

மதுரகவியாரும், கோயிலமைத்து மாறனை வழிபடுவோம் என நினைத்துச் செயல்பட்டார்.

*பொற்கோயிலுண் டாக்கி பூசனைசெய் தொண்டருக்கு*
*முற்கோ இவர் களென முத்திநிலை வீடுபெற்றார்*

*(கண்ணி-275)*

என்று மதுரகவிகளின் பெருமைகள் பேசப்படுகின்றன.

### 3:22 ஆழ்வார்கள் பதின்மர் அவதாரம்

தங்கள் மகனை இன்னும் நன்றாகப் பேச வைக்க வேண்டுமென உடையநங்கையும் காரியாரும் கேட்கின்ற பொழுது, மதுரகவியார், அக்குழந்தை உங்களுக்கு மகவாக இருக்கப் பிறக்கவில்லை. பத்து அவதாரமாய் பிறந்தும் உலகமக்கள் திருந்தாத காரணத்தால், அவர்களுக்கு வேதத் தமிழை விரித்துச் சொல்வதற்காகப் பிறந்தான்.

*பத்துருவா யுற்பவித்தும் பாரோ திருந்தாதுத்*
*தத்துவத்தை விட்டதைவ றணைத்தும் சிந்தைசெய்து*
*வேதத்தமிழை விரித்து உரைக்க வேண்டுமென..*

*(கண்ணி-250-251)*

திருமால் தனக்கு உரியதான ஒவ்வொரு பொருள்களையும் ஒவ்வொரு அம்சமாகப் படைத்துள்ளார் என்பதை விவரிக்கிறார்.

| | | |
|---|---|---|
| அரவு (அனந்தனாகிய பாம்பு) | - | புளியமரம் |
| கருடன் (பறவை) | - | மதுரகவி, பெரியாழ்வார் |

பாஞ்சசன்னியம் (சங்கு) - பொய்கையாழ்வார்

தண்டம்(கதாயுதம்) - பூதத்தாழ்வார்

நாந்தகம் (வாள்) - பேயாழ்வார்

பேராழி (ஆணைச்சக்கரம்) - திருமழிசையாழ்வார்

கவுத்துவம் (கௌஸ்துபமணி) - குலசேகராழ்வார்

மாலிகை (வனமாலை) - தொண்டரடிப்பொடியாழ்வார்

மறு (மார்பிலுள்ள மறு) - திருப்பாணாழ்வார்

சார்ங்கவில் - திருமங்கையாழ்வார்

இவ்வாறு தன்னுடைய அம்சங்களை வேதத்தமிழைப் பரப்புவதற்காக அவதாரம் செய்யச் செய்தவர், காரிகுல மாறனையும் வேதத்தைப் பரப்புவதற்காகவே படைத்துள்ளார்.

*தேசத்தவரிற் சிறந்த கற்பயோ கியுமாய்*
*தாசற்குந் தாசன் தனக்குத் தானோயாகி* (கண்ணி-258)

தேசத்திலுள்ளவர்களில் எல்லாம் சிறந்த யோகியாக, அடியவராகிய பெருமாளுக்கும், அடியவராகத் தனக்கு நிகரில்லா தானேயாகி நிற்பவன் மாறன் அவன் உலகை உய்விக்க வந்தவன் என்று மதுரகவி கூறுகிறார்.

3:23 வேதம் தமிழ் செய்த மாறன்

திருப்புளிக்கீழ் கோயில் கொண்ட ஆழ்வாரிடம் திருமால் தன் திருமகளோடு கருடவாகனத்தில் எழுந்தருள, அவரைச் சூழ்ந்து திருமாலின் அவதாரத் தலைவர்கள் தத்தம் திருமகளோடு இலைக் கொருவராக அமர்ந்து 'என்னைப்பாடு என்னைப்பாடு' என்று கேட்க ஆழ்வாரும் திருவாய் மலர்ந்தருளினார்.

உலகப் பற்றையெல்லாம் விடவேண்டும் என்று திருவிருத்தம் 100, மாலின் குணங்களை அனுபவிக்கச் செய்த திருவாசிரியம் 7, அந்த அனுபவத்தால் உண்டாகும் ஆசை எல்லாம் உரைக்கும் அந்தாதி 87, இறைவனை உயிர்களிடத்து வந்து சேர உரைக்கப்பட்ட திருவாய்மொழி 1102, என பாசுரங்களை இயற்றியுள்ளார் ''குருகூரில் தோன்றிய நம்மாழ்வாரும், திருக்கோளூரில் தோன்றிய மதுரகவி யாழ்வாரும் நெல்லை மாவட்டம் தந்த புலவர்கள்''[4] என்கிறார் க.வேங்கடராமன்.

இவ்வாறு, நம்மாழ்வாரின் சிறப்புக்களாலேயே ,

*உண்டோ வைகாசி விசாகத்துக்கு ஒப்பு ஒருநாள்*
*உண்டோ சடகோபர்க்கு ஒப்பு ஒருவர்*
*உண்டோ திருவாய் மொழிக்கு ஒப்பு*
*தென்குருகைக்கு உண்டோ*
*ஒரு பார்த்தன்னில் ஒக்குமூர்* (உப-மாலை-15)

என அவரின் அவதாரம் முதல் இயற்றிய பாக்கள் வரை புகழ்ந்து உரைக்கப்பட்டுள்ளது.

### 3:24 பத்து எனும் பகுப்பு

சங்க காலத்தில் ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து போன்ற இலக்கியங்களைப் பத்துப் பாடல்கள் கொண்ட ஒரு தொகுப்பாக அமைத்து, 'பத்து' என்று குறித்தனர். ஆனால் நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் நூறு பாடல்களைக் கொண்ட தொகுப்பினைப் பத்து எனக் குறிக்கின்றனர். ''செய்யுள் பாசுரம் எனப்படும் 10 அல்லது 11 செய்யுள் கொண்ட ஒரு பதிகம், திருமொழி அல்லது திருவாய்மொழி எனப்படும். இத்தகைய பத்துப்பதிகங்கள் சேர்ந்த நூறு பாடல்களாலான சதகம் ஒரு 'பத்து' எனப்படும்.''

### 3:25 திருவாய்மொழி பகுப்பு

நூறு பாடல்கள் அடங்கிய பாசுரங்கள் ஒரு பத்து என்று கொள்ளப்படுகிறது. அவ்வடிப்படையில், ஒவ்வொரு பத்தும் பிரிக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| 1, 2-ம் பத்து | - | அருள்மாயனின் இறைத்தன்மை |
| 3, 4-ம் பத்து | - | உயிரின் நிலை |
| 5, 6-ம் பத்து | - | உயிர் இறைவனை அடையும் நிலை |
| 7, 8-ம் பத்து | - | இறைவனை அடைவதற்கான தடை |
| 9, 10-ம் பத்து | - | இறைவனை அடைவதாலாகும் பலன் |

இதனை அர்த்த பஞ்சகம் என்கின்றனர் வைணவர்கள்.

| | | |
|---|---|---|
| 1-ஆம் பத்து | - | கண்ணனே காவல் கடவுள் எனல் |
| 2-ஆம் பத்து | - | மாலே இனியவன் |
| 3-ஆம் பத்து | - | உயிர்கள் பெருமாளை அனுபவிக்கும் |
| 4-ஆம் பத்து | - | திருமாலுக்குப் பிரியமாக உடையது உயிர் |

| | | |
|---|---|---|
| 5-ஆம் பத்து | - | இறைவனை அடையும்வழி இறைவனே |
| 6-ஆம் பத்து | - | இறைவனை அடையும் வழியைத் (உபாயம்) தெளிவாகச் சொல்லுதல். |
| 7-ஆம் பத்து | - | இறைவனை அடைவதற்கு உண்டான தடைகள் |
| 8-ஆம் பத்து | - | அந்தத் தடைகளை நீங்கிவிடும் |
| 9-ஆம் பத்து | - | முத்தியும், இறைவனையடையும் பலமும் சொல்லுதல் |
| 10-ஆம் பத்து | - | ஆசையை ஒழித்து வீடுபேறு அடைதல். |

நாமுமக்குத் தஞ்சம்

தேன் ஒழுகும் வகுளமாலையை அணிந்த மாறன் அருளிச் செய்த பாசுரங்களையெல்லாம் பட்டோலை கொண்டதெல்லாம் இந்த உலகத்தில் நிலைபெற்றபின், சங்குச் சக்கரத்தை ஏந்திய நம்மாழ்வார் வைகுந்த வீட்டிலிருந்து திரும்பி எழுந்தருளியவுடன் முப்பத்து முக்கோடி தேவர்களும் முனிவர்களும் வணங்க, எதிர் தோன்றினார்.

*திருவாணை யிட்டுன்திரு வாணை கண்டாய்*
*திருவாய் பரமபதந் தந்தொழியப் போகேலோ*

*(கண்ணி-305)*

எனத் தடுத்து, உன்மேல் ஆணை, எனக்கு உன் பரமபதத்தைத் (வைகுந்தவீடுபேறு) தராமல் போகக்கூடாது என்று மதுரகவி தடுத்து நிற்கிறார்.

''இன்னும் பிறந்து இறந்தால் ஈடேற்றம் உண்டாகுமோ? உன் அன்பர்களுக்கு உதவும்படியாகப் பொய்கையாழ்வார் முதலானவர் பாடிய பாக்களையும், நீர் அருளிச் செய்த (கண்ணிநுன் சிறுதாம்பு) பாடல்களையும் பண்பினுடன் உபதேசம் செய்யும், செய்தால் நாடு மடியாது'' என்று மதுரகவிக்கு அருளுகிறார் ஆழ்வார்.

**3:26 நாய் எனும் உருவகம்**

இறைபக்தி அளவு கடக்கும்போது, அடியவர்கள் தம்மையேத் தாழ்த்தி, நாயாகத் தன்னை உருவகப் படுத்துதல் என்பது பக்தி இலக்கியத்திற்கே உரியத் தனிச் சிறப்பாக அமைந்துள்ளது. இதற்கு சைவ இலக்கியங்களும் விதி விலக்கல்ல.

*நாயேனைத் தன்னடிகள் பாலுற்பவித்த நாயகனை*
*பேயேனது உள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனை*
(திருவா.11)

என மாணிக்கவாசகர் சிவபெருமானிடம் வேண்டுகிறார் - மதுரகவியும்,

*.................... காரிமா றாவெனையுங்*
*கொண்டகன் றால்நாயென் குறை முடியும்...*
(கண்ணி-310)

என்கிறார்.

காரிமாறன், மதுரகவியை நோக்கி உனக்கு வீடுபேறு கொடுத்துவிட்டால் இவ்வுலகிலுள்ளோர்க்கு 'செய்யமறத் தமிழை நீயல்லாமல் வேறுயார் எடுத்து உரைப்பார் என்று கேட்கிறார், மதுரகவியோ, இவ்வுலகில் என்னால் 'இருக்க முடியாது' என்கிறார்.

ஏங்கி வருந்தும் மதுரகவியைப் பார்த்து,

*இத்தலத்தில் வாழ்ந்தருளும் இன்றுமுதல் உம்முடனே*
*நித்தியமா கப்பொலிந்து நிற்போம் என....* (கண்ணி-315)

எனக் கூறினார்.

அது கேட்டு மதுரகவி மனம் தடுமாறாமல், முகம் மலர்ந்து 'நாம் உமக்குத் தஞ்சம் எனக்கும் நீயே இவ்வுலகில் முதல்வன்' என்று உறுதிகூறி அருளினார்.

## வைகுந்தப் பொற்பதி ஏகுதல்

அர்ச்சை வடிவில் நித்தியமாகப் பொலிந்து நிற்பேன் என்ற ஆழ்வாரின் வார்த்தையைக் கேட்டு, முன்பு கங்கையில் நீராடிய போது சுடரொளியாய்க் கண்டதைவிடவும், அதன்பின் நேரில் கண்டு பதினாறு தடவை வணங்கியதை விடவும் பேராசை மிகுந்தவரானார்.

*........................பேராயிர முடைய*
*நாராயண னில்நமக் கிவனே தெய்வமென* (கண்ணி-320)

திருமாலைவிட ஆழ்வாரே நமக்கு இனி தெய்வம் என்ற எண்ணம் கொண்டவராய் மஞ்சள் நீராட்டி, மலரால் பூசை செய்து கொண்டாடுகிறார்.

நாலுக்கவிப் புலவோர் பாடிய பத்துப்பாட்டும் முன்னாழ்வார்கள் நால்வர் பாடிய திருவாய்மொழியும் பின்னாழ்வார்கள் ஐவர் பாடிய திருவாய்மொழியும் உலகிலுள்ளோர்க்கும் ஓதி 240 ஆண்டுகள் வாழ்ந்து உடலோடு வைகுந்த பொற்பதம் ஏகினார் மதுரகவியார்.

நம்மாழ்வார், மதுரகவியாழ்வார் இருவருமே வைகுந்தம் அடைந்ததால் மறைத்தமிழ் அங்கு நிலை பெற்றுவிட்டது. மண்ணிலுள்ளோர் மறந்துவிட்டனர். எண்ணி நினைக்கமாட்டார். நினைத்தால் நாம் இறப்போம் என்று நம்மாழ்வார் கூறியபடி நாலாயிரமும் இறந்தது. ''நம்மாழ்வார் பாட்டில் பயின்றவர் வீடுபேறெய்துவர் என்றிருந்ததனாலும், இறக்கத் துணிந்தவர்களும் படித்து வரலாயினர். அதனால் ஆட்கொல்லிப் பாட்டை அழிக்க முயன்றனர்''[10] இதன் காரணமாகவே நாலாயிரப் பாடல்களும் மறைந்து போயின.

## நாலுகவி புலவர்

நம்மாழ்வாரை 'நாற்கவிப் புலவர்' என்று அழைக்கின்றனர். மதுரகவியார், திருவாய்மொழியைப் பட்டோலை கொள்ளும் போது, நம்மாழ்வார் அப்பிரபந் தங்களைத் தங்கு தடையின்றி அருளியது 'ஆசுகவி' எனலாம். ஆதி முதல் அந்தம் வரையிலும் செஞ்சொல்லாய் தெளிந்த அமுதுபோல பாக்கள் காணப்பட்டதால் 'மதுரகவி' எனலாம். சொல்லணியின் இலக்கண வகையால் பிரணவ மந்திரத்தின் எழுத்துக்கள் திருவாய்மொழியில் அமையும்படி பாடியது 'சித்திரகவி' எனலாம். இறைவனின் குணம் ஒன்றையேக் குறிக்கோளாகக் கொண்டு ஆயிரம் பாசுரங்களுக்கு மேல் பாடியுள்ளது 'வித்தாரகவி' எனலாம். இக் காரணங்களாலேயே,

*நாவுக் கமுதூறு நாலுகவிப் புலவோர்*
*பாவுக் கணியாம் பாடிய புதுப்பாட்டும்* (கண்ணி-322)

என நம்மாழ்வார், நாலுகவிப் புலவர் எனப் புகழப்படுகிறார் எனலாம்.

## 3:28 ஞானியர்கள் தீபம்

பேரறிஞர்களுக்கும் விளக்காகவும், நாத இசையை மேகமாகப் பொழியவும், அழகிய காவிரியாற்றின் கரையில், பொன்மதில்கள் சூழ்ந்த வீரநாராயணபுரம் என்ற ஊரில் ஈச்வர முனிகள் என்ற பெரியவருக்கு, ஆனிமாதம் அனுட(ஷ)

நட்சத்திரத்தில் ஒரு மகவு பிறந்தது. அக்குழந்தைக்கு 'ரெங்கநாதன்' எனப் பெயரிட்டனர். ஏழிசைகளையும் நற்கலைகளையும் பயின்று இசையுணர்வில் ஈடுபட்டதால் அவருக்கு 'நாதமுனி' என்று பாராட்டுப் பட்டம் வழங்கினர்.

*அதிகமுனி நாதமுனி யாகிநெடு மாமால்*
*பதிகடோ றுஞ்சென்று பணிந்து தொழுமன்னாளில்*

*(கண்ணி-334)*

சில வைஷ்ணவர்கள் 'ஆராவமுதே' எனத் தொடங்கும் திருவாய்மொழியின் பதினொரு பாசுரங்களையும் பாட,

*ஆராவமு துஉவந்த ஆரா வமுதுபத்தும்*
*ஓராயிரத் துக்குரை மோரிது என்றுணர்ந்து* *(கண்ணி-335)*

என 'குருகூர் சடகோபன் குழலின் மலியச் சொன்ன ஓராயித்துள் இப்பத்தும்' என்று அவ்வைணவர்கள் ஓதியதைக் கேட்டு, ஓராயிரத்துக்கும் உரைமோர் போன்றது இப்பத்து என்றுணர்ந்து, குருகூரன் எழுந்தருளியிருக்கும் குருகூருக்குச் சென்று விசாரித்தார். திருமால் தொண்டர் ஒருவரால் மதுர கவியார் அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' மட்டும் இருப்ப தாகக் கூற அதனைப் பெற்று,

*நன்னீர்த் திருப்புளிக்கீழ் நாற்பது நாளிருந்து*
*பன்னீரா யிரமுருவாய் பத்தியுடன் உச்சரிக்க*

*(கண்ணி-339)*

மாறனும் எதிரில் தோன்றி தம்மையே தொடர்ந்து துதித்துக் கொண்டிருக்கும் காரணம் கேட்டார்.

*மதுரத் தமிழாலே மண்டல மளந்தவனே*
*மதுரகவி யாழ்வாருக்கு மாகுருவே நின்னபயம்;*
*......................................*
*வைஷ்ணவர்கள் மாநிதியே வந்தருள்வாய் நின்னபயம்;*
*வைகாசி மாதத்தில் வந்துதித்த சுந்தரனே*
*விசாக நாளுடைய வித்தகனே நின்னபயம்*
*எண்ணித் துதிப்பதெல்லாம் எதற்கென்று கேட்பாயேல்*
*விண்ணப்பம் ஒன்றுண்டு கேட்டருளாய்''*

என்றுப் புகழ்ந்து, வேதக்குலத் தமிழ் ஓராயிரமும், ஒன்பது ஆழ்வார்கள் உரைத்த மூவாயிரமும் எனக்குச் சொல்லும் என்று வேண்டினார்.

*3:29* ஆழ்வார் நாலாயிரமும் உரைத்தல்

*நாமுனக் கெதிரி னின்று நவிலுத லாற்மன் றர்ச்சை*
*தூமலர் வாய்திறந்து சொல்லவந் திரையி னப்பால்*
*நீமனங் களிப்பக் கேட்டு வரைந்திடு நிமல வென்றான்*

(சட-திவ்ய-92)

இவ்வாறு திரைமறைவிலிருந்து நாலாயிரம் பாடல்களையும் உபதேசித்து, முத்திரைக்கையையுடைய மோனமுனி நாதமுனியை ஆட்கொண்டருளி இப்பாடல் முழுவதையும்.

*இத்தாரணி யோரினி யுரைக்க நேசித்தால்*
*தாமுள்ள நாளெல்லாந் தத்துவஞானம் சிறந்து*
*பூமுதல்வன் தீட்டும் பொறிபழுது வாராமல்*
*நல்வாரதை நல்குமென .............* (கண்ணி-345-347)

என்று மகிழ்ந்து வரங்கொடுக்க, பூரித்துப் பட்டோலை கொண்ட நாதமுனி நாலாயிர பிரபந்தங்களையும் தொகுத்தளித்து வாழ்ந்தார்.

*மாறன் எம்கோன் அருளால், சமயம் எல்லாம்*
*பரன் உண்டு என்ற அறிவுற்றது என்றும்*
*குருகூர் நிமலன் புனையும் தமிழ்க் கவியால், இருள் நீங்கிப்*
*பொருள் விளங்கி, வினை திரிவுற்றன, குற்றம் நீங்கின*
*வேதங்களே''*[12]

என்று பாராட்டுகிறார் கவிசக்ரவர்த்தி கம்பன்.

இவ்வாறு ''பக்தருக்கு அமுதமாய், மக்கள் அனைவரும் விரும்பி ஏற்பதாய், சகல அர்த்தங்களையும் அளிப்பதாய், ஆயிரமாகப் பணைத்த உபநிடதங்களோடு கூடியதாய் ஸ்ரீ சடகோபரது வாக்குகளாலான தமிழ் வேத சாரத்தை நான் வணங்குகிறேன்''[13] என நாதமுனிகள் கூறுகின்றார் என, நாலாயிரத் தமிழ் மறையின் சிறப்பு இங்குச்சுட்டப்படுகிறது. மட்டுமல்லாமல் ஆழ்வார் தாலாட்டின் முற்பகுதி நெஞ்சை உருக்கும் தாய்மை உணர்வின் வெளிப்பாடுகளையும் பெற்றோர் இருவரின் மனக்கொதிப்பையும் பிற்பகுதி எல்லாம் இறைவனே 'அவனன்றி ஒரணுவும் அசையாது' என்ற கொள்கையை வலியுறுத்தி வீடுபேற்றின் தன்மையை விளக்கி நிற்பது இத்தாலாட்டில் அமைந்த புதியதொரு உத்தி எனலாம்.

*3:30* குருகூர் வரலாற்றுச் செய்திகள்

வரலாற்றுச் செய்திகள் என்பன ஒருநாட்டின் சிறப்புக் கூறுகளை அறிந்து கொள்வதற்குத் துணையாக நிற்பன ஆகும்.

அச்செய்திகளில் சில அறிந்தவையாக இருக்கலாம். சில புதியனவாக அதிசயிக்கச் செய்யலாம். இவ்வகையில் நம்மாழ்வார் தாலாட்டில் சில வரலாற்றுச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

வேடனும், யானையும் போற்றும் குருகை
.....................வில் வேடனுங் கொடிய
குஞ்சரமும் போற்றுங் குருகைப் பெருமானோ''!

(கண்-97)

என்று தாலாட்டு அமைந்துள்ளது.

முனிவர்கள் பலர் தலயாத்திரைச் செல்ல விரும்பி தாமிரபரணி நதிக்கரையில் அமைந்த ஆதிநாதரை வணங்கி ஒய்வு எடுக்கும் பொழுது அவர்களுக்கு முன்பாக ஒரு மதயானையும், வேடன் ஒருவனும் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். வேடன் கத்தியாலும், யானை துதிக்கையாலும் தாக்கவே, இறுதியில் இருவருமே மாண்டனர். ஆதிசேத்திரமாகிய குருகூரில் இருவரும் மாண்டதால் விஷ்ணு தூதுவர்கள் இறந்த இருவரையும், அழகிய விமானத்தில் ஏற்றி வைகுந்தத்திற்கு அழைத்துச் சென்று விட்டார்கள்.

இதனிடையில் மகாபாவிகளான யானையையும், வேடனையும், நரகத்திற்குக் கொண்டு சென்று தண்டிக்க வந்த எமதூதுர்கள், விஷ்ணுவின் தூதர்களை எதிர்க்க சக்தியில்லாமல் தங்களது எண்ணம் ஈடேறாத வருத்தத்தில் சுவர்க்கத் தூதர்களும், எமதூதுர்களும் தத்தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தனர்.

இதனை நேரில் கண்ட முனிவர்கள் மகாபாவிகளான வேடனுக்கும், யானைக்கும் இந்த சேத்திரத்தில் முக்தி கிடைத்த ஆச்சரியத்தைப் பிறரிடம் கூறலாயினர்.

## சங்கமுனிக்கு அருள்கிடைத்த வரலாறு

*நாடிவலஞ் சூழ்ந்தசங்க ராசனாம் சங்கமுனி*
*கோடிவலஞ் சூழுங் குருகைப் பெருமானோ*

(கண்ணி-98)

முன்பு ஒரு காலத்தில் ஜம்பு நதிக்கரையில் சங்கன் என்னும் பெயர் கொண்ட முனிவன் ஒருவன் இந்திரபதிவி வேண்டிக் கடுந்தவம் மேற்கொண்டான். பூர்வ ஜென்மத்தில் கிராதன் என்னும் பெயர் கொண்ட சங்கமுனி மகாபாவியாக இருந்தவன். ஒருசமயம் விஷ்ணு பக்தனான தாந்தன், படுத்துத் தூங்கிய ஆலமரத்தடியில் கிராதன் படுத்ததால் ஏற்பட்ட புண்ணியம் கிராதனை இப்பிறவியில்

பிராமண யோகிக் குலத்தில் பிறக்கச் செய்துள்ளது. அவன் உக்கிர தவம் புரிந்த போதிலும், நாராயணனைப் பிற தெய்வங்களோடு சமமாக நினைத்த காரணத்தினால் ஏற்பட்ட பாவமானது விஷ்ணு பக்தன் கால்பட்ட இடத்தில் படுத்ததால் நீங்கிவிட்டது.

இதனால் வைகுந்த பதவி பறி போய்விடுமோ என்று அஞ்சி இந்திரன் நாரதரிடம் சொல்ல, நாரதர் கடுஞ்சினம் கொண்டு, ''நீ உவர்க்கடலிலே சங்காகப் பிறப்பாய்'' என்று கூறினார். சங்கன் அறியாது இயற்றிய பிழைபொறுத்தருள் புரியுமாறு வேண்ட, நாரதரும் ''நீ சங்காகப் பிறந்தாலும், தெற்கே தண்பொருநல் கடலில் கலக்குமிடத்திலொரு காத வழியிலுள்ள குருகூரிலேறி ஆதிநாதன் வேதியை ஆயிரம் ஆண்டுகள் சூழவந்து, அவரருள் வாய்க்கப் பெற்று வாழ்வாயாக என்றருள் புரிந்தார்.

சங்கவரசன் தன் இனங்களுடன் குருகா சேத்திரமடைந்து வழக்கமாக வலம் சூழும் போது ஒரு திமிங்கலம் சங்குகள் வராதபடி முகத்துவாரத்தை மறித்துக் கிடக்க 'சங்கங்கள்' திருமாலை எண்ணி வருந்தின. நாராயணன் அருளால் திமிங்கலமே அத்திமிங்கலத்தை விழுங்க, சங்குகள் வழக்கம் போல் தம் வழிபாட்டைத் தொடர்ந்தன.

சித்திரை உத்தர நாளில் வழக்கம் போல் சங்கவரசன் தன் இனத்துடன் ஆயிரம்முறை வலம் வந்து நிற்க, எண்திசைக் காவலர்களும், சிவனும், நான்முகனும், யாழிசையாரும், தெய்வப் பெண்டிரும், அரம்பையர் ஆடல் புரிய, மண்மகள், ஆய்மகளோடும் சேனைத் தலைவரோடும் திருமால் சங்கனுக்குக் காட்சி கொடுத்து சங்கனுக்குத் தன் இனத்துடன் வீடுபேறு அருளினார். சங்கன் ஏறிவந்த அத்துறைக்கு 'சங்கனித் துறை' என்ற பெயரிட்டார்.

கருவூர்ச் சித்தரும் நாயும்

*கருவூரன் ஞானியர்கள் காசினியில் வைகுந்தம்*
*குருகூறென் றோதுங் குருகைப் பெருமானோ*

(கண்ணி-99)

தாமிரபரணியின் வடகரையிலுள்ள காந்தீஸ்வரத்தில் கரூர்ச் சித்தரென்னும் ஓர் முனிவர் வாழ்ந்து வந்தார். அவரிடம் ஓர் நாய் இருந்தது. அது நாள்தோறும் திருக்குருகூர் தெருவிலுள்ள எச்சிலை உண்டு வந்தது. ஒருநாள் குருகூரி லிருந்து நாய் நதியைக் கடக்கும்போது வெள்ளத்தில் நீர்ச்சுழியில் அகப்பட்டு மாண்டது. அதன் உயிர் ஒளிபெற்று விண்ணுல கெய்தியது. அதைக் கண்ட சித்தர்.

*வாய்க்குங் குருகைத் திருவீதி யெச்சிலைவாரியுண்ட*
*நாய்க்கும் பரமபத மளித்தாயந்த நாயோடிந்தப்*
*பேய்க்கும் பரமபதமளித்தாற் பழுதோ? பெருமான் மகுடம்*
*சாய்க்கும் படிக்குக்கவி சொல்லும் ஞானத் தமிழ்கடலே!''*

என்று பாடி அருள் பெற்றார் என்பர்.

ஆழ்வார் திருநகரிக் கோயில் சிறு தூணில் சித்தர் தன் நாயுடன் இருப்பது போலச் சிற்பம் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது.

*........................பொருனையி லக்கரை*
*நாடி யேகப் பெருவெள்ளத் தாலே*
*விண்பு குதவி றந்த ஞமலியை*
*விமானத் தேகொண்டு விண்ணவ ரேகக்*
*கண்க ளித்த கருவூரத் தேவனும்*
*கைதொழுதநன் னாடெங்கள் நாடே*

(திரு-பவ-குறம்-42)

எனக் கருவூர் சித்தர் பற்றிய வரலாற்றைப் பவனிக்குறம் கூறுகிறது.

திருப்புளி வரலாறு

இராமன் வைகுண்டத்திற்கு போவதற்கு மூன்று தினங்களுக்கு முன் யமதர்ம ராஜா இராமனைக் காணவரவே, இராமன் தன் தம்பி இலக்குவணனிடம் யாரையும் உள்ளே விடாதே! என்று கூறி, உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது கோபம் படைத்த துர்வாச முனிவர் அங்கு வரவே, பயந்து அவரை உள்ளே விட்டான் இலக்குவணன். இராமனும் அவரை நன்று உபசரித்து அனுப்பிவிட்டு வெளியில் வந்தவர், கோபமடைந்து, தம்பியை நோக்கி, 'என் முன் அசையாமல் நிற்கும் நீ ஓர் அசையாப் பொருளாகக் கடவாய்'' என்று சபித்தார்.

அதுகேட்ட இலக்குவன், பதைத்து இராமனின் பாதங்களில் விழுந்து தன் பிழையைப் பொருத்தருளும்படி வேண்டினார். அதற்கு இராமன் என் சாபம் பலித்தே தீரும். நீ நிச்சயமாக ஓர் அசையாப் பொருளாக மாறிவிடுவாய். இந்த அவதாரத்தில் நான் நிரபராதியும் கர்ப்பிணியுமான சீதையைக் காட்டிற்கு அனுப்பினேன். அந்த வினை என்னை விடாது. அதற்காக நான் அசையாப் பொருளாயிருக்கும் உன் அருகில் ஓர் பிரம்மசாரியாக ஐம்புலன்களையும் வென்று ஞானமுத்திரை தரித்து 'சடகோபன்' என்ற நாமம் பூண்டு வாசம் செய்யப் போகிறேன். அங்கிருந்து நீ

புறப்பட்டுச் சென்று பொருநை யாற்றின் தென்கரையில் உள்ள வராக சேத்திரத்தை அடைந்து அங்கு ஓர் புளியமரமாக மாறப் போகிறாய் என்றார்.

இவ்வாறு இராமன் கூறிவிட்டு அவர் கையில் தமது கணையாழியைக் கொடுத்து மீண்டும் அவரை நோக்கி, இந்தக் கணையாழி உன் கையைவிட்டு நழுவும் இடத்தில் நீ ஓர் புளியமரமாக மாறுவாய் என்றார். அக்கணையாழி தாமிர பரணியின் தென்கரையிலுள்ள ஆதிநாதப் பெருமாளின் வட பக்கம் விழவே, அவ்விடத்தில் நீராடிப் புனிதப் புளியமரமாக மாறிவிட்டார் என்பது 'புனிதப்புளி' பற்றிய வரலாறாகும்.

## மேற்கோள் விளக்கப்பட்டியல்

1. கு. முத்துராசன், இடைக்கால இலக்கியங்கள், ஒரு திறனாய்வு, ப. 264.
2. ம.பெ. சீனிவாசன், திவ்விய பிரபந்த இலக்கிய வகைகள், ப.157.
3. ச.வே.சுப்பிரமணியம், இலக்கிய வகையும் வடிவும், பக்.393.
4. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும், பக்.233.
5. ம.பெ.சீனிவாசன், மு.சு.நூ., பக்.135.
6. மேலது பக். 87
7. மணிவிழா மலர், பக்.127
8. சு.வேங்கடராமன், தமிழ் வளர்த்த வைணவம், பக்.124
9. ம.பெ.சீனிவாசன், மு.சு.நூ., பக்.77
10. ஸ்ரீஆதிநாதர் ஆழ்வார் திருக்கோயில் வரலாறு, பக்.14
11. வகுளாபரண சடகோபர், மலர், பக்.118
12. மணிவிழா மலர், பக்.126.
13. பன்னிரு ஆழ்வார்களும் அவர்கள் அருளிய பிரபந்தங்களும், 193, பக்.37.
14. வகுளாபரண சடகோபர், மலர், பக்.12.

# 4. அணியியல்

*4. அணியியல்*

ஒரு கருத்தைக் கடமைக்காக ஏனோ தானோ என்று சொல்லாமல் அழகாகச் சொல்லும் போது கவிதை பிறக்கிறது. அங்ஙனம் கவிஞனின் கற்பனைக் குவியலில் பிறப்பனவைதான் ஏற்றமிகு அணிகள். அணி என்பது சொல்லுக்கு இனிமை யினையும் கருத்துக்கு நயத்தினையும் தந்து கவிதையை அழகுறச் செய்வதாகும். அணி, அலங்காரம் செய்யப்பயன்படுவது. பெண்களின் அழகுக்குப் பொன்நகையும் சிறப்புச் செய்வது போல ஒன்றோ பலவோ சேர்ந்து அணிகள் கவிதைக்குச் சிறப்புச் செய்கின்றன.

*பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போல் பல*
*சொல்லால் பொருட் கிடனாக உணர்வினின்*
*வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்* (நன்.சூ.26)

என்று செய்யுளுக்கு அழகு தந்து நிற்பதே அணி என்கிறார் நன்னூலார்.

## 4.1 தமிழில் அணி இலக்கணம்

தமிழ் இலக்கியங்களில் அணி பொருள் சுவைக் காகவும், கருத்துச் செறிவிற்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழில் தண்டியலங்காரம், வீரசோழியம், மாறனலங்காரம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், குவலயானந்தம், சந்திராலோகம், முத்துவீரியம் எனப் பல நூல்கள் உள்ளன.

தண்டியலங்காரம் வடமொழி நூலான காவியாதர்சத்தை அடிப்படையாகக் கொண்டு தண்டியாரால் செய்யப்பட்டது. 35 பொருளணிகளைக் கொண்ட இந்நூலின் காலம் 12-ம் நூற்றாண்டாகும்.

வீரசோழியம், புத்தமித்திரர் என்ற பௌத்த அரசரால் செய்யப்பட்டது. 35 பொருளணிகளைக் கூறும் இதன் காலம் 11-ஆம் நூற்றாண்டு ஆகும்.

மாறனலங்காரம், திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் செய்யப்பட்டது. 64 பொருளணிகளைக் கூறும் இதன் காலம் 16-ம் நூற்றாண்டு ஆகும்.

மாறனலங்காரம் இந்த ஆய்வு நூலின் பாட்டுடைத் தலைவனின் பெயரால் அமைந்துள்ளமையே சிறப்புடைய தாகும்.

இலக்கண விளக்கம், வைத்தியநாததேசிகரால் தொகுக்கப் பட்டுள்ளது. 35 பொருளணிகளைக் கூறும் இதன் காலம் 17-ம் நூற்றாண்டு ஆகும்.

தொன்னூல் விளக்கம், இது வீரமாமுனிவரால் செய்யப்பட்டு, 30 பொருளணிகளைக் கூறும் இதன் காலம் 17-நூற்றாண்டு ஆகும்.

குவலயானந்தம், வடமொழியில் அப்பைய தீட்சிதரால் செய்யப்பட்டு தமிழில், மீனாட்சி சுந்தர கவிராயரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. 124 பொருளணிகளைக் கூறும் இதன் காலம் 19-ம் நூற்றாண்டு ஆகும்.

சந்திரலோகம், வடமொழியில் ஐயதேவரால் செய்யப் பட்டது. தமிழில், முத்துசாமி அய்யங்காரால் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. 100 பொருளணிகளைக் கூறும் இதன் காலம் 19-ம் நூற்றாண்டு ஆகும்.

முத்துவீரியம், முத்துவீரிய உபாத்தியாயரால் செய்யப் பட்டது. 56 பொருளணிகளைக் கொண்டுள்ளது.

### தொல்காப்பியம்

பழம்பெரும் நூலான தொல்காப்பியத்திலேயே அணி இலக்கணம் காணப்படுகிறது. தொல்காப்பியரின் உவமையிலே அணியின் தோற்றுவாயாகும். பொருளை விளக்குவதற்காகப் பயன்படுத்தப்பட்ட உவமை பிற்காலத்தில் அணி இலக்கணம் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது என்று இலக்கண ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

### உவமையின் பாகுபாடு

மனிதனிடம், காண்கின்ற எல்லாப் பொருட்களையும் ஒப்பிட்டுப் பார்க்கின்ற பண்பு இயற்கையாகவே அமைந்துள்ளது. மனிதனுக்கு 'எண்ணம்' என்ற ஒன்று எப்போது தோன்றியதோ அப்போதே ஒப்பிட்டுப் பார்க்கும் பண்பும் தோன்றியது என்பது மாறாத உண்மை. காணாத பொருளை விளக்கிக்காட்டவே உவமை பயன்படுகிறது.

உவமை என்ற சொல்லுக்கு ஒப்பு, ஒப்புமை உவமம், உவமலங்காரம், இரண்டு பொருள்களுக்கு ஒப்புமை விளங்கச் சொல்லுதல் என்று பல பொருள்களையும் தருகின்றன அகராதிகள்.

*வினைபயன் மெய்உரு என்ற நான்கே*
*வகைபெற வந்த உவமத் தோற்றமே*

*(தொல்.பொரு.உவம.1)*

என்று தொல்காப்பியம் உவமையை வகைப்படுத்துகிறது.

*சிறப்பே நலனே காதல் வலியொடு*
*அந்நாற் பண்பும் நிலைக்களன் என்ப*

*(தொல்.பொரு. உவம.4)*

என்று தொல்காப்பியம் உவமையின் நிலைக்களன்கள் நான்கு என்கிறது.

கருத்துக்களுக்கேற்ற எடுத்துக்காட்டுகளைக் கூறி விளக்கி மக்கள் மனதில் பதியத் துணைபுரியும் இவ்வுவமை ஆய்வுப் பகுதியில் தண்டியலங்காரத்தை அடியொற்றி ஆய்வு செய்யப்படுகிறது.

### 4.2 தன்மையணி

*எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்கும்*
*சொன்முறை தொடுப்பது தன்மையாகும்* *(தண்டி.29)*

எவ்வகைப்பட்ட பொருளும் மெய்வகைக் கூறு பாட்டால் விளக்கும் சொல்முறையில் பாடப்படுவது தன்மை என்னும் அலங்காரமாகும்.

*அதுவே*
*பொருள் குணஞ் சாதி தொழிலொடு புலனாம்*

என நான்கு நிலைகளில் வரும். ஆய்வுப்பகுதியில் பொருள் தன்மை இடம்பெறுகிறது.

*ஊசிநுழையா வுரோமச் சடை முடியான்*
*பாசிபற்று மேனியான்* *(கண்ணி-217)*

வடதிசை சென்று கங்கை நதியில் நீராடி, பஞ்சாக்கினி நடுவேப்பழகி திருமால் பதிகள் தோறும் சென்று வணங்கிய மதுரகவி, தென்திசையில் தோன்றிய ஒளியைக் கண்டு நம்மாழ்வார் இருப்பிடத்தை அடைகிறார்.

அவரது தோற்றம், மேனியெங்கும் பாசிபிடித்து ஊசி கூட நுழைய முடியாத அளவுக்குச் சடைமுடியை உடையவராகக் காணப்படுகிறது என்று அவரின் தன்மை விளக்கப்படுகிறது.

பொருள் தன்மை

*நீலமலைபோற் பொலிந்து நின்றபெருமான் திருமுன்*
*கோலமலைபோற் பொலிந்த கோதிலாப் பாலகனை*
*(கண்ணி-148)*

பொருளிடத்திலுள்ள பலவிதமான இயல்புகளை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவது பொருள் தன்மையாகும்.

நீலநிற மலை போல அழகுபெற்று நின்ற திருமால் முன் அழகான மலைபோல் விளங்கிய களங்கமில்லா பாலகனைக் கண்டு தாய்முகம் குளிர்ந்தது என்று திருமாலின் நீலவண்ணத்தை உள்ளபடியே காட்டியிருப்பதால் இது பொருள் தன்மையாகும்.

4.3 உவமையணி

*பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்*
*ஒன்றும் பலவும் பொருளோடு பொருள்புணர்ந்*
*தொப்புமை தோன்றச் செப்புவதுமை* *(தண்டி-டு1)*

பண்பு, தொழில், பயன் என்பனவற்றின் அடிப்படையில் ஒருபொருளோடு ஒருபொருள், ஒரு பொருளோடு பலபொருள் பல பொருளோடு ஒருபொருள், பலபொருளோடு பல பொருள் என ஒப்புமைப்படுத்திச் சொல்வது உவமை யாகும்.

ஆய்வுப்பகுதியில் மொத்தம் 12 உவமைகள் இடம் பெற்றுள்ளன. அவை அனைத்தும் பண்பு, தொழில், பயன் அடிப்படையில் அமைந்துள்ளவை.



## பண்புவமை

பண்புவமை என்பது அவற்றின் குணமாய்த் தோன்றி தமக்கு வேறுகுணமின்றி நிகழும்.

*(எ.கா)*

*சூழவிதா னத்தினுட் சோதிஇள வொளிபோல்*
*வாழப் பரிவாய் மலர்க்கண் வளரவிட்டு* (கண்ணி-73)

மலர்போன்ற கண்களை உடைய குழந்தை சோதியின் இளவொளிபோல் காணப்பட அன்பாய் உறங்க வைத்தார்கள் என்றும் குழந்தையைத் தொட்டிலில் கிடத்தியபோது இளவொளி போல் காணப்பட்டது என்றும் உவமைக் காட்டியுள்ளனர்.

*தண்சுடரோ னென்னவண்ண தந்த சிவிகையின் மேல்*
*வெண்சுடரோ னென்னவெழுந் தருளப் பண்ணிவித்து*

(கண்ணி.143)

குளிர்ச்சி பொருந்திய சுடர் போன்ற வேலைப்பாடுகள் நிறைந்த தந்தத்தினால் ஆன பல்லக்கின் மேல் சந்திரனைப் போல் எழுந்தருளச் செய்து இசைமுழக்கங்களுடன் கோயிலுக்குக் கொண்டு சென்றார்கள் என்று குழந்தை நிலவுக்கு உவமையாகக் காட்டப் பட்டுள்ளது.

*திங்கள்மட்டா யாவிபெற்ற சித்திரம்போ லச்சிறந்த*
*மங்கலரூ பத்தினெழில் வாய்ந்த சிறுபாலன்* (கண்ணி.160)

பன்னிரண்டு நாட்களாய் உயிர் பெற்ற சித்திரத்தைப் போல மங்கலமான உருவத்தில் குழந்தை அழகாகக் காணப் பட்டான் என்று குழந்தை உயிர் பெற்ற சித்திரத்திற்கு உவமையாகக் காட்டப் பட்டுள்ளது.

*நோய்விட்டு பின்னும் நோய்பிடித் தாற்போல்* (கண்ணி.168)
*பித்தேறினர் போல பேதலித்து மெய்மறந்து* (கண்ணி-229)
*தன்தாயை நோக்கு தனிக்கன்று போல் மகிழ்ந்து*(கண்ணி.235)
*திவாகரனைப் போலுதையஞ் செய்த* (கண்ணி.300)

எனப் பண்புவமை இடம் பெற்றுள்ளது.

## தொழிலுவமை

*அவற்றின் புடைப்பெயர்ச்சியாய்க் காலம் புணர்ந்து நிற்பன தொழிலுவமை.*

*இருகூர் விழியாரிசை போல்நல் கூகை*
*குருகூறென் றோதுங்....* (கண்ணி - 95)

மைதீட்டப்பட்ட இரண்டு கூர்மையான விழிகளைக் கொண்ட பெண்களின் இசையைப் போல் கூகை குருகூர் என்று ஒலி எழுப்பும் குருகூர் பெருமானே என்று தாய் தாலாட்டுகிறாள்.

*........பனித்துகிலுஞ் செம்பொன்னும்*
*மலைபோல் குவிந்த பின்னர்...* (கண்ணி. 240-241)

மதுரகவியார், ஆழ்வாரைப் பேசவைத்தவுடன் அனைவரும் அவருக்குப் பரிசாக ஆடை அணிகலன்களும், பொன்னும் மணியும் மலைபோலக் குவித்து விடுகின்றனர் என்று குவித்த பொருள்களுக்கு மலை உவமையாகக் காட்டப்பட்டுள்ளது.

*எண்ணிரண் டாண்டு மெறும்பீக் கடியாமல்*
*கண்ணின் மணிபோலக் காத்திருந்தோம் காவலனே*
(கண்ணி.267)

தந்தை, தாய், மகன் என்ற உறவை நினைக்காமல் மூன்று நேரமும் வலம் செய்து துதிக்குமாறு மதுரகவியார் பணித்த வுடன், பதினாறு ஆண்டுகள் எறும்பு, ஈ முதலானவைக் கூட கடிக்காமல் கண்ணை இமை காப்பதுபோலக் காத்திருந்தோம், இனி உமக்கே அடைக்கலமாகத் தருகிறோம் என்று ஆழ்வாரின் பெற்றோர் மதுரகவியாரிடம் கூறுவதாக உவமை அமைக்கப் பட்டுள்ளது.

பயனுவமை

'அவை காரணமாகப் புலப்படும் காரியம் பயனுவமை'
கோசலையும் பார்த்திபர்கள் கோமான் றசரதனும்
நேசமுடன் வாழ்ந்ததுபோ லீடுழி வாழுமென
*(கண்ணி.9)*

காரியார், உடைய நங்கை திருமணத்தின் போது தசரத மன்னனும் அவர் மனைவி கோசலையும் வாழ்ந்தது போல் வாழ வேண்டுமெனப் பயன்கருதி வாழ்த்தியதால் பயனுவமை ஆயிற்று.

## 4.4 உருவக அணி

*உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து*
*ஒன்றென மாட்டின் அஃது உருவகமாகும்* (தண்டி.3)

உவமைக்கும் உவமேயத்திற்கும் உள்ள வேறு பாட்டினை நீக்கி, அவை இரண்டும் ஒன்றே என்ற ஒற்றுமை உணர்வு தோன்றக் கூறுவது உருவகம் ஆகும்.

***கண்ணனடி கமலங் காமித்து மெய்யானக்***
***கண்ணனென வுண்மை கார்முத்திரை தரித்து*** **(கண்ணி.156)**

ஆதிநாதர் கோயிலின்-கண் கொண்டு செல்லப்பட்ட குழந்தை தானே தவழ்ந்து ஓடி புளியமரத்தின்கீழ் அமர்ந்தது. அக்குழந்தை உண்மையான கண்ணன் இவனே என்று எண்ணும் அளவுக்குத் தன் பாதமாகிய தாமரையைக் காண்பித்து அமர்ந் திருந்தது என்று, தாமரைமலருக்குப் பாதம் உருவகப்படுத்தப் பட்டுள்ளது.

*கற்றெடுத்த கல்விக் கடலானருந் தவத்தார்*
*பெற்றெடுத்த பெண்கள் பெருமாளுடைய நங்கை*

*(கண்ணி.3)*

கற்றுத் தேர்ந்த கல்வியாகிய கடலால் அருந்தவம் செய்தவர்கள் பெற்றெடுத்த உடைய நங்கை பெண்களுக் கெல்லாம் தலைவியாக இருந்தாள். இங்கு கல்வி கடலுக்கு உருவகமாக அமைக்கப்பட்டுள்ளது.

## 4.5 பின்வருநிலையணி

*முன்வரும் சொல்லும் பொருளும் பலவயிற்*
*பின்வரு மென்னிற் பின்வருநிலையே* (தண்டி.5)

ஒரு செய்யுளில் முன்னர் வந்த சொல்லாவது பொருளாவது பின்னர் பலவிடத்தும் வருமாயின் அது பின்வருநிலையென்னும் அலங்காரமாம்.

ஆய்வுப்பகுதியில் 7 பின்வருநிலையணிகள் இடம் பெற்றுள்ளன.

பின்வருநிலையணி

- பொருள் பின்வருநிலையணி
- சொற்பொருள் பின்வருநிலையணி

## பொருள் பின்வருநிலையணி

முன்வந்த சொல்லே பின்னும் பலவிடத்து வந்து பொருள் வேறு உணர்த்துவது பொருள் பின்வருநிலையணி எனப்படும்

*ஈடேற்றி சென்மத் திடரேற்றி யந்தாம்*
*வீடேற்றி வீறளிக்கும் மெய்ப்புதல்வன் வேண்டு மென*

*(கண்ணி.21)*

பிறவியினை ஈடேற்றிப் பிறப்புத் துன்பங்களைப் போக்கி வீடுபேறு என்னும் உயர்வினைத் தரும் உண்மையான மகன் வேண்டும் என்கிறார் காரியார். 'ஏற்றி' என்ற சொல் பல்வேறு பொருள்களைத் தந்ததால் பொருள்பின்வரு நிலையணி.

சொற்பொருள் பின்வருநிலையணி

முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னர் பலவிடத்தும் வருவது சொற்பொருள் பின்வருநிலையணி.

*தழைவளமுஞ் சேணிற் றருவளமும் நீங்கா*
*மழைவளமும் எவ்வளமும் வாழப் பிறந்தானோ*

*(கண்ணி.84)*

பயிர் வளமும் கற்பகத்தருவளமும் குறையில்லாத மழை வளமும், எல்லாவளமும் வாழப் பிறந்தானோ? 'வளம்' என்ற சொல் பலவிடத்தும் வந்து ஒரே பொருளைத் தருவதாகஅமைந்துள்ளது.

*காதசையத் தோளசைய கையசையத் தாளசைய*
*தாதசையப் பூவசையத் தாரசைய மெய்யசைய*

*(கண்ணி.151)*

அசைவில்லாமல் இருந்த குழந்தை (ஆழ்வார்) திருமால் முன் கொண்டு சென்றவுடன் காது அசைய, தோள் அசைய, கை அசைய, பாதம் அசைய, தாதுக்கள் அசைய, பூமி அசைய, மாலை அசைய, உடல் அசைய, குழந்தை தானே தவழ்ந்தோடியது என்று கூறப்பட்டுள்ளது. 'அசைய' என்ற சொல் மீண்டும் மீண்டும் அதே பொருளை உணர்த்துவதாக இடம்பெற்றுள்ளது.

## 4.6 அதிசய அணி

ஆய்வுப்பகுதியில் அதிசய அணிகள் இடம்பெற்றுள்ளன.

*மனப்படு மொருபொருள் வனப்புவந் துரைப்புழி*
*உலகுவரம் பிறவா நிலைமைத் தாகி*
*ஆன்றோர் வியப்பத் தோன்றுவ ததிசயம்* (தண்டி.11)

கவிஞன் தான் கூறக் கருதிய பொருளின் அழகை மகிழ்ந்து சொல்லும்போது கவிஞருலகத்தின் கற்பனை வரம்பை மீறாத நிலையோடு கற்றோர் வியக்குமாறு கூறுவது அதிசய அணி ஆகும்.

*சுழிக்குந் திரைநீர் களிதோறு முத்தம்*
*கொளிக்கும் பொருணைக் குருகைப் பெருமானோ?*

*(கண்ணி.100)*

பொருநை ஆற்றில் அலை சுளிக்கும் போது கரையைத் தொடுகிறது. அது சுளிக்கும் போதெல்லாம் முத்தம் கொடுப்ப தாகக் கற்பனையுடன் கூறப்பட்டுள்ளது.

*மஞ்சாலி முத்தோவயல் முத்தோ காந்தியென*
*செஞ்சாலி சூழுந் திருவழுதி நாடனோ!* (கண்ணி.93)

வயிர நிரக்கு அளவுள்ள முத்தோ, வைடூரிய முத்தோ என நெல்வளம் சூழ்ந்துள்ள திருவழுதி நாடு சித்தரிக்கப் படுகிறது.

*செல்வக் குழமயிலே தேம்மாம்பழச் சுவையே*
*கல்விக் களஞ்சியமே காமருசீ ரோவியமே* (கண்ணி.118)

குழந்தையை நீராட்டி, ஆடை அணிகலன்கள் அணிவித்து அலங்கரித்துப் பலவாறு புகழ்ந்து கூறுகிறாள் தாய்; செல்வகுலத்தின் மயிலே தேன்போன்று இனிக்கும் மாம் பழத்தின் சுவையே கல்விக் களஞ்சியமே மன்மதனின் சிறந்த ஓவியமே என்றெல்லாம் கற்பனை மிக அமைத்துக் காட்டப் பட்டுள்ளது. இவையல்லாமல் 4; 117; 119; 120; 121 ஆகிய கண்ணிகளில் அதிசய அணியின் கற்பனைத் திறங்கள் மிக்குக் காணப்படுகின்றன.

## 4.7 தற்குறிப்பேற்றவணி

*பெயர்பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினும்*
*இயல்பின் விளைதிற னன்றி யயலொன்று*
*தான்குறித் தேற்றுதல் தற்குறிப்பேற்றம்* (தண்டி.12)

இயங்குகின்ற பொருள் இயங்காத பொருள் என்ற இரண்டிலும் கவிஞன் இயல்பாக உள்ள தன்மையை நீக்கித் தான் கருதிய வேறொன்றினை அவற்றின்மேல் ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்றம் என்னும் அணியாகும்.

பெயர் பொருள் தற்குறிப்பேற்றம், பெயராத பொருள் தற்குறிப்பேற்றம் எனத் தற்குறிப்பேற்றம் இரண்டு வகைப்படும்.

ஆய்வுப்பகுதியில் தற்குறிப்பேற்றம் இரண்டும் இடம் பெற்றுள்ளன.

*நீலக்கட லளித்த நேமிச்சுடர் மானும்*
*கோலக் கவுத்துவத்தை கொல்லிக் கிறையாக்கி*
(கண்ணி.255)

கிழக்கில் உதயமாகும் சூரியனைக் கடலுக்கருகில் நின்று பார்த்தால் கடலிலிருந்து உதயமாவது போல் தோன்றுவது இயற்கை அந்தச் சூரியனை நீலநிறக் கடல் அளித்த சூரியன் என்றும்

அதுதான் குலசேகர ஆழ்வார் என்றும் கவிஞர் தன் கற்பனை திறத்தை ஏற்றிக் கூறியிருக்கிறார். இது பெயராத பொருள் தற்குறிப்பேற்ற அணி ஆகும்.

*சென்றாடுந் தீர்த்தமெதிர் வந்தாடப் பெற்றதே*
*என்றாயிரந் திரமாய் இச்சைப்படி யியம்பி*

*(கண்ணி-228)*

என, நம்மாழ்வாரைக் கண்டு, எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டவராய் பலவாறு பிதற்றிப் புகழ்கிறார். அவர் சென்று நீராடும் தீர்த்தமே தன் எதிர் வந்ததாக நினைத்து, மட்டற்ற மகிழ்ச்சியில் பலவாறுக் கூறுகிறார். இது இயற்கை என்றாலும், ஆயிரம் தடவை தன் விருப்பம் போல் மனம் போன போக்கில் மதுரகவி பேசினார் என்று கவிஞர் தன் குறிப்பை ஏற்றிக் கூறியுள்ளார். இது பெயர்பொருள் தற்குறிப்பேற்றம் என்னும் அணியாகும்.

**4.8 சுவையணி**

*உண்ணிகழ் தன்மை புறத்துத் தோன்ற*
*எண்வகை மெய்ப்பாட்டி னியல்வது சுவையே*

*(தண்டி.18)*

உள்ளத்தில் நிகழுந் தன்மையானது வெளியிலே நன்றாக விளங்க எட்டுவகை மெய்ப்பாடுகளுந் தோன்ற வருவது சுவையணி ஆகும்.

அவைதாம்,

*வீர மச்ச மிழிப்பொடு வியப்பே*
*காம மவல முருத்திர நகையே*

என்பவைகளாகும்.

ஆய்வுப்பகுதியில் வியப்பு, காமம், அவலம், இழிப்பு ஆகிய நான்கு சுவைகள் மட்டும் காணப்படுகின்றன.

வியப்பு(7) காமம்(2) அவலம்(10) இழிப்பு(1)

**வியப்பு**

*அப்பாவென் னாருயிரே! ஆருயிர்க்கு மாருயிரே!*
*ஒப்பாரு மிக்காரு மில்லாவொளி விளக்கே*

*(கண்ணி.115)*

என, உடைய நங்கையார் தன் உயிரைவிட மேலான உயிர் தன் குழந்தை (ஆழ்வார்) என்பதைச் சுட்டுவதோடு அக்குழந்தைக்கு ஒப்பானவர்கள் எவருமில்லை என்று வியக்கும்படி வியப்புச்சுவை காட்டப்பட்டுள்ளது.

*இச்சோதி யோவெனி தையமு ருக்கியது*
*முச்சோதி யினுமுழுச் சோதியென் றிறைஞ்ச*

(கண்ணி.223)

என, தென்திசையில் தோன்றிய சுடரொளியைக் கண்டு குருகூரை வந்தடைந்த மதுரகவி, ஆழ்வார் தவத்தில் இருந்த திசையை நோக்கியவுடன் இந்த ஒளியோ என் இதயத்தை உலுக்கியது. முச்சோதியை விடவும் முழுச் சோதியல்லவா என்று வியந்து கூறியிருக்கிறார்.

*கரியதிரு மேனியெங்கே? கைநான் கிலிரண் டெங்கே*
*பெரியவுந்தி மலர்பெற்ற பிரம்ம னெங்கே?*

(கண்ணி.231)

என, ஆழ்வாரின் திருவுருவைப் பார்த்து, திருமாலே அவதரித்தது போல் தோன்றவே, திருமாலின் கருமைநிற மேனி எங்கே? நான்கு கைகள் எங்கே? கொப்பூளிலிருந்து தோன்றிய பிரமன் எங்கே? என்று தேடிப்பார்த்துப் பின் எதுவும் காணாமல் வியக்கிறார்.

ஆய்வுப்பகுதியில் 203, 232, 233, 234 முதலிய கண்ணிகளில் வியப்புச்சுவை அமைந்துள்ளது.

காமம்

*நந்தாதி தேவந் நகரை அலங்கரித்து*
*வந்தார்க ளெல்லாம் வழியெதிரே வந்தேத்த* (கண்ணி.11)

காரியார் உடைய நங்கை திருமணம் நிகழ்ந்த பின்னர் அந்தணர்களும், தேவர்களும், அரசர்களும், பாவலர்களும் வாழ்த்துகிறார்கள். அந்நகரையே அலங்கரித்து மணமக்களை எல்லோரும் வழியிலேயே வந்து வாழ்த்துகிறார்கள் என இன்பச் சுவை விளக்கப்பட்டுள்ளது.

*.....................தாய்முகங் குளிரக்*
*கண்டுகண்டு காரியர்கள் கண்கள் களிகூர*
*கற்றத்தார் பின்னோட தொல்புவியோர் பூரிக்க*
*பற்றற்றார் கொண்டாட பாசுபதரேத் தெடுப்ப*

(கண்ணி-149-150)

பாலுண்ணாமல் இருக்கும் குழந்தையைத் திருமால் சன்னதியில் கொண்டு வேண்டலாம் என்று தாதியர்கள் கூறக் கேட்டு ஆழ்வாரின் தந்தை (காரியார்) இசை முழக்கங்களுடன் பல்லக்கில் ஏற்றிக்கொண்டு செல்கின்றார். அதைப் பார்த்து, தாய் முகம் மகிழ்கிறது. தாதிப்பெண்களும் மகிழ சுற்றத்தார் அனைவரும் மகிழ்கின்றனர். உலகப்பற்றைத் துறந்தவர்களும், சிவனை வழிபடுபவர்களும் மகிழ்கின்றார்கள் என்று இன்பச்சுவை இடம்பெறுகின்றது.

அவலம்

*நல்வினை யேதுஞ்செய் யாநாங்க ளொழிய*
*வல்வினை யோஐயோ மலடாய்ப் பிறந்தோமோ?*

**(கண்ணி.34)**

காரியாரும் உடையநங்கையும் குறுங்குடியில் எழுந்தருளி யுள்ள நம்பியிடம் பிள்ளைவரம் கேட்க, நம்பி கனவில் தோன்றி எல்லாச் செல்வங்களும் உங்களுக்கு இருந்தும் பிள்ளைச் செல்வம் இல்லை என்று கூற உடையநங்கை, நல்ல செயல்களில் ஏதாவது செய்யாமல் விட்டதனால் மலடாய்ப் பிறந்தோமோ? ஐயோ இது கொடுமையானதோ? என்று அழுது அரற்றுவதாக அவலச் சுவை காட்டப்பட்டுள்ளது ஆய்வுப் பகுதியில் 29, 30, 31, 32, 33, 35, 36 ஆகிய கண்ணிகளில், மகப்பேறு இல்லாத காரணத்தால் உடையநங்கை அழுது புலம்புவதாக இச்சுவை இடம்பெற்றுள்ளது.

*கைசோர வுள்ளங்கரை யக்கண்ணீர் சொரிய*
*மெய்சோரக் கால்சோர விம்மல் பொருமலாய்*
*நோய்விட்டு பின்னும் நோய்பிடித் தாற்போல்*
*................................*

**(கண்ணி.167-168)**

உடல் அசையாமல், பாலுண்ணாமல் இருந்த குழந்தையைத் திருமால் சன்னதிக்கு எடுத்துச் சென்று கிடத்தியவுடன் குழந்தை தானே தவழ்ந்தோடிப் புளியமரத்தின் கீழ் அமர்ந்து கொண்டது. எல்லோரும் திருமால் செயல் என்று மகிழ்ந்திருந்த வேளையில், அங்கிருந்து குழந்தையை எடுக்க முடியவில்லை. அதைக் கண்ட தாய்உள்ளம் வெதும்பி, கை சோர்ந்து, உள்ளம் கலங்கி, கண்ணீர் வடித்து, உடல் சோர்ந்து அழுகையை அடக்கிய நிகழ்ச்சி பிடித்த நோய் குணமாகி மீண்டும் நோய் வந்ததைப் போல் இருக்கிறது என்று கவிஞர் உவமைநயத்துடன் அவலச் சுவையை விளக்கிக் காட்டியுள்ளார்.

## இழிப்பு

*.................. காரிமாறா வெனையுங்*
*கொண்டகன் றால்நாயென் குறைமுடியும் மென்றுரைத்த*
(கண்ணி.310)

முப்பத்திரண்டு ஆண்டுகள் பூமியில் இருந்து விட்டு நிலவுலகம் சென்ற நம்மாழ்வாரிடம் தம்மையும் உடன் கொண்டு சென்றால் நாய் போன்ற தன் இழிபிறப்பும் நீங்கும் என்று தன் பிறப்பை நாயாக மதுரகவி கூறுகிறார்.

## 4.9 உதாத்தவணி

*வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமும்*
*உயர்ச்சிபுனைந் துரைப்ப துதாத்த மாகும்* (தண்டி.22)

வியத்தகு செல்வத்து உயர்ச்சியையும் மேம்பட்ட உள்ளத்து உயர்ச்சியையும் மிகுத்துச் சொல்வது உதாத்தவணி யாகும்.

*ஐந்தடக்கி வேண்டும் மறங்கோடி செய்தாலும்*
*மைந்தரைப் பெற்றுய்யாத வாழ்வுமொரு வாழ்வாமோ?*
(கண்ணி.18)

பாண்டியனின் திருவழுதி நாடு முழுவதையும் ஆட்சி செய்யும் குறுநில மன்னனான காரியார் நாடும் நகரமும் பொருள்களும் நிலையானது என்று இருந்து விட்டோம். எவ்வளவு செல்வங்கள் இருந்தாலும் கோடி புண்ணியங்கள் செய்தாலும் குழந்தைகயைப் பெற்று மகிழாத வாழ்க்கை ஒரு வாழ்க்கையா? என்று உள்ளத்து உணர்ச்சிகளைக் கூறுகிறார்.

## ஏதுவணி

*யாதன் திறத்தினு மிதனினிது விளைந்தென்*
*றேதுவிதந் துரைப்ப தேது வதுதான்*
*காரக ஞாபக மெனவிரு திறப்படும்* (தண்டி.33)

ஏதாவது ஒருபொருள் கூறுமிடத்து இதனால் இது நிகழ்ந்தது என காரணத்தைச் சிறப்பாக எடுத்துச் சொல்வது ஏதுவணி ஆகும்.

*ஆழ்வார்கள் ஒன்பதின்மா ராரியர்முக் கோல்தரித்து*
*வாழ்வார்கள் தொண்டர்தொண் டர்வாழப் பிறந்தானோ*
(கண்ணி.80)

தொண்டருக்குத் (திருமால்) தொண்டு செய்யும் ஒன்பது ஆழ்வார்களும், ஆரியர்களும் திரிதண்டம் தரித்து வாழப்

பிறந்தவனா இக்குழந்தை எனக் குழந்தை பிறந்த காரணம் பற்றி விளக்கப்பட்டுள்ளது.

*திருப்பதிநூத் தெட்டுஞ் செழுந்துள பத்தாமம்*
*மருப்பதிநூற் றெண்மர்களும் வாழப் பிறந்தானோ*

*(கண்ணி.82)*

நூற்றியெட்டு ஆழ்வார் திருத்தலங்களில் உள்ளவர் களும், மேலுலகிலுள்ள நூற்றியெட்டுத் தேவர்களும் வாழப் பிறந்தவனா இக்குழந்தை எனக் காரணம் பற்றி விளக்கப் பட்டுள்ளது.

எனவே இது ஏதுவணியாகும்.

4.10 வாழ்த்தணி

*இன்னார்க்கின்ன தியெக வென்றுதான்*
*முன்னியது கிளத்தல் வாழ்த்தென மொழிப*

*(தண்டி.33)*

இன்ன தன்மையுடைவர்க்கு இன்னது நிகழ்க எனக் கவிஞன் தாம் கருதியதனை விதிப்பது வாழ்த்தெனும் அணி என்று சொல்லுவர் புலவர்.

*வெள்ளையா ழித்துயிலும் வேதாந்த மூர்த்தியைநீ*
*பிள்ளையாகப் படைக்கப் பெற்றோம்....*

*(கண்ணி.40)*

திருக்குறுங்குடியில் நம்பியிடம் பிள்ளைவரம் கேட்டுக் காரியாரும், உடைய நங்கையும் மனம் வெதும்பி அழுது புலம்பும் போது அவர்கள் கனவில் நம்பி தோன்றி அரவணைத்துக் கண்ணீரைத் துடைத்து, பாற்கடலில் பள்ளி கொள்ளும் வேதாந்த மூர்த்தியைப் பிள்ளையாகப் பெறும் பேற்றை அளித்தோம் என வாழ்த்துவதாக அமைக்கப் பட்டுள்ளது.

*தன்னின் மகிழ்ந்து தன்னிலே பூரித்து*
*நன்னிலை யனாகிநின்ற நாதமுனிவன் வாழி*

*வாழி குருகூரன் வாழிதிருக் கோளூரன்*
*வாழி பெரும்பூதூரன் வாழியென வாழ்ந்தனனே*

*(கண்ணி.349-350)*

நம்மாழ்வாரிடம் இருந்து நாலாயிர திவ்ய பிரபந்தங் களையும் பெற்ற நாதமுனிகள் தன்னைத் தானே மகிழ்ந்து, தானே பரவசமாகி நல்லநிலையை அடைந்தவராகிய நாதமுனி வாழ்க என்று கவிஞர் வாழ்த்துகிறார்.

மட்டுமல்லாமல் திருகுருகூரைச் சேர்ந்த நம்மாழ்வார் வாழ்க! திருக்கோளூரைச் சேர்ந்த மதுரகவி வாழ்க!

பெரும் பூதூரைச் சேர்ந்த இராமானுஜர் வாழ்க என கவிஞர் வாழ்த்துகிறார். இந்த அமைப்பில் வாழ்த்தணி அமைந்துள்ளது.

### 4:11 விரோத அணி

*மாறுபடு சொற்பொருள் மாறுபாட் டியற்கை*
*விளைவுதா வுரைப்பது விரோத மாகும்* (தண்டி.27)

மாறுபட்ட சொல்லானும் பொருளானும் மாறுபாட்டுத்தன்மை விளைவு தோன்ற உரைப்பது விரோதம் என்னும் அலங்காரமாம்.

*நல்குரவுஞ் செல்வமும் நரகும் சுவர்க்கமுமாய்*
*வெல்பகையும் நட்பும் வித்தகனைச் சொன்னாரார்*
(கண்ணி.89)

இதில் வறுமை, செல்வம், நகரம், சொர்க்கம், பகை, நட்பு என்பன ஒன்றோடொன்று மாறுபட்டு நிற்பதால் இது விரோத அணி ஆகும்.

### 4:12 தன்மேம்பாட்டுரையணி

*தான்றற் புகழ்வது தன்மேம் பாட்டுரை* (தண்டி.11)

ஒருவன் தன்னைத் தானே புகழ்வது தன்மேம்பாட்டுரை என்னும் அலங்காரமாகும்.

*தன்னைப் புகழ்ந்து தன்னைத்தானே பூசித்து*
*பின்னைத் தெளிந்து பிழைத்தேனென்ப போற்றி*
(கண்ணி.230)

சோதியைக் கண்டு வடதிசையிலிருந்து தென்திசை வந்த மதுரகவியார் நம்மாழ்வாரைக் கண்டு இவ்வாறு கூறுகிறார். தன்னைத்தானே புகழ்ந்து அலைந்து திரிந்து பின்னர் மனம் தெளிந்து உயர்ந்தேன் என்று தன்நிலையைக் கூறுகிறார்.

### 4:13 சிலேடை அணி

*ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி*
*தெரிதர வருவது சிலேடையாகும்* (தண்டி.24)

ஒருவகையான் நின்ற தொடர் சொல் பல பொருள்களது தன்மை தெரிய வருவது சிலேடை என்னும் அலங்காரமாகும்.

*திருநாளும் மாதத் திருநாளுஞ் சான்றோர்*
*வருனாளும் என்னாளும் வாழப் பிறந்தானோ*

*(கண்ணி-83)*

ஒவ்வொரு நாளும், நல்ல நாளாகவும், மாதந்தோறும் திருவிழாக்களும் (திருநாள்) நடப்பதற்காகப் பிறந்தானோ என்பதில் முதலில் உள்ள திருநாள் நல்லநாள் என்றும், இரண்டாவது திருநாள் விழாக்களையும் குறிப்பிடுகிறது.

*திருவாணை யிட்டுஉன் திருவாணை கண்டாய்*
*தருவாய் பரமபதந் தந்துஒழியப் போகேல்* *(கண்ணி-307)*

கட்டளையிட்டு, உன்மேல் ஆணை, வான்வீட்டு பேற்றைத் தந்தருள்வாய் என்பதில் முதலிலுள்ள திருவாணை, கட்டளை இடுதல் என்ற பொருளிலும், அடுத்துள்ள உன்திருவாணை என்பது உன்மேல் ஆணை (சத்தியம்) என்றும் பொருள்படுகிறது.

ஆய்வுப்பகுதியில் 12 அணிகள் இடம்பெற்றுள்ளன. கவிஞரின் அறிவுசிறப்பையும், கற்பனைத் தன்மையையும் புரிந்து கொள்ளும் ஓர் நிலைகளனாக அணிகள் அமைந்துள்ளன. அணிகள் என்று தனித்தனியாகக் காணாமலேயே பாடல் வரிகள் அனைத்துமே சுவைமிகுந்ததாகப் படிப்பவர் மனதை இன்பம் கொள்ளச் செய்வதாக அமைந்துள்ளன.

1. தன்மையணி, 2. உவமையணி, 3. உருவக அணி, 4. பின்வருநிலையணி, 5. அதிசய அணி, 6. தற்குறிப்பேற்ற அணி, 7. சுவையணி, 8. உத்தாத்தவணி, 9. ஏதுவணி, 10. வாழ்த்தணி, 11. சிலேடையணி, 12. தன்மேம்பாட்டுரை அணி என்பவை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்ற அணிகளாகும்.

# 5. நடையியல்

**நடை என்பது படைப்பாளியின் உள்ளத்து உணர்வுகளையும், அவ்வுணர்வின் வெளிப்பாடுகளையும் தெள்ளத் தெளியப் புலப்படுத்துவதாகும். கற்பனை, உணர்ச்சி, சொல் நயம், பொருள்நயம் எல்லாம் உள்ளடக்கியதே அவ்வுணர்வின் வெளிப்பாடு என்று கொள்ளலாம்.**

**"நடை ஆசிரியருடைய உள்ளத்தின் சொல்லோவியம்** (Style is the mental picture of the man who writes) **என்றும், குணத்தை அறியுங்கலை** (Physiognomy of the mind) **என்றுங் கூறுவர்."[1]**

**தான் எண்ணிய எண்ணங்களைச் சொற்களாக்கி வடிப்பதில் ஒவ்வொரு படைப்பாளியும் வேறுபடுகின்றனர். ஒவ்வொருவருடைய உள்ளத்து உணர்வுகளும், வெளிப்படுத்தும் திறனுமே அவ் வேறுபாட்டிற்குக் காரணமாக அமைகிறது.**

*8:1 உணர்த்தும் திறன்*

*சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை*
*வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து* (குறள் -645)

என்று சொற்களை உணர்த்தும் திறன் பற்றி வள்ளுவர் றுகிறார்.

எது இல்லையென்றாலும் உணர்த்தும் திறன் இல்லை என்றால் அப்படைப்பு சிறப்புறாது. சொல்நயம், பொருள்நயம், உவமை, அணி, யாப்பு, வட்டாரவழக்குச் சொற்கள், பிறமொழிச் சொற்கள் போன்ற அனைத்துமே படைப்பாளி பயன்படுத்தும் உத்திகளாகும்.

இவற்றுள் ஏதாவது பயின்று வரும்போது அது நல்ல இலக்கியப் படைப்பாக வெளிப்படுகிறது.

படைப்பாளியால் கையாளப்படும் உத்தி முறைகளே சிறந்த இலக்கியம் என்பதை நிர்ணயிக்கிறது.

''நுட்பம் (Accuracy), எளிமை (Ease) நயம் (Grace) என்னும் மூவகைப் பண்புகளே நல்ல நடையின் இயல்புகள் என்பர் சாப்மென்.''[2]

இவ்வடிப்படையில் இம்மூன்றும் அமைந்த நிலையில் ஆய்வுப்பகுதி, படைப்பாளியின் திறனைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

"1. தனிமனிதனின் படைப்பாற்றல்

2. கருத்தை வெளிப்படுத்தும் உத்தி

3. இலக்கியத்தின் மிக உயர்ந்த வெற்றி

என்ற மூன்றும் இலக்கியத்தின் மிக உயர்ந்த வெற்றி"[3] என்னும் கூற்றின்படி ஆய்வுப்பகுதியும் அமைந்து வெற்றியுடையதாகத் திகழ்கிறது என்றால் மிகையாகாது.

நடையின் வேறுபாடு

நடைவேறுபாடு, ஆசிரியர் (Author) காலம் (Age) நோக்கம் (Purpose) கருத்து (Theme) இடம் (Geography) மக்கள் (Audience) என்னும் நிலைகளில் அமைகிறது.

இதில் ஆசிரியர் பற்றியும், காலம் பற்றியும் முன்னுரையில் கொடுக்கப்பட்டுள்ளது. நோக்கம் இடம் பெறவில்லை. கருத்து, மக்கள் பொருளியலில் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே ஆய்வுப்பகுதி மேற்கண்ட தனித்தனிப் பகுப்புகளாக அமையாமல் அதன் பொதுநிலையில் அமைந்துள்ள இலக்கண இலக்கியங்களின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

5:2 சொற்களின் அசை அமைப்பு

ஓரசை முதல் ஏழு அசை வரையுள்ள சொற்களின் அமைப்பும் எண்ணிக்கையும் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

ஓரசை

இதில் ஏழு அமைப்புகள் உள்ளன. CV-VC கூடுதலாகவும் V அமைப்பு குறைவாகவும் உள்ளன.

ஈரசை

இதில் 31 அமைப்புகள் உள்ளன. CVC-CV அமைப்பு கூடுதலாகவும் 27-31 வரையுள்ளவை குறைவாகவும் உள்ளன.

மூவசைச் சீர்

இதில் 54 அமைப்புகள் உள்ளன. CV-CVC-CV கூடுதலாகவும் 44-54 வரையுள்ள அமைப்புகள் குறைவாகவும் உள்ளன.

மூவசை, நாலசை

இதில் 46 அமைப்புகள் உள்ளன. CV-CVC-CV-CV அமைப்பு கூடுதலாகவும் 11-46 வரையிலான அமைப்புகள் குறைவாகவும் உள்ளன.

ஐந்தசை

இதில் 7 அமைப்புகள் உள்ளன. அனைத்துமே தனித்தனியாக வந்துள்ளன.

ஆறசை

ஆறசையில் 3 அமைப்புகள் உள்ளன. அவை தனித்தனி அமைப்பாக வந்துள்ளன.

ஏழசை

இதில் ஒரு அமைப்பு மட்டும் வந்துள்ளது.

5:3 சொல்நிலை

கவிஞன் கையாளுகின்ற சொற்சிறப்புகளாலேயே அவனது படைப்பு மேன்மையுறுகிறது. புதிய உத்திகளைக் கையாளும்முறை, புதிய நோக்குகளை ஏற்கும் திறமை, சொல்லக்கூடிய கூறுகளை நயம்பெறச் சொல்லுதல் போன்றனவே முக்கியமான நடையியல் உத்திகள் எனலாம்.

சொல்நிலை உத்திகளாகக் கீழ்க் காண்பவை ஆய்வுப் பகுதியில் இடம்பெறுகின்றன.

| | |
|---|---|
| 1. எதுகை மோனை | 8. ஆகுபெயர் |
| 2. பழைய சொல்லாட்சி | 9. வேற்றுமை உருபுகள் |
| 3. அடுக்குத்தொடர் | 10. உவமை |
| 4. ஒருபொருட் பன்மொழி | 11. உருவகம் |
| 5. ஒலிக்குறிப்பு | 12. அடைச்சொற்கள் |

6.பேச்சுவழக்கு 13.தொகைச்சொற்கள்

7.பிறமொழிச்சொற்கள் 14.அணி

*5:4 எதுகை:*

ஆய்வுப்பகுதியில் அமைந்துள்ள அனைத்துப் பாடல் களுமே எதுகைத் தொடையில் அமைந்துள்ளன. இரண்டாம் எழுத்து அடிதோறும் ஒன்றிவரத் தொடுப்பது எதுகையாகும்.

வருக்க எதுகை:

*20; 23; 25; 36; 60; 61; 129* - தொடங்கிய 27 இடங்களில் வருக்க எதுகை ஆய்வுப்பகுதியில் இடம் பெறுகிறது.

வல்லின எதுகை:

*3; 6; 9; 12; 15; 17.........* தொடங்கிய 83 இடங்களில் வல்லின எதுகை ஆய்வுப்பகுதியில் இடம் பெறுகிறது.

மெல்லின எதுகை:

*11; 13; 14; 18; 22; 25; 30* தொடங்கிய 117 இடங்களில் மெல்லின எதுகை இடம் பெறுகிறது.

இடையின எதுகை:

*2; 4; 5; 7; 8; 28; 34; 40* தொடங்கிய 94 இடங்களில் இடையின எதுகை அமைந்துள்ளது.

பொழிப்பு எதுகை:

*1; 10; 29; 43; 78; 80; 158; 168; 117* முதலான 9 இடங்களில் பொழிப்பு எதுகை இடம் பெறுகிறது.

ஆசிடை எதுகை:

*205; 216; 237; 256; 257; 260* தொடங்கி 14 இடங்களில் ஆசிடை எதுகை அமைந்துள்ளது.

நெடில் எதுகை:

*14; 21; 23; 53; 61; 87; 96; 106* தொடங்கிய 31 இடங்களில் நெடில் எதுகை அமைந்துள்ளது.

ஆய்வுப்பகுதியில் முழுவதும் எதுகைத் தொடையாக அமைந்திருப்பது மட்டுமல்லாமல் மெல்லின எதுகை கூடுதலாக இடம்பெற்று, படைப்பாளியின் சொல் நயத்தினை வெளிப் படுத்துவதாக அமைந்துள்ளது.

மோனை:

முதல் எழுத்து ஒன்றாக வருவது மோனைத் தொடை யாகும், ஆய்வுப்பகுதியில் குறைந்த அளவே மோனைத் தொடை அமைந்துள்ளது.

*7; 19; 99; 185; 189; 199; 214; 215; 254; 258; 305; 328; 337; 350 ஆகிய 14 இடங்களில் மோனைத் தொடை அமைந்துள்ளது.*

பொழிப்பு மோனை:

*1; 2; 3; 8; 11; 12; 17; 27; 30;31 ஆகிய 10 இடங்களில் பொழிப்பு மோனை இடம் பெறுகிறது.*

அடிமோனை:

*3; 15; 31 ஆகிய 3 இடங்களில் அடிமோனை அமைந்துள்ளது.*

ஒரூஉ எதுகை:

*10; 13; 15; 20; 30; 35; 57; 62; 72; 88 - தொடங்கிய 28 இடங்களில் ஒரூஉ எதுகை இடம் பெற்றுள்ளது.*

கூழை எதுகை:

*3; 5; 16; 30; 31; 65 .......... தொடங்கிய 21 இடங்களில் கூழை எதுகை இடம் பெற்றுள்ளது.*

மேற்கதுவாய் எதுகை:

*15; 30; 67; 88; 115; 144; 182; 185 தொடங்கிய 15 இடங்களில் மேற்கதுவாய் எதுகை இடம்பெற்றுள்ளது.*

கீழ்க்கதுவாய் எதுகை:

*10; 15; 30; 115; 260 ஆகிய 5 இடங்களில் இடம்பெறுகின்றது.*

முற்று எதுகை:

5; 30; 85; 115 ஆகிய 4 இடங்களில் இடம்பெறுகின்றது.

முரண்தொடை:

சொல்லாலும், பொருளாலும் முரண்பட்டு வருவது முரண்தொடை, ஆகும்.

254, 258, 305, 328, 337, 350 ஆகிய 6 இடங்களில் இடம்பெற்றுள்ளது.

5:5 பழைய சொல்லாட்சி:

ஒரு காலப்பகுதியில் வழக்கில் பயன்படுத்தப்பட்டு நீண்ட காலங்களுக்குப் பிறகும் கையாளப்படும் அரிய சொற்கள் ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

(எ.கா)

| | |
|---|---|
| படாம் (69:2) | பின்னை (139:1) |
| பெண்ணீர்மெல் (135:1) | பெண்கொடியீர் (134:1) |
| போழ்து (127:2) | யாங்கள் (28:1) |
| யான் (136:1) | முனம் (23:2) |
| நிழற்ற (145.2) | கௌவை (177:2) |
| மடவீர் (55:1) | தேவரீர் (193:1) |
| இறும்பூது (200:2) | குழாம் (304:4) |

5:6 அடுக்குத் தொடர்:

''கூறும் கருத்தில் உணர்ச்சி, வன்மை,அழுத்தம், இவை ஏற்படும் வகையில் ஒரு சொல்லே மீண்டும் மீண்டும் அடுக்கி வருதல் அடுக்குத் தொடராகும்.''[4]

(எ.கா)

| | |
|---|---|
| வெளுவெளுத்து | (44:1) |
| குழைகுழைந்து | (49:2) |
| கண்டுகண்டு | (149:2) (183:2) |
| தங்கள்தங்கள் | (174:1) (177:1) |
| அவ்வவர் | (177:1) |

ஆண்டுதொறும் ஆண்டுதொறும் *(181:1)*
திங்கள்தொறும் திங்கள்தொறும் *(269.2)*
வந்து வந்து *(270:2)*
உவந்து உவந்து *(161:2)*
பார்த்து பார்த்து *(161:2)*
இளைத்து இளைத்து *(132:1)*
புதிதுபுதிதாக *(155:2)*

8:7 ஒருபொருட் பன்மொழி:

ஒரு பொருளை உணர்த்த, பல சொற்கள் பயன் படுத்துவது ஒருபொருட் பன்மொழி ஆகும்.




அரசன்
மன்னர்
அரசர் (208: 2)
சேந்தர்
பார்த்திபர் (239:2)
வேந்தர்
மண்டலீகர்
இறையோன்
கோ
கோகனகம் (72:2)
கலை
நூல்
கலை
துணி


சூரியன்
சோபைச்சுடரோன் (68:1)
சோதி இளவொளி (73:1)
எண் சுடரோன் (143:2)
வெய்யோன் (198:2)
செங்கதிரோன் (200:1)
கதிரோன் (203:2)
நந்தா ஒளிப்பிழப்பு (204:2)
செய்யோன் (205:1)
நேமிச்சுடர் (206:1)
தினகரன் (244:1)
திவாகரன் (300:1)
மகன்
மைந்தர் (18:2)
மெய்ப்புதல்வன் (21:2)
மகவு
பிள்ளை (40:2)
பாலகன்
குழவி (23:2)
குழந்தை
சிறுபாலன்
புத்திரன் (60:1)
மதலை (16:2)


தமிழ்
தண்டமிழ் (81:1)
வேதத்தமிழ் (251:1)
முத்தமிழ் (284:2, 316:2)
மறைத்தமிழ் (328:2)
வேதகுலத்தமிழ் (341:2)


அழகு
கோலம் (76:1)
நளினம் (13:2)
சோபை (68:1)
தேசு (94:1)
பொற்பு (33:2)

பல பொருள் ஒரு சொல்


மாதம்
சந்திரன்
திங்கள்
பொழுது
மலர்
போது
பெண்கள் கூட்டம்
இசை
பண்
எளிமை
எட்டு
எண்




**5 : 8 ஒலிக்குறிப்புச் சொற்கள்**

பாத்திரங்கள் உணர்ச்சி வெளிப்பாடாகவும், கவிஞனின் வருணனையாலும் ஒலிக்குறிப்புச் சொற்கள் ஆய்வில் இடம்பெறுகின்றன. ''எண்ணத்தையும் உணர்ச்சியையும் உரிய முறையில் எடுத்துரைக்கும் போதுதான் நாம் மொழியைக் கையாளும் திறன் நன்கு வெளிப்படுகிறது'' என்கிறார் ஜெ.நீதிவாணன்

*(எ.கா.)* ஐயோ *(34:2)* (தன்நிலைக்கு வருந்துதல்)
ஆவாவென *(102:1)* ஆவாவ் (ஆ+ஆ) என்று

குழந்தையை அள்ளி எடுத்ததாகக் காட்டப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| *செய செய* | *(147:2)* | *(வெற்றிகுறித்த வாழ்த்து மொழி)* |
| *கிண்கிணி* | *(112:1)* | *(காலில் அணிந்த அணியின் மணி ஓசை)* |

### *5:9* இருவடிவச் சொற்கள்

''ஒரே பொருள் தரும் இருவடிகள் இடம் பெறுகின்றன. இதனை இலக்கண நூலார் எழுத்துப் போலி என்பர்''.

| | | | | |
|---|---|---|---|---|
| *(எ.கா)* | *போழ்து* | *(127:2)* | *பொழுது* | *(24:1)* |
| | *கிங்கிணி* | *(112:1)* | *கிண்கிணி* | *(16:1)* |
| | *குறுங்குடி* | *(23:1)* | *குறுங்கை* | *(23:1)* |
| | *சூழ்த்த* | *(10:2)* | *சூழ்ந்த* | *(98:1)* |
| | *நா* | *(122:2)* | *நாக்கு* | *(47:2);* |
| | *நாவு* | *(125:1)* | | |
| | *படம்* | *(69:1)* | *படாம்* | *(69:2)* |
| | *பின்* | *(10:1)* | *பின்னை* | *(139:1)* |
| | *குழாம்-குலம் (304:1)* | | | |

### *5:10* பேச்சுவழக்கு

உணர்வு பொங்கப் பாத்திரங்களோடு ஒன்றும் போது பாத்திரங்களின் குணங்களைப் பெறுவது படைப்பாளிக்கு இயல்பாய் அமைந்து விடுகிறது. ஆய்வுப்பகுதியில் கவிஞர் பேச்சுவழக்கைப் பயன் படுத்தியுள்ளார்.

| | | |
|---|---|---|
| *(எ.கா.)* | *பத்தி (பக்தி)* | *(88.1)* |
| | *பெரிதாகி (பெரியதாகி)* | *(132:2)* |
| | *வேர்வை (வியர்வை)* | *(46:1)* |
| | *காமித்து (காண்பித்து)* | *(156:1)* |
| | *ஆர் (யார்)* | *(173:1)* |

பைய்ய (மெதுவாக) (43:2)

ஆனை (யானை) (64:2)

தெகிட்டாத (திகட்டாத) (125:1)

அஞ்சு (ஐந்து) (199 : 2)

5:11 பிறமொழிச் சொற்கள்

கவிஞனின் படைப்பில் பிறமொழிச் சொற்கள் கலத்தல் என்பது வட்டார வழக்கினையும், கவிஞனின் பன்மொழிப் புலமையையும் வெளிப்படுத்துவதாக அமைகிறது. ஆய்வுப் பகுதியில் வடமொழிச் சொற்களும், மலையாளச் சொற்களும் கலந்து காணப்படுகின்றன. ''ஒரு இடத்தில் தோன்றிய ஒரு மாற்றம் அம்மொழி பேசப்படும் இடங்களில் எல்லாம் பரவிவிட்டதென்றால், அம்மொழியைப் பேசுவோ ரிடையே வேறுபாடு எதுவும் இல்லை என்ற நிலையே ஏற் படும்.''[5]. இத்தன்மையிலேயே இங்கு சொற்கள் அமைந்துள்ளன.

வடமொழிச் சொற்கள்

(எ.கா.) அபிஷேகம் (194:2)

தேவேசன் (2:1)

பாக்கியம் (4:1)

கமலம் (8:1)

ஆகாசம் (23:1)

கஷ்த்தூரி (114:1, 241:2)

அட்டாங்கம் (119: 2)

ஸ்ரீபாஷ்யம் (53:2)

ஈசுரன் (285:1)

மலையாளச் சொற்கள்

பாரியா (8:2)

கிலேசம் (24:1)

எத்திர (26:1)

சம்பத்து (26:1)

கெற்பக்குறி (43:2)

எல்லவரும் (221:2)

நாலுபிராயம் (319:2)

5:12 மங்கலச் சொல்

''மங்கலம் அல்லாதவற்றைக் கூறும் போது மங்கலமான வேறு சொற்களால் கூறுவதை மங்கல வழக்கு என்பர். அதனால் பொருள் வேறுபடுதலும் உண்டு. ஆங்கிலத்தில் க்ண்டிதச்ஞூஙு என்ற சொல் இருப்பினும் 'ஷுச்டுஙு தீச்ஞுஙுஞூஙு' என்று கூறுவர்.''[6] விளக்கை அணைப்பதைக் 'குளிரச் செய்தல்' என்பது போல தூங்குதலை, 'கண் வளர்தல்' என்பது மங்கல மானச் சொல்லாகக் கருதப்படுகிறது. (எ.கா.) கண்வளரவிட்டு (73:2)

5:13 அடைச்சொற்கள்

கவிதையை அழகுறச் செய்யக் கவிஞன் பயன்படுத்தும் கற்பனை, வர்ணனை, அணி போன்றவற்றைச் சிறப்பிக்க அடைச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

ஆய்வுப்பகுதியில் பெயரடைகளும், எண்ணுப் பெயரடைகளும் சிறுபான்மை வினையடைகளும் இடம் பெற்றுள்ளன.

தனித்து நன்ற சொற்களைச் சிறப்பிக்கும் பெயரடைகள்

5:12 மங்கலச் சொல்

அங்கண், அருந்தவம், ஆகாசவாணி, ஏலக்குழல், கனிவாய், குறுங்கண், கொடிய, கோவாமணி, சமையவாதியர், சீரோவியம், செய்யமுகம், சேற்று கருமேதி, இனிய, தென்னம்பழம், நீலபடாம், புதுமஞ்சள், பெறுதோள், வெல்பகை, வீரபட்டம், வேற்றுமுகம்.

ஓரடை இரண்டு பெயர்களைச் சிறப்பித்தல்










ஓரடை மூன்று பெயர்களைச் சிறப்பித்தல்










ஓரடை நான்கு பெயர்களைச் சிறப்பித்தல்



ஓரடை ஆறு பெயர்களைச் சிறப்பித்தல்

செம்
- *செம்பொன் (1:1)*
- *செங்கமலம் (8:1)*
- *செவ்வாய் (16:1)*
- *செங்கண்ணர் (75:2)*
- *செங்கால் (90:2)*
- *செங்கருப்பம் (117:1)*

நல்
- *நல்லவோரை (6:2)*
- *நன்மரபிற் (7:2)*
- *நன்மணி (15:1)*
- *நன்னிலத்தில் (62:1)*
- *நல்லதிருமகனே (122:2)*
- *நன்னாவலன் (214:2)*

மா
- *மாநகர் (12:1)*
- *மாநகரம் (25:1)*
- *மாமால் (22:1)*
- *மாதவம் (30:1)*
- *மாதவத்தோர் (102:1)*
- *மாகனகக்கை (127:2)*

ஒரு தலைமைப் பெயர் இரண்டு அடைகளைச் சிறப்பித்தல்

நீண்ட
- *நெடிய வள்ளைக் குழை (105:2)*
- *நெடுநாள் (12:2)*

எண்ணுப்பெயரடை

ஒரு எண்ணுப்பெயரடை நான்கு சொற்களை சிறப்பித்தல்

ஒரு – ஒரு வார்த்தை *(14:1)*
ஒரு – ஒரு வாழ்வு *(16:2)*
ஒரு – ஒரு சாட்சி *(45:2)*
ஒரு – ஒரு மகவு *(129:2)*

ஓர் - அழகு *(46:1)*

ஈர் - ஈரைந்து *(49:1)*

எண் (எட்டு) - எண்திசை *(12:1)*

என ஆய்வுப் பகுதியில் எண்ணுப் பெயரடைகள் அமைந்துள்ளன.

வினையடை

நன்கு - நன்கு உருகி *(25:2)*

பைய்ய - பைய்யக் காண்பித்தனால் *(43:2)*

5:14 உவம உருபு

புரியாதனவற்றைப் புரியவைப்பதற்காகவும், கவிதையை அழகு பெறச் செய்வதற்காகவும் உவமை உருபுகள் பயன்படுத்தப் படுகின்றன.

ஆய்வுப்பகுதியில் போல், போல, என்ன, ஒத்த, மான, ஏர் போன்ற உவம உருபுகள் இடம் பெற்றுள்ளன.

| | | |
|---|---|---|
| (எ.கா.)பால் ஒத்த நீறு *(48:1)* | - | ஒத்த |
| சுடரோன் என்ன *(143:1)* | - | என்ன |
| மானேர் விழியார் *(117:2)* | - | ஏர் |
| இழைமான வீரபட்டம் *(104:2)* | - | மான |
| வாழ்ந்ததுபோல் *(9:2)* | - | போல் |
| இளவொளி போல் *(73:1)* | - | போல் |
| இசைபோல் *(95:1)* | - | போல் |
| சித்திரம்போல் *(160:1)* | - | போல |
| கண்ணின்மணிபோல *(267:1)* | - | போல |

*(144:1), (148:1), (168:1), (193:1), (241), (262)* முதலான இடங்களிலும் போல, போல் ஆகிய உருபுகள் இடம் பெற்றுள்ளன.

ஆகுபெயர்

ஒரு பொருளின் இயற்பெயர் அதனோடு தொடர் புடைய வேறு ஒரு பொருளுக்கு ஆகி வருவது ஆகுபெயர் ஆகும்.

*(எ.கா.)*

*பார்புகழ (43 :2)* - *உலகிலுள்ள மக்கள் புகழ*

*புவியோர் பூரிக்க* - *உலகிலுள்ள மக்கள் மகிழ்ச்சி அடைய*

*கன்று முலையுண்ணாது (101:1)* குழந்தையும் பால் குடிக்காது.

உருவகம்

கவிஞன் தன் கற்பனைத் திறத்தால் உவமையின் தன்மையைச் சொற்களின் மேல் ஏற்றிக் கூறுதல் உருவகம் எனலாம்.

*(எ.கா.)*

*அடிக்கமலம் (156:1)* *மலர்க்கண் (208:1) (209:1) (218:1)*
*முகத்தாமரை (51:2) (60:2)* *கடல்ஞாலம் (306:2)*
*வேழக்கடல் (78:1)* *பூமடந்தை (309:1)*
*பிள்ளைமயில் (120:1)*

5:15 தொகைகள்

*வேற்றுமைத் தொகையே உவமைத் தொகையே*
*வினையின் தொகையே பண்பின் தொகையே*
*உம்மைத் தொகையே அன்மொழித் தொகை யென்று*
*அவ்வாறு என்பதொகை மொழி நிலையே*

(தொல்-சொல். எச்.16)

எனத் தொல்காப்பியர் அறுவகைத் தொகைகளை விளக்குகிறார். நிலைமொழி தொக்கி நின்று வருமொழியோடு தொடருமாயின் அது தொகைநிகைத்தொடர் அல்லது தொகை எனப்படும். அவை வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத்தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை என ஆறு வகைப்படும்.

வேற்றுமைத்தொகை

இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரையிலான வேற்றுமைத் தொடர்களில் வேற்றுமை உருபுகள் மறைந்து வருவது வேற்றுமைத் தொகை எனப்படும்.

இரண்டாம் வேற்றுமைத்தொகை

இரண்டாம் வேற்றுமை உருபான ஐ உருபு தொக்கி வருவது இரண்டாம் வேற்றுமைத் தொகையாகும்.

இரண்டாம் வேற்றுமை உருபான 'ஐ' உருபும், அதன் பயனும் மறைந்து வருவது இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகையாகும்.

*(எ.கா.)*

| | | |
|---|---|---|
| செல்வக்குமாரன் | *(7:2)* | - செல்வத்தையுடையக் குமாரன் |
| தேன்மலர் | *(51:1)* | - தேனையுடைய மலர் |
| கருணை முகம் | *(51:2)* | - இரக்கத்தையுடைய முகம் |
| ஏலக்குழல் | *(103:1)* | - மணத்தையுடையக் கூந்தல் |
| வேதத்தமிழ் | *(251:1)* | - வேதத்தையுடையத் தமிழ் |
| மலர்க்கூந்தல் | *(166:1)* | - மலரையுடையக் கூந்தல் |
| நுதல்மாது | *(270:1)* | - நுதலையுடையமாது |

மூன்றாம் வேற்றுமைத்தொகை

மூன்றாம் வேற்றுமை உருபான 'ஆல்', 'உடை எனும் உருபுகள் மறைந்து வருவது மூன்றாம் வேற்றுமைத் தொகை ஆகும்.

*(எ.கா.)*

| | | |
|---|---|---|
| பொற்சங்கிலி *(68 : 2)* | - | பொன்னாலாகிய சங்கிலி |
| முத்தின் கடகம் *(110 : 1)* | - | முத்தினாலான கடகம் |
| பொற்கழங்கு *(185 : 1)* | - | பொன்னாலான கழங்கு |
| பொற்பந்து *(185 : 1)* | - | பொன்னாலாகிய பந்து |
| பொற்காமதேனு *(185:2)* | - | பொன்னாலாகிய காமதேனு |

பொற்பூவு *(185:2)* - பொன்னாலாகிய பூ

மஞ்சன நீராட்டி *(321:1)* - மஞ்சள் நீரால் நீராட்டி

பொற்கோயில் *(275:1)* - பொன்னாலாகிய கோயில்

நான்காம் வேற்றுமைத் தொகை

நான்காம் வேற்றுமை உருபான 'கு' உருபு மறைந்து வருவது.

*(எ.கா.)*

தொடரிமலைக் காவலன் *(123:2)* - துடரிமலைக்குக் காவலன்

சேனைமுதல்வன் *(178:2)* - சேனைக்கு முதல்வன்

ஐந்தாம் வேற்றுமைத் தொகை

ஐந்தாம் வேற்றுமை உருபு 'இன்' மறைந்து வருவது.

ஆய்வுப்பகுதியில் இடம்பெறவில்லை

ஆறாம் வேற்றுமைத்தொகை

'அது' உருபு தொக்கி வருவது ஆறாம் வேற்றுமைத் தொகையாகும்.

(எ.கா.) துங்கமுகம் *(227)* - யானையினது முகம்

ஏழாம் வேற்றுமைத் தொகை

ஏழாம் வேற்றுமைத் தொகை என்பது 'கண்' உருபு மறைந்து வருவது ஆகும்.

ஆய்வுப்பகுதியில் இடம்பெறவில்லை.

வினைத்தொகை

'வினையின் தொகுதி காலத்து இயலும்'

வினைத்தொகையானது மூன்று காலத்திற்கும் உரியதாய் அமைவது ஆகும்.

*(எ.கா.)* பூசுமண் *(48:1)*

விடுபூ *(71:2)*

| | |
|---|---|
| வருநாள் | (83:2) |
| வெல்பகை | (89:2) |
| ஊறுபால் | (126:2) |
| விரிதிரைநீர் | (294:1) |
| மகிழ்ச்சுடர் | (341:1) |
| குளிர்புனல் | (235:1) |
| செழுமணி | (211:1) |
| உறைகோயில் | (152:1) |

பண்புத்தொகை

வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவும், அவை போன்று பிறக் குணத்தையும் தழுவி 'ஆகிய', 'மை' விகுதி தொக்கி வருவது பண்புத்தொகை ஆகும்.

(எ.கா.)

| | | | |
|---|---|---|---|
| செம்பொன் | (1:1) | பொற்கோயில் | (275:1) |
| அருந்தவம் | (3:1) | செஞ்சொல் | (287:1) |
| செங்கோல் | (7:1); (35:1) | பொற்கிழங்கு | (185:1) |
| செங்கமலம் | (8:1) | பொற்பந்து | (185:1) |
| செவ்வாய் | (16:1); (127:1) | பொற்பூ | (185:1) |
| கொடுங்கோல் | (35:1) | செங்கதிர் | (200:1) |
| குறுங்கண் | (44:1) | தண்சுவர் | (48:1) |
| வெண்பவளம் | (44:1) | கருமேதி | (91:1) |
| பசுங்கை | (58:1) | ஆருயிர் | (115:1) |

இருபெயரொட்டுப் பண்புத்தொகை

பொதுப்பெயரும், சிறப்புப் பெயருமாகிய பெயர்கள் இணைந்து நிற்க அவற்றின் இடையில் 'ஆகிய' என்னும் உருபு மறைந்து வருவது இருபெயரொட்டுப் பண்புத்தொகை ஆகும்.

(எ.கா.)

| | |
|---|---|
| பாருலகு | (138:2) |
| தங்கப்பொற்சங்கிலி | (68:2) |

உவமைத்தொகை

உவம உருபுகளில் வினை, பயன், மெய், உரு என நான்கு வகைகளில், உவம உருபு மறைந்து நிற்பது உவமைத் தொகை ஆகும்.

ஆய்வுப்பகுதியில் மிகுதியும் உரு உவமை இடம் பெற்றுள்ளது.

(எ.கா.)

| | | | |
|---|---|---|---|
| கமலக்கை | (8:1) | விற்கேழ் நுதலார் | (154:2) |
| பூந்தேர் | (64:1) | மணிவாய் | (278:2) |
| திங்கள்நுதல் | (133:1) | பூமடந்தை | (309:1) |
| மலர்க்கண் | (73:2) | கெண்டைவிழி | (113:2) |

உம்மைத்தொகை

"இருபெயர், பல பெயர், அளவின் பெயர், எண்ணியல் பெயர், நிறைப்பெயர் ஆகிய ஆறுவகைப் பெயர்களையும் கொண்டு வருவது உம்மைத் தொகையாகும்.

எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்பன அளவை பற்றி வரும் உம்மைகள் ஆகும்.

ஆய்வுப்பகுதியில் 322-325 வரையுள்ள கண்ணிகளில் உம்மைகள் தொடர்ந்து இடம்பெற்றுள்ளன.

(எ.கா)

| | |
|---|---|
| கைகால் | (136:1) |
| மெய்வாய் | (136:2) |
| கஸ்தூரி கற்பூரம் | (242:1) |

பன்மொழித்தொகை

இரண்டிற்கும் மேற்பட்ட உம்மைகள் மறைந்து வருவது பன்மொழித்தொகை.

*எண்ணெய் மஞ்சள்நீர்..................*
*வெண்ணெய் ,தயிர் பால் நறுநெய்....* (கண்ணி 242)

அன்மொழித்தொகை

வேற்றுமைத்தொகை தொடங்கி உம்மைத் தொகை ஈறாகவுள்ள தொகைகள் அல்லாமல், அவற்றின் புறத்தே பிறமொழிகளாகிய உருபுகள் தொக்கி வருவது அன்மொழித் தொகை ஆகும்.

(எ.கா)

| | |
|---|---|
| பைந்தொடியார் | (50:2) |
| மடமானார் | (55:1) |
| மானேர் விழியார் | (117:2) |
| மெல்மடந்தை | (232:2) |
| மெல்லியலார் | (144:2) |
| நங்கைமின்னாள் | (16 6:2) |
| நுதல்மாது | (270:1) |
| பொற்கொடியார் | (57:2) |
| பெண்கொடியீர் | (134:1) |

5:16 இயக்குவினை

''வ், ப், ப்ப், என்பவற்றை முறையே சேர்த்து எதிர் காலங் காட்டும் வினையடிகள் முறையே, வி, பி, ப்பி என்பவற்றை சேர்த்து இயக்கு வினையாகின்றன''. ஆய்வுப் பகுதியில் இடம் பெற்றுள்ளவைகள் இயக்குவினைகளே.

(எ.கா)

| | |
|---|---|
| திறப்பித்து | (247:1) |
| பேசிவித்து | (247:1) |
| பண்ணிவித்து | (170:2) |
| ஆக்கி | (251:2),(252:2) |

5:17 வினாக்கள்

இங்கு வினா என்பது பெயர்ச் சொல்லுக்கு முன் வருவதிலிருந்து வேறுபட்டதாக உள்ளது. இவ்வினாக்கள் சொல்லின் இறுதியில் வரக்கூடியவை. ''வினா வாக்கியங்கள்

எளிதில் அமைதல் திராவிட மொழிகளின் சிறப்பியல்பாகும்'' "என்பதற்கேற்ப 'ஓ' கார வினா மிகுந்து வந்து கவிதையைச் சிறப்புறச் செய்கிறது. ஆய்வுப்பகுதியில் இந்த 'ஓ' காரம் பாத்திரத்தின் உள்ளத்து உணர்ச்சியின் வெளிப்பாடாக அமைந்துள்ளது.

*29-36 வரையுள்ளவை குழந்தையின்மையின் ஏக்கத்தால் பிறந்த வினா 'ஓ' காரம் ஆகும்.*

*(எ.கா)*

மைந்தர் உண்ணும் கையைப் பிடித்தோமோ? *(32:1)*

பிள்ளைகளைப் பொத்தி எடுத்திலமோ? *(33:1)*

மலடாய் பிறந்தோமோ? *(34:1)*

வேதினைகள் செய்தோமோ? *(35:1)*

உதவி மறந்தோமோ? *(36:1)*

*74-79* வரையுள்ள ஓகாரம் குழந்தையை உயர்வு நவிற்சியாகச் சிறப்பிக்கப்பட்டவை ஆகும்.

*(எ.கா)*

செழித்த வழித்தோன்றலோ ? *(75:2)*

தெய்வத் தனிச்சுடரோ ? *(74:2)*

கோள் அரியோ ? *(76:1)*

போர் ஏறோ ? *(77:1)*

குணக் குன்றமோ ? *(78:1)*

பொறந்தாங்கும் அற்புதமோ ? *(79:1)*

*80-84* வரையுள்ள 'ஓ'காரம் குழந்தை பிறந்த காரணத்தைக் கூறிப் 'பிறந்தானோ' என்று கேட்பதாக இடம்பெறுகிறது.

*90-100* வரையுள்ள பாடல்களில் நாட்டு வளங்களைக் கூறி அச்சிறப்புக்களையெல்லாம் கொண்ட நாடனோ? பெருமானோ? என்று கேட்கும் நிலையில் 'ஓ'காரம் இடம் பெறுகிறது.

*ஆர் வினா (யார்)*

*85-90 வரையுள்ளவை குழந்தை பிறந்ததன் சிறப்பியல்புகளைக் கூறிச் சொன்னவர் யார்? என்ற வினா அடிப்படையில் சொன்னாரார்? என்ற அமைப்பு இடம் பெற்றுள்ளது.*

*5:18 உம் (இடைச்சொல்)*

*286-300 வரையுள்ள 15 பாடல்களில் 'உம்' என்னும் சொல் எச்ச உம்மையாக வந்துள்ளது. பாடல்தோறும் இரண்டாம் வரியில் 'உம்' என்னும் சொல் இடம்பெறுகிறது.*

*(எ.கா)*

| | |
|---|---|
| நின்றதுவும் | (286:2) |
| சொல்வதும் | (287:2); (299:2); 300:2) |
| உரைத்ததுவும் | (288:2) |
| கூறுவதும் | (289:2); (298:2) |
| பேசுவதும் | (290:2) |
| கட்டுரையும் | (291:2); (292:2) |
| என்றதுவும் | (293:2); (294:2); (295:2) |
| செப்புவதும் | (296:2): (297:2) |

*இங்கு அனைத்துச் சொற்களுமே 'சொல்லுதல்' என்ற பொருளில் அமைகின்றது.*

*ஆம் (எண்ணுப்பெயர்)*

*எண்ணுப்பெயரை குறிக்கும் சொல்லாக ஆம் பயன் படுத்தப்படுகிறது.*

*ஆய்வுப்பகுதியில் நம்மாழ்வார் இயற்றிய திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி ஆகிய பாடல் தொகுப்புகளின் இயல் கருத்தைக் கூறவந்த ஆசிரியர் ஒவ்வொரு பத்தினையும் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கிறார். அதை ஒன்றாம் பத்து, இரண்டாம் பத்து என வகைப்படுத்துகிறார்.*

(எ.கா)

| | |
|---|---|
| ஒன்றாம் பத்தில் | (286:1) |
| இரண்டாம் பத்தில் | (286:1) |
| மூன்றாம் பத்தில் | (287:1) |
| நான்காம் பத்தில் | (288:1) |

இவ்வாறே தொடர்ந்து 286 முதல் 300 கண்ணிகள் வரை இடம்பெற்றுள்ளன.

**5:19 எண்கள்**

ஆய்வுப்பகுதியில் ஒன்று முதல் பத்துவரையும், நூறு, ஆயிரம் கோடி என்று பெரிய எண்களும் இடம்பெற்றுள்ளன.

(எ.கா.)

| | | | |
|---|---|---|---|
| ஒன்று | (286:1) | எட்டு | (289:1) |
| இரண்டு | (286:1) | ஒன்பது | (290:1) |
| மூன்று | (287:1) | பத்து | (290:1) |
| நால் (நான்கு) | (287:1) | பன்னிரண்டு | (62:1) |
| அஞ்சு (ஐந்து) | (288:1) | நாற்பது | (339:1) |
| ஆறு | (288:1) | எண்பத்தியேழு | (283:2) |
| ஏழு | (289:1) | நூறு | (282:2) |
| நூற்றெட்டு | (82:1) | | |

குறிப்பு : மேற்கூறப்பட்டுள்ள எண்ணுப் பெயர்களுடன் 'இல்' என்னும் ஏழாம் வேற்றுமை உருபும் கலந்து இடம் பெறுகின்றது.

| | |
|---|---|
| இருநூற்றுநாற்பது | (324:2) |
| ஓராயிரம் | (335:2) |
| மூவாயிரத்தில் | (342:1) |
| நாலாயிரத்தில் | (343:1) |
| பன்னீராயிரம் | (339:1) |
| ஒரு கோடி | (200:1) |

பெருக்கல் நிலையில் எண்கள்

| | |
|---|---|
| ஆறில் ஒன்று (பகுப்பு) | *(36:1)* |
| ஈரைந்து | *(49:1)* |
| ஈராறு | *(159:1)* |
| ஆறிரண்டு | *(243:1)* |
| எண்ணிரண்டு | *(267:1)* |

இவ்வாறு, மன உணர்வுகளைத் தொகுத்து வடித்துக் காட்டியுள்ள ஆசிரியரின் படைப்புத்திறன் அவரது நடை நயத்தினைத் தெளிவுபடுத்துகின்றது. வடமொழிக் கலப்பும், மலையாள மொழிக் கலப்பும், எண்களைக் கையாண்டுள்ள முறையும் ஆசிரியரின் பட்ட அறிவினை புலப்படுத்துவனவாக அமைந்துள்ளன. மன எண்ணங்களைப் படிப்பவர் மனங் கொள்ளும் முறையில் உணரும்படி அமைத்திருப்பது ஆசிரியரின் வெற்றி நடையைக் காட்டுகிறது.

மேற்கோள் விளக்கம்:

1. ஜெ.நீதிவாணன், நடையியல், பக்.27.
2. மேலது, பக். 27
3. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, பக்.102
4. சந்திரா. செ.பாரதிதாசன் பாண்டிய பரிசு - விளக்க இயல் இலக்கணமும் சொல்லடையும், ஆய்வுநூல், பக்.449.
5. முத்துச்சண்முகம், இக்காலமொழியியல், பக்.240.
6. சு.சக்திவேல், தமிழ்மொழி வரலாறு, பக்.327.
7. ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் வரலாற்றிலக்கணம், பக்.161
8. மு. வரதராசனார், மொழிநூல், பக்.235

## முடிவுரை

ஒரு மனிதன் பிறந்தான் என்பதைவிட அவன் ஏன் பிறந்தான் என்பதற்கான விடையே அவன் பிறந்ததின் பயன் என்றாகிறது. இத்தன்மையில் 'ஆழ்வார் தாலாட்டு', தாயின் குழந்தை பற்றிய எதிர் பார்ப்பினையும், குழந்தை அடைந்த சிறப்புக் களையும், இதனால் உலகுக்கு உண்டான நன்மை யினையும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

யாப்பு நிலையில் அளபெடை, ஆய்தம் போன்றவை இடம்பெறவில்லை. கலிவெண்பா என்ற யாப்பில் ஈற்றடி மூச்சீர் கொண்டு முடியாமல் கலிவெண்பாட்டிலிருந்து மாற்றம் பெற்ற கலிப்பாவாக அமைந்துள்ள ஐந்தடிகள் கொண்டவை பஃறொடை வெண்பா, ஐந்தடிக்கு மேல் வரும்போது கலிவெண்பாவாகக் கொள்ளப்பட்டுள்ளது.

அணி அமைப்பில் 'ஆழ்வார் தாலாட்டு' முழுவதும் நயம் போன்ற பாடல் வரிகள் அமைந் துள்ளது. உயர்வு நவிற்சி மிகுதியாக இடம் பெற்றுள்ளது. அவை தனித்தலைப்பின் கீழ் பாகுபடுத்தப்படாமல் தன்மேம்பாட்டு அணியில் ஒரிரு எடுத்துக்காட்டுகள் மட்டுமே கொடுக்கப் பட்டுள்ளன.

நடையியல் ஆசிரியருக்கே உரிய தனித் தன்மையை உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது. ஒரு பொருளைக் குறிக்கப் பல சொற்களைப் பயன் படுத்தியிருக்கும் பாங்கு ஆசிரியரின் நடைப்பாங்கை வெளிப்படுத்துகிறது. நாடகத்தின் காட்சி மாற்றம் போல ஒருவரையடுத்து ஒருவராக உரையாடுவது போன்றும், ஒருவர் கேட்க மற்றவர் பதில் சொல்வது போன்றும் அமைக்கப்பட்டுள்ளது.

பொருளியல் நிலையில் வரலாற்றுச் செய்திகள் முதலிடம் பெறுகின்றன. கூன்பாண்டியன் வழியில் வந்தவன் திருவழுதி என்ற செய்தி காப்புச் செய்யுளில் உள்ளது. திருவழுதி மரபில் வந்தவர்கள் எல்லாம் வைணவத்தைப் போற்றியவர்கள் என்ற செய்தி தாலாட்டிலும், குருபரம்பரையில் அவன் குடிவழியும் சுட்டப்பட்டுள்ளது. ஆனால் கூன் பாண்டியன், சோழ இளவரசியை

மணந்து சமண னானவன் என்ற குறிப்புகள் வரலாற்று இலக்கியங் களில் உள்ளன. எனவே கூன்பாண்டியன், திருவழுதி பற்றியச் செய்திகள் ஆய்விற்குரியதாகும்.

ஆழ்வார்களின் அவதாரநிலை, திரு வாசிரியம், திருவிருத்தம், அந்தாதி, திருவாய்மொழி ஆகிய நம்மாழ்வாரின் பாசுரங்கள் விரிவாக ஆய்வில் ஆராயப்பட வேண்டியவை.

இங்கு ஆய்வின் கால எல்லையை மனதில் கொண்டு மேலோட்டமான குறிப்புகள் மட்டுமே தரப்பட்டுள்ளன.இவ்வாராய்ச்சி விரிவுப்படுத்தற் குரியது ஆகும். எனவே, 'ஆழ்வார் தாலாட்டு' என்னும் சுவடி பதிப்பில் 'பொருளிலக்கணம்' ஒரு முடிந்த முடிவல்ல. ஆய்வின் முதற்படியாகும்.

# ஆழ்வார் தாலாட்டு பதிப்பு

## ஆழ்வார் தாலாட்டு

### காப்பு

தென்குருகை மாறன் (திருஅவ)தா ரச்சரிதை[1]
நன்குருகித் தாலாட்டி நாட்டவே - என்குருவாஞ்
செல்வச் சட(கோப)ன் தேசிகன்பொற் சீர்பாத
கல்விப் பிரான் சரணங் காப்பு
வச்சிரமெய்க் கூன்[2]செழியன் மைந்தன் திருவழுதி
பச்சை யறந் தாங்கிசக்கிர பாணி(யார்-அச்சுத)[3]ரே
சீரியலுஞ் சேந்தருடன் செங்கண்ணார் போர்க்கழியார்
காரி[4]குலச் சேய்(மாறன் காப்பு)

சடகோபன் திருவடிகளே சரணம்

(அவதாரம் - பிறப்பு, சரிதை - வரலாறு - கல்வி பிரான் - நம்மாழ்வார், வச்சிரம் - ஆய்தம்)

1. சீர்பூத்த நீன்மதிளும் (செம்பொ)ன்செய்க் கோபுரமும்
   கார்பூத்த மாளிகையுங் கற்பகக்கா வுஞ்செறிந்த
2. (திருவன்) பரிசார தேவே சனையே
   மருவவர விந்தத்தில் வாழ்வதிரு வாழ்மார்பன்
3. கற்றெ(டு)த்த கல்விக் கடலானருத் தவத்தால்[5]
   பெற்றெடுத்த பெண்கள் பெருமாளு டை(ட)யநங்கை
4. பருவங் குறித்துநந்தம் பாக்கியத்தான் தோன்றும்
   திருவின்வடி வுக்கேற்ற செல்வி[6] மணவாளன்
5. எவனா மெனப்புவன மெல்லாங் (கு)றித்தெடுத்து
   நவ(நா கரி)க னாகுமென நண்ணி

தெளிவுரை

பொலிவுற்று விளங்கும் சிறந்த மதிலும், செம்மை யான பொன்னால் செய்யப்பட்ட கோபுரமும், அழகு தோன்றும் மாளிகையும், கற்பகமரச் சோலையும் மிகுந்த திருவண் பரிசாரத்தில்.

தாமரை மலரில் வாசம் செய்யும் திருமகளை மார்பில் கொண்டுள்ள திருவண் பரிசார இறைவனையே பொருந்த

கற்றுத் தேர்ந்த கல்வியாகிய கடலைப் பொருந்திய அருந்தவத்தைச் செய்தவர்கள் பெற்றெடுத்த பெண்களும் (தாயார்), பெருமாளும் (தந்தை) உடைய நங்கையின்

வயது குறித்து, குறைவில்லாத புண்ணியத்தால், தெய்வத் தன்மை பொருந்திய வடிவத்திற்கு உகந்த செல்வியின் (உடையநங்கை) மாப்பிள்ளை

யாராக இருக்க முடியும்? என்று உலகம் எல்லாம் தேடியலைந்து, ''நவீனமான நாகரீகத்தையுடையவன் இவனே'' ஆகும் என்று நெருங்கி

(திருவண்பரிசாரம் - நாகர்கோவிலுக்கு வடக்கே உள்ள ஒரு ஊர். இன்று திருப்பதிசாரம் என்றழைக்கப்படுகிறது. திருவாழ்மார்பன் - இலக்குமி வாழும் மார்பையுடையவன்)

6. சித்திரை மாதத்திரு வோண நன்னாளில்
(உத்த)ம யோகத்தினல் (லவோ)ரை முகிழ்த்தத்தில்

7. திருவழுதி நாடுமுற்றுஞ் செங்கோல் செலுத்து
திருவழுதின் நன்மரபில்[7] செல்வக் குமாரன்

8. காரியார் செங்கமலக் கைபிடித்திம் மாதுனக்கு
பாரியாம் என்றே பரிவாயளித் தருளி

9. கோசலையும் பார்த்திபர்கள் கோமான் தசரதனும்
நேசமுடன் வாழ்ந்ததுபே(பா வீடு)ழி வாழுமென

10. வாழ்த்தியபின் வேதியரும் மாதவத்தோ ரும்வாழ்த்த
சூ(ழ்த்ததிசை) யோர்வாழ்த்த சொற்பாவலர் வாழ்த்த

தெளிவுரை

சித்திரை மாதத்தில், திருவோண நட்சத்திர நல்ல நாளில் எவற்றுள்ளும் சிறந்த சுபகாலத்தின் நல்ல இராசியுள்ள முகூர்த்தத்தில்,

திருவழுதி நாடு முழுவதிலும் நேர்மைதவறாது ஆட்சி செலுத்திய பாண்டிய மன்னனின் நல்ல மரபில் வந்த செல்வத்தை யுடைய குமாரன்,

காரியாரின் சிவந்த தாமரை போன்ற கையைப் பிடித்து இந்தப் பெண் உனக்கு மனைவியாகும் என்றே அன்பாய்க் கொடுத்து ஆசீர் அளித்து,

கோசலையும் அரசர்களுக்கெல்லாம் தலைவனான தசரத மன்னனும் அன்புடன் வாழ்ந்தது போல் பல்லாண்டு வாழுங்கள் என்று

வாழ்த்தியபின், வேதவல்லாரும் பெரிய தவத்தை உடையவர்களும் வாழ்த்த, சூழ்ந்த திசையிலுள்ளோர் வாழ்த்த, கவிவாணர் வாழ்த்த,

*(உடையநங்கை - நம்மாழ்வாரின் தாயார், நந்தம் - குறைவில்லாதது, ஓரை - இராசி, திருவழுதி நாடு - காரியாரின் முன்னோர் ஆட்சி செய்த நாடு, திருவழுதி - பாண்டியன், காரியார் - நம்மாழ்வாரின் தந்தை, பாரி - மனைவி)*

11. நந்தாத தெய்வ நகரை அலங்கரித்து
வந்தார் களெல்லாம் வழியெதிரே வந்தேத்த

12. மாடத் திருகுருகூர் மாநகரி லெண்திசையோர்
நாடச் சிறந்துநெடு நாளரசு செய்ததற்பின்

13. கங்கையார் நன்மரபிற்[8] காரியார் கற்புடைய
நங்கையார் செய்ய நளினமுக னோக்கி

14. மானே விலையில்லா மாணிக்கமே தெகிட்டா
தேனே ஒருவார்த்தை செப்புவது கேளென்றார்

15. நாடு நகரமும் நன்மணியும் நல்வளமும்
தேடும் பொருளும் திரமாமென இருந்தோம்

தெளிவுரை

கடவுள் (திருமால்) குடிகொண்ட அழிவில்லாத நகரை அணி செய்து வந்தவர் எல்லாம் வழியெதிரே வந்து வாழ்த்த

உயர்ந்த மாளிகைகள் நிறைந்த பெரிய திருகுருகூர் நகரில், எட்டுத் திசையிலுள்ளோரும் விரும்பும்படி சிறந்து, நீண்டநாள் ஆட்சி செய்ததன் பின்னர்

கங்கை குலமாகிய நல்ல வேளாளர் மரபில் வந்த காரியார் கற்புடைய உடைய நங்கையாரின் அழகான சிவந்த முகத்தை நோக்கி

மான் போன்றவளே! விலை கூற முடியாத மாணிக்கமே! திகட்டாத தேனே! ஒரு வார்த்தை சொல்வதைக் கேள்'' என்றார்.

நாடும், நகரமும் நல்ல மணியும், நல்ல வளமும், தேடும் பொருளும் நிலையானது என்று இருந்தோம்.

*(செய்ய - சிவந்த, நளினம் - அழகு)*

16. குதலைமொழிக் கிண்கிணிக்கால் கோகனகச் செவ்வாய்
மதலைய ரையில்லாத வாழ்வுமொரு வாழ்வாமோ

17. புக்கடிசில் உண்டு புறம்பல்கிக் கூத்தாடும்
மக்கள்முகங் காணாத வாழ்வுமொரு வாழ்வாமோ

18. ஐந்தடக்கி வேண்டும் அறங்கோடி செய்தாலும்
மைந்தரைப் பெற்றுய்யாத வாழ்வுமொரு
வாழ்வாமோ

19. மிகப்பே றளித்து விரசை நீராட்டும்
மகப்பே றடையாத வாழ்வுமொரு வாழ்வாமோ

20. இத்தனை காலங்களும் ஈதெண்ணினோ மில்லையென
உத்தம னுமுத்தமியும் உள்ளமிக வேவாடி

தெளிவுரை

கிண்கிணி என்று ஓசை எழுப்பும் சிறிய பாதத்தையும், மழலை மொழி பேசும் சிவந்த தாமரை போன்ற வாயினையும் உடைய குழந்தைகளைப் பெறாத வாழ்க்கையும் வாழ்க்கை ஆகுமா?

உணவு உண்டு, பின்புறத்தைக் கட்டிக் கொண்டு நடனம் ஆடுகின்ற குழந்தைகள் முகத்தைக் காணாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கை ஆகுமோ?

ஐம்புலன்களையும் அடக்கி, தேவையான அறங்களைச் செய்தாலும் மக்களைப் பெற்று நற்கதியடையாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கை ஆகுமா?

மிகுந்த பயன் அளித்து கருப்பையை நீராட்டும் புத்திர பாக்கியம் அடையாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கை ஆகுமா?

இவ்வளவு காலங்களும் இதை நாம் எண்ணவில்லை என்று உத்தம புருஷனும் கற்புடைய மனைவியும் உள்ளம் மிகவே வருந்தி

(குதலை மொழி - மழலை மொழி, கோகனகம் - தாமரை, அடிசில் - உணவு, புறம்பல்கி - தாயின் பின்புறத்தைக் கட்டித் தழுவுதல், உய்யாத - நற்கதியடையாத, விரசை - கருப்பை)

21. ஈடேற்றிச் சென்மத் திடரேற்றி யந்தாம்
வீடேற்றி வீறளிக்கும் மெய்ப்புதல்வன் வேண்டு
மென

22. சிந்தித்து வாவி திருநகரி மாமாலை
வந்தித்து இறைஞ்ச வளையாழி எம்பெரு(ம)ான்

23. ஆகாச வாணி வடிவாகிக் குறுங்குடியில்
ஏகா முன்குழவி யீவோமெனப் பகர

24. கேட்டபொழுது உள்ளக் கிலேசமற நீத்து
வாட்டமொழித் தச்சுதனை வாயார வாழ்த்துதற்கே

25. தென்குறுகை மானகரம் சேர்ந்துதெரி சித்திடலாம்
நன்குறுகிப் பத்திபண்ணி நம்பிகன விற்றோன்றி

தெளிவுரை

பிறவியாகிய கரையினைத் தாண்டி, பிறப்புத் துன்பத்தைப் போக்கி இறுதிநாளில் வீடுபேறு என்னும் பெருமிதத்தை அளிக்கும் உண்மையான மகன் வேண்டும் என்று,

நீர்நிலை சூழ்ந்த ஆழ்வார் திருநகரி நெடுமாலை நினைத்து, கெஞ்சி வேண்டிட கையில் சங்குசக்கரத்தையுடைய எம்பெருமான்.

ஆகாயம் சார்ந்த அசரீரி வடிவாகி ''குறுங்குடியில் இருந்து செல்லும் முன் குழந்தை அளிப்போம்'' என்று கூறக்

கேட்டபொழுது மனத் துன்பத்தை அறவே நீத்து, வருத்தத்தைத் தவிர்த்துத் திருமாலை வாயார வாழ்த்துதற்கே

தென்திசையைச் சார்ந்த குறுங்குடியாகிய பெரிய நகரம் அடைந்து வணங்கிடலாம் என்று நன்றாக உருகிப் பக்தியாய் வேண்டி நிற்க, நம்பி கனவில் தோன்றி,

(அந்தாம் - அந்தம் (கடைசி), திருநகரி - ஆழ்வார் திருநகரி, மாமால் - திருமால், வந்தித்து - கெஞ்சி, வளையாழி - சங்குச்சக்கரம், வாணி - அசரீரி, குறுங்குடி - திருக்குறுங்குடி (திருமால்தலம்) நாங்குநேரியிலிருந்து மேற்குத் திசையில் உள்ளது, கிலேசம் - துன்பம், வாட்டம் - வருத்தம், குறுங்கை - குறுங்குடி, பத்தி - பக்தி)

26. எத்திரசம் பத்துமுமக் கீட்டும் சதுர்வேதன்
புத்திரசம் பத்தை பொறித்தா னில்லையென்ன

27. அச்சுதா னந்தா! அரிகேசவா! கண்ணா!
மச்சரூபா! அனந்தா ! வாமனா! மாதவனே!

28. ஏழுதலை முறையாய் யாங்கள்தொண் டராகிநிற்க
வாழுமடியெங் களுக்கும் மக்கட்பே றில்லை
யென்றால்

29. ஊழ்வினையோ[9] தெய்வம் உனதருளும் பொய்யாமோ
வாழ்வினையோ நல்கும் மகவளிக்கல் ஆகாதோ

30. முன்செய்த மாதவத்தை முற்றும் முடித்திலமோ
பின்செய்த பேறும்பெறும்[10] பேறாய் பெற்றிலமோ

தெளிவுரை

*அளவற்ற செல்வத்தை உனக்குக் கொடுக்கும் சதுர் வேதன் குழந்தைச் செல்வத்தை கொடுக்கவில்லை என்று*

*அச்சுதானந்தா; அரிகேசவா; கண்ணா; மச்சரூபா; அனந்தா வாமனா; மாதவனே,*

*ஏழுதலைமுறையாய் நாங்கள் வேளாளருக்குத் தொண்டராகி நிற்க, வாழும் அடியவர் எங்களுக்கும் மக்கட் பேறில்லை என்றால்,*

*முன்வினையோ! தெய்வமே! உனது அருளும் பொய் யானதோ? வாழ்க்கையையே கொடுக்கும் குழந்தையைத் தரக்கூடாதோ?*

*முன்னர் செய்த பெரிய தவத்தை முழுவதும் முடிக்க வில்லையோ? பின்னர் செய்த பேறும் பெறக்கூடிய செல்வ மாய்ப் பெறவில்லையோ?*

*(சம்பத்து - செல்வம், பொறித்தான் - கொடுத்தான், பேறு - பயன்)*

31. கற்றாவுங் கன்றுங் கதறப் பிரித்தோமோ
பெற்றாருரைப் பார்த்து பெருமூச் செறிந்தோமோ

32. பேதலித்து முற்பிறப்பில் பிள்ளைப்பால்
வார்த்திலமோ
காதலித்து மைந்தருண்ணுங் கையைப் பிடித்தோமோ

33. கற்புடைய மின்னார் கருவை அழித்தோமோ
பொற்புடைய பிள்ளைகளைப் பொத்தி எடுத்திலமோ

34. நல்வினை யேதுஞ்செய் யாநாங்க ளொழிய
வல்வினையோ ஐயோ மலடாய்ப் பிறந்தோமோ

35. சங்கோலை விட்டும் கொடுங்கோல் செலுத்தினமோ
வெங்கோப நீத்தோர்க்கு வேதினைகள் செய்தோமோ

தெளிவுரை

*கன்றையுடைய பசுவையும் கன்றையும் கதறும்படிப் பிரித்தோமோ? பிள்ளைகளைப் பெற்றவர்கள் பேசும் பேச்சுக்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டோமோ?*

*மனம் குழப்பமடைந்து முற்பிறவியில் பிள்ளைப்பால் ஊற்றவில்லையோ? ஆசைப்பட்டு, குழந்தைகள் உண்ணும் கையைப் பிடித்து விட்டோமோ?*

*கற்புடைய பெண்கள் கருவை அழித்தோமோ? அழகு உடைய குழந்தைகளைத் தூக்கி எடுக்கவில்லையோ?*

*நல்ல செயல்கள் எதுவும் செய்யாமல் நாங்கள் இருக்க, தீயவினையோ? ஐயோ! மலடாய்ப் பிறந்தோமோ?*

*செங்கோல் ஆட்சியை விட்டுக் கொடுங்கோல் ஆட்சி செலுத்தினமோ? கடுங்கோபத்தைத் துறந்தவர்க்குத் துன்பங்கள் செய்தோமோ?*

*(கற்றா - கறக்கின்ற பசு, பேதலித்து - குழப்பமடைந்து, மின்னார் - பெண்கள், வல்வினை - தீவினை)*

36. ஆறிலொன்று கொள்ளா தவனிப் புறந்தோமோ
ஊறிலன்பர் செய்த உதவி மறந்தோமோ

37. என்றுவழக் காகவுரைத் தேங்கி பரதவித்து
நின்று புலம்பினர்பால் நேசத்தால் உள்ளிரங்கி

38. ஆதிநம்பி கண்ணுக் கணித்தாய் எழுந்தருளி
நீதி(ம)மந்த னாமுமக்கு நீரேகு வீரென்று

39. கண்ணீர் துடைத்துக் கரத்தினால் தைவந்து
பெண்ணீர் மையினால்நீர் பேதலியா தேகுமென

40. வெள்ளையா ழித்துயிலும் வேதாந்த மூர்த்தியைநீ
பிள்ளையா கப்படைக்கப் பெற்றோமென மகிழ்ந்து

தெளிவுரை

ஆறில் ஒருபாகம் வாங்காமல் உலகைக் காத்தோமோ? இடையூறு இல்லாமல் இருந்த தொண்டர்கள் செய்த உதவியை மறந்தோமோ? என்று, வாதமாகக் கூறி, ஏங்கி நின்று புலம்பினவர்களிடம் நேசத்தால் மனம் இரங்கி,

ஆதி நம்பி, கண்முன் தோன்றி, ''நாமே உமக்கு நீதி மைந்தன்''நீர் செல்வீர் என்று கூறி,

கண்ணீர் துடைத்துக், கையினால் தடவி, பெண் தன்மையினால் நீர் செல்வீர் என்று கூறி,

பாற்கடலில் பள்ளி கொள்ளும் திருமாலையே பிள்ளையாகப் படைக்கப் பெற்றோம் என மகிழ்ந்து,

(ஆறிலொன்று - ஆறில் ஒரு பாகம், அவனி - உலகம், ஊறு - இடையூறு, பரதவித்து - பரிதவித்து (இரங்கி), தைவந்து - தடவி, பெண்ணீர்மை - பெண்தன்மை)

41. கண்டார்தரிக்க விண்ணோர் காதலிக்கப்
பூதலத்தோர்
கொண்டாட மீண்டுங்குரு காபுரிக் கேகி

42. தென்னர் புகழச் செகத்தோர்[11] பணிகேட்ப
மன்னர் வணங்க மறையோர் புடைசூழ

43. சீர்புகழ் வாழ்ந்தநாள் தேவி[12] திருவயிற்றில்
பார்புகழ கெற்பக்குறி பைய்யக்காண் பித்ததனால்

44. அங்கமெங்கும் வெண்பவள மாகவெளு வெளுத்து
கொங்கை வட்டமிட்டுக் குறுங்கண் கறுப்பேறி

45. மேனிப் பசுநரம்பு மேல்தோன்ற வேற்றுமுகம்
தானித் தனைக்குமொரு சாட்சிக் குறிகாட்டி

தெளிவுரை

கண்டவர்கள் ஆச்சரியப்பட, தேவர்கள் மகிழ்ச்சி யடைய, பூமியிலுள்ளோர் கொண்டாட மீண்டும் குருகாபுரிக்குச் சென்று

பாண்டியர் புகழ, உலகத்தோர் பணி செய்ய, அரசர் வணங்க, வேத முதல்வர்கள் பின் தொடர, சீர்சிறப்போடு புகழ் பெற்று வாழ்ந்த நாளில், உடைய நங்கையின் திருவயிற்றில் உலகம் புகழ மெதுவாகக் கர்ப்ப அடையாளம் காண்பித்ததனால்,

உடல் எங்கும் வெண்மை நிறப் பவளமாக வெண்மை யாகி, கொங்கை வட்டம் இட்டு குறுமையான கண்கருமை நிறம் வாய்ந்து,

உடலில் பச்சை நரம்பு தோன்ற, மாறுபட்ட முகம்தான் இத்தனை காரணங்களுக்கும் ஒரு சாட்சி அடையாளமாகக் காட்டி,

*(தரிக்க - ஆச்சரியப்பட, கொங்கை - நகில், பசுநரம்பு - பச்சைநரம்பு)*

46. பண்டிபெருத் தோரழகுப் பாவித்து வேர்வைசிந்தி
உண்டிவெறுத் துண்ணா துறக்கம் பெரிதாகி

47. ஆக்கைவிட்டு மெய்சோர்ந்து அயர்வருத்தங்
கொண்டு நுனி நாக்குலர்ந்து தாகித்து நாடாதது
நாடி

48. சாலப் புளித்ததுவுந் தண்சுவர்மேற் பூசுமண்ணும்
பாலொத்த நீறும் பலகாலமும் அருந்தி

49. திங்களீ ரைந்தும் திருவயறு வாய்த்ததற்பின்
அங்கங் குழைகுழைந் தாகுலமாய் நொந்துபட்டு

50. வெண்சங் கினமுழங்க வேதியர்பல் லாண்டி
சைப்ப
பண்சங்கை பட்டமொழி பைந்தொடியார் வாழ்த்
தெடுப்ப

தெளிவுரை

வயிறு பெரிதாகி, ஓர் அழகு கொடுத்து, வியர்வை சிந்தி உணவை வெறுத்து, உண்ணாமல் உறக்கம் பெரியதாகி,

செய்யுந் தொழிலை விட்டு மெய் சோர்ந்து, தளர்ச்சி வருத்தம் கொண்டு, தாகத்தால் நுனிநாக்கு உலர்ந்து, விரும் பாததை எல்லாம் விரும்பி,

மிகப் புளித்த பொருள்களும், குளிர்ச்சியான சுவர்மேல் பூசிய மண்ணும், பால்போன்று வெண்மைநிறமான சாம்பலும் பலகாலமும் உட்கொண்டு,

பத்துமாதமும் திருவயிறு பெற்றதற்பின், உடல்வாடி, சோர்ந்து மனம் கலக்கத்துடன் குறைபட்டு,

வெண்மையான சங்கினம் ஒலிக்க, வேதியர் பல்லாண்டு எனும் இசையை இசைக்க, இசைபோன்ற பண் பட்ட மொழியையுடைய பெண்கள் வாழ்த்துக் கூற,

(பண்டி - வயிறு, உண்டி - உணவு, அயர் - மயக்கம், பட்டமொழி - பண்பட்ட மொழி)

51. தேவான வோரும்தேன் மலர்வாரிச் சொரிய
மூவர் கருணை முகத்தா மரைமலர

52. அரம்பையர் கூத்தாட அணிமுரசந் தானார்ப்ப
நிரந்தரமுங் கொண்டல் நீதிமாரிகள்[13] பொழிய

53. பூபாரந் தீரப்பூவோர் இசைபாடி சீர்பாட
ஸ்ரீபாஷ்யம்[14] உரைத்தோன் சிந்தைசெயுந் தேவாகி

54. நாட்டுங் கலியாதி நாற்பத்தி மூன்றானாள்
வேட்டதிரு வைகாசி வெள்ளிநாட் பூரணையில்

55. திருவிசாகத் துதையஞ் செய்ய மடமானார்
மருவிஜயன் ஐயனென்றே வாழ்த்திக் குரவையிட்டு

தெளிவுரை

தேவர்கள் அனைவரும் தேனையுடைய மலரை அள்ளித் தூவ, அருள் கொண்ட மூன்று தெய்வங்களின் முகமாகிய தாமரை மலர,

தேவமகளிர் கூத்தாட, படை வகுத்து நின்ற முரசு இசைக்க, இடைவிடாமல் மேகம் செல்வமாகிய மழையைப் பொழிய,

பூமியின் பாரம் தீர, பூமியிலுள்ளோர் இசைபாடி, புகழ்பாட, ஸ்ரீபாஷ்யத்தைத் தோற்றுவித்த இராமனுஜர் வணங்கும் தெய்வமாகி,

நிலைநிறுத்தும் கலியுகம் துவங்கி, நாற்பத்தி மூன்றாம் நாள், விரும்பிய நல்ல வைகாசி மாதம், வெள்ளிக் கிழமை பௌர்ணமியில்,

நல்ல விசாக நட்சத்திரத்தில் தோற்றம் செய்ய, பெண்கள் தியானித்து, அய்யன் அய்யன் என்றே வாழ்த்திக் குரவையிட்டு,

(தேவானவோர் - தேவர், அரம்பையர் - தேவமகளிர், பூ- பூமி, ஸ்ரீபாஷ்யம் - இராமனுஜர் தோற்றுவித்த நூல், பூரணை - பௌர்ணமி, உதையம் - தோன்றுதல்)

56. பொற்கலத்தில் ஏந்திப் புதுமஞ்சள் நீராட்டி
நற்கலையால் மெய்துடைத்து நாமத்தலம் பார்த்து

57. சற்கரையும் தேனுமொன்றாய்ச் சாரித்து சங்கிலிட்டு
பொற்கொடியார் சேனைப் புகட்டிஉச்சிக்
கெண்ணையிட்டு

58. நெற்றி பிடித்தழுத்தி நீண்டபசுங் கைமுறுக்கி
முற்றுந் தடவி முழத்தாள் இணைநிமிர்த்து

59. சேனை உருவிச்சுடர் மூக்கந் தண்டுருவி
காண இனிய கனிவாய் வசம்பூட்டி

60. புத்திரனைக் கைகொடுத்து போதுவந்து காரியார்[15]
முத்தமிட்டு மூரல் முகத்தாமரை நோக்கி

தெளிவுரை

பொன்னாலாகிய கலத்திலே குழந்தையை ஏந்திப் புதிய மஞ்சள் நீரால் நீராட்டி நல்ல துணியால் உடலைத் துடைத்து கொப்பூழ் தலத்தைப் பார்த்து,

சர்க்கரையும் தேனும் ஒன்றாய்க் கலந்து சங்கில் இட்டுப் பெண்கள் சேனை ஊட்டி, தலை உச்சிக்கு எண்ணெய் தடவி,

நெற்றியைப் பிடித்து அழுத்தி, நீண்ட இளங்கையை முறுக்கி உடல் முழுவதும் தடவி, இரண்டு முழங்கால்களையும் நிமிர்த்து,

காதருகில் உருவி, சுடர் மூக்கின் தண்டை உருவி, பார்ப்பதற்கு இனிய கனிபோன்ற வாயில் வசம்பூட்டி,

காரியார் கையில்வந்து மகவைக் கொடுத்தபோது, புன் சிரிப்புடைய தாமரை போன்ற முகத்தைப் பார்த்து முத்தமிட்டு.

(நற்கலை - வாசனைப் பொருள், நாமத்தலம் - கொப்பூழ் இடம், பசுங்கை - இளங்கை, மூரல் - புன்சிரிப்பு)

61. பூதானங் கோதானம் பூரிதானம் வித்தின்
மாதானம் பூசுரர்க்கும் ஆசுரர்க்கும் தான்வழங்கிட

62. நன்னிலத்தில் பன்னீரண்டா நாளாதி நாதர்திரு
சன்னதியிற் தொட்டிலிலே தக்கோனைக் கொண்டு
வந்து

63. வீரண் கலைஞ்ஞான[16] மேதாவியான் மகிழ
மாறெனென நாமம் வழுவாது சாத்தியபின்

64. ஆனைக் கழுத்தில் அலங்கரித்த (பூந்தே)ரில்
சேனைத் தலைவருடன் செல்வனைக்கொண்
டூர்க்கேகி

65. காதலாய்க் காண்போர்கள் கண்ணேறு வாராமல்
ஆதரவாய் கற்பூர ஆலாத்தீ பங்காட்டி

தெளிவுரை

*பூமி (நிலம்) தானம், பசுதானம், அந்தணர்களுக்குக் கொடுக்கும் தக்கிணை, விதையில் அரைத்த தானியதானம் என அந்தணர்களுக்கும், மணம் முடித்தவர்களுக்கும் வழங்கி,*

நல்ல நேரத்தில் பன்னிரண்டாம் நாள் ஆதிநாதர் திரு சன்னதியில் தொட்டிலிலே சமர்த்தனைக் கொண்டு வந்து,

கல்வி அறிவில் மேம்பட்ட மேதாவியான மகிழ்மாறன் என, குற்றமில்லாமல் பெயர் சூட்டி,

யானைக் கழுத்தில் அலங்கரித்த பூந்தேரில் படைத் தலைவருடன் செல்வனை ஊருக்குக் கொண்டு சென்று,

ஆசைப்பட்டுக் காண்போர்கள் திருஷ்டி வராமல் இருக்க அன்பாய்க் கற்பூர ஆராத்தி தீபம் காட்டி,

*(பூதாளம் - பூமிதானம், கோ - பசு, மா - தானியம், பூசுரர் - அந்தணர், ஆசுரர் - மணம் முடித்தவர், தக்கோன் - தகுதியுடையவன், கலைஞ்ஞான - மேதாவியான; மகிழ்மாறன் - நம்மாழ்வார்)*

66. ஒப்பமிட்ட பொற்கட்டி லுள்ளும்புறத்தும் ஒன்றாய்
செப்பமிட்ட வச்சிரத்தாற் செய்ததிரு தொட்டிலுக்கு

67. வயிரக்கால் நாட்டி வயிடூரி யத்தை
செயிரறுத்து விட்டமென சேர்த்த தனினூடே

68. காண்டகுசோ பைச்சுடரோன் கற்றைக்கதிர் முழுதும்
பூண்டதென்ன நீண்டதங்க பொற்சங்கிலி நாட்டி

69. செஞ்சூரியப் படத்திற்சேர்த் தசிறுமெத் தையின்மேல்
பஞ்சூடு நீலப்படாத்தின் தழுவணையுங்[17]

70. கைக்கொட்டை யுஞ்சிவந்தகாற் கொட்டையுந்
திருத்தி
மெய்க்கு ஏற்க ஏழடுக்கு வெண்பட்டு மேல்விரித்து

தெளிவுரை

அலங்காரம் செய்த பொன்னாலாகிய தகட்டில், அகமும் புறமும் ஒன்றாய் செம்மை செய்த ஒருவகை இரத்தினத்தால் செய்த அழகான தொட்டிலுக்கு,

வயிரக்கால் நிலைநிறுத்தி குறைவில்லாத வைடூரியத் தால் விட்டம் எனச் சேர்த்து அதனின் நடுவே

காண்பதற்கு அழகான சூரியன், திரளான தன்மை யுடையக் கதிர் முழுவதையும் திரட்டி அணிந்தது போன்ற நீண்ட தங்கப் பொற்சங்கிலியும் தூக்கித் தொங்கவிட்டு, சிவந்த சூரியனைப் போன்ற திரைச்சீலையுடன் பொருந்திய சிறுமெத்தையின் மேல் பருத்திப் பஞ்சு பொருந்திய நீலநிறத் திரைச்சீலையின் சாய்மான மெத்தையும்

கைக்குத் தலையணையும், சிவந்த கால்களுக்குத் தலையணையும் வைத்து, உடலுக்கு ஏற்ப வெண்மை நிறப் பட்டு, ஏழு அடுக்கு விரித்து

*(ஒப்பமிட்ட - அலங்காரம் செய்த, வச்சரம் - ஆய்தம், செயிர் - செம்மை, காண்டகு - காணத்தகு, சோபை - அழகு, தழுவணை - தலையணை, கைக்கொட்டை - தலையணை)*

71. சூற்கட்டு மேகத்தில் தோன்றுமுழு ராசிமுத்தின்
மேற்கட்டு கட்டி விடுபூ மழைசிதறி

72. மருக்கொழுந்து பிச்சிஇரு வாட்சிமுல்லை
மல்லிக்கைப்பூ
தருக்கொழுந்து கோகனகம் சாதிவேர் சண்பகப்பூ

73. சூழவிதா னித்துஅதனுள்[18] சோதிஇள ஒளிபோல்
வாழப் பரிவாய் மலர்க்கண் வளரவிட்டு

74. பாந்தள் அரசன்பணா மகுடப்பார்க் காக்கும்
சேந்தர் புகழ்விளக்குந் தெய்வத்தனிச் சுடரோ

75. அங்கண்ணர் யார்க்கும் அருட்கொழும் பாய்நீதி
செங்க(ண்ண)ர் தோன்றச் செழித்தவழித்
தோன்றலோ

தெளிவுரை

கருக்கொண்ட மேகத்தில் தோன்றுகின்ற நட்சத்திரக் கூட்டங்களைப் போல விட்டத்தின் மேலிருந்து கட்டிவிடப் பட்ட உதிரிப்பூக்கள் மழையாகச் சிதறி

மருக்கொழுந்து பிச்சி, இருவாட்சி (இரவில் மலரும் பூ) மல்லிகை, மரத்தழைகள், செந்தாமரை, சாதிவேர், சண்பகப்பூ

விதானத்தைச் சுற்றிலும் இட்டு, அதனுள் சூரிய இளவொளி போல அன்பாய் மலர்போன்ற கண்களை உறங்க வைத்து

படமுடியைக் கொண்டு பாம்புகளின் தலைவன் (அனந்தர்) உலகைக் காப்பது போல மக்களைக் காத்த சேந்தர் மன்னனின் புகழ் விளங்க வந்த தெய்வத் தனிச் சுடரோ?

அருள்சுரக்கும் அழகிய கண்களையுடையவராய், யாவர்க்கும் நீதி வழங்கும் செங்கண்ணர் தோன்றிய வழித் தோன்றலோ

(சூல் - மேகம், ராசிமுத்து - நட்சத்திரம், பாந்தள் - பாம்பு, பண மகுடம் - பாம்பின் படமுடி ,சேந்தர் - திருவழுதி நாட்டை ஆண்ட மன்னர், அங்கண்ணர் - அழகிய கண், செங்கண்ணர் - திருவழுதி நாட்டு அரசருள் ஒருவர்)

76. கச்சுலவு கோலக் கனதனத்தார் சீராட்டி
அச்சுதற்கு மச்சுதரென் றாதரிக்குங் கோளரியோ

77. வங்கர் கலிங்கர் மகதர் திறையீட்டும்
எங்கள்சக் கிரபாணியா ரெண்ணரியப் போர்ஏறோ

78. கார்க்கழியார் வேழக்கடல் தூண்டிமாறு பட்டோர்
போர்கழியர் தாளாண்மை பூத்தகுணக் குன்றமோ

79. மறந்தாங்கிய சமைய வாதியரை வென்றே
அறந்தாங்கி யார்பேர்[19] அறந்தாங்கும் அற்புதமோ

80. ஆழ்வார்கள் ஒன்பதிமார் ஆரியர்முக் கோல்தரித்து
வாழ்வார்கள் தொண்டர்தொண் டர்வாழப்
பிறந்தானோ

தெளிவுரை

*மார்புக்கச்சு உலவுகின்ற அழகிய மார்பை உடைய பெண்கள் பாராட்டி அச்சுதனாகிய அரசனுக்கும் மகன் என்று அன்போடு காக்கும் தன்மையுடைய திருமாலோ?*

வங்கர், கலிங்கர், மகதர் போன்ற நாட்டிலுள்ளோர் கப்பம் செலுத்தும், வகையில் எங்கள் சக்கிரபாணியார் என்று எண்ணக்கூடிய அளவுக்குப் போர் செய்யும் ஆற்றல் படைத்த ஆண்சிங்கமோ?

கடுமையான மேகத்தைப் போன்ற யானைக் கூட்டத்தை எதிர்த்து நின்று வெற்றி பெறக்கூடிய போர்க்கழியார் ஊக்கத்தைப் பெறத் தோன்றிய மலையோ?

*மறத்தை ஆதரித்து வாதாடும் சமயம் சார்ந்தவர்களை வெற்றி கொண்டே பெரிய அறத்தைத் தாங்கி நின்ற அறங் தாங்கியாரின் வழிவந்த அற்புதமோ?*

ஆழ்வார்கள் ஒன்பதுபேர் ஆரியர்களின் வேடமிட்டு முக்கோல் ஏந்தி வாழ்வார்கள், அவ்வாறு தொண்டரின் (திருமால்) தொண்டர்கள் (அடியவர்) வாழப் பிறந்தானோ?

*(கச்சு - மார்புகச்சு, தனம் - மார்பு, கோளரி - திருமால், ஏர் - ஆண் சிங்கம், கார் - மேகம், வேழம் - யானை, தாளாண்மை - ஊக்கம், மறம் - வீரம்)*

81. தண்டமிழும் வேதாந்தசாரப் பெரும் பொருளும்
மண்டலமும் விண்டலமும் வாழப் பிறந்தானோ

82. திருப்பதிநூத் தெட்டுஞ் செழுந்துள பத்தாமம்
மருப்பதிநூற் றெண்மர்களும் வாழப் பிறந்தானோ

83. திருநாளும் மாதத் திருநாளும் சான்றோர்
வருனாளும் என்னாளும் வாழப் பிறந்தானோ

84. தழைவளமுஞ் சேணில் தருவளரும் நீங்கா
மழைவளமும் எவ்வளமும்[20] வாழப் பிறந்தானோ

85. அண்டமாய் அண்டத்தடுக் காய்அடுக் கழகாய்
பிண்டமாய் ஒன்றா பெருந்தகையச் சொன்னாரர்

தெளிவுரை

பெருமை மிக்க தமிழும், ஆற்றல்மிக்க வேதாந்தப் பெரும்பொருளும் மண்ணகமும் விண்ணகமும் வாழப் பிறந்தானோ?

நூற்றியெட்டு திருப்பதியும் செழித்து வளரவும் மறுவுலகில் நூற்றி எட்டுப் பேரும் வாழவும் பிறந்தானோ ?

செடிகொடி வளமும், உயரமாய் வளர்ந்த மரவளமும் குறையாத மழைவளமும் எல்லா வளமும் வாழப் பிறந்தானோ?

பிரபஞ்சமாய், பிரபஞ்சத்திலுள்ள அடுக்காய் அடுக்கு அழியாத உருவற்ற கருவாய் மிக்கப் பெருமையுடையவரைச் சொன்னவர்கள் யார்?

(செழுந்துள - செழித்து வளர, சேண் - உயரமான, தரு - மரம், அண்டம் - பிரபஞ்சம்)

86. அனலும் விசும்பும் அகலிடமும் காற்றும்
புனலும் பொருவும் புராதனனைச் சொன்னாரார்

87. ஆலாகி ஆலினடை யாய்அடை கிடந்த
மாலாகிய எகின வாகனனைச் சொன்னாராரர்

88. பத்திக்கு வித்தாய் பணித்தடங்காப் பண்ணவனை
முத்திக்கும் வித்தாய் முளைத்தவனைச் சொன்னாரார்

89. நல்குரவும் செல்வமும்[21] நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்புமாம் வித்தகனைச் சொன்னாரார்

90. கொங்கார் போதுன்பர்தோறும் கோகனகப்
போதுதோறும்
செங்கால் அனஞ்சேர் திருவழுதி நாடனோ

தெளிவுரை

நெருப்பும் ஆகாயமும் நிலவுலகமும் காற்றும் நீரும் ஆகியவற்றிற்கு ஒப்பாகும் இறைவனைச் சொன்னவர்கள் யார்?

ஆலமரமாகி, ஆலமரத்தில் இலையாய்த் தங்கியிருந்த திருமாலாகிய அன்ன வாகனத்தையுடையவனைச் சொன்ன வர்கள் யார்?

பக்திக்கு விதையாய் அருளிச் செய்து, தளராத மேலா னவனை, வீடுபேற்றிற்கும் விதையாய்த் தோன்றினவனைச் சொன்னவர்கள் யார்?

வறுமையும் செல்வமும் நரகமும் சொர்க்கமுமாய், வெல்கின்ற பகையும் நட்புமாகிய மிக்க அறிவுடையவனைச் சொன்னவர்கள் யார்?

சோலைதோறும் வாசனையுடைய பூக்களும், செந் தாமரை குளங்கள் தோறும் அன்னப்பறவைகள் செல்லும் பாண்டியனின் நாட்டையுடையவனோ?

(அனல் - நெருப்பு, விசும்பு - ஆகாயம், அகலிடம் - நிலவுலகம், புனல் - நீர், அடை - இலை, எகினம் - அன்னம், நல் குரவு - வறுமை, கொங்கர் - வாசனை, போது - சோலை)

91. கால்பாயுஞ் சேற்றுக் கருமேதி பாயவரி
சேலாயும் வாவி திருவழுதி நாடனோ!

92. முன்னம் பழுத்தபலா முட்பிரத்தின் காய்சிதறத்
தென்னம் பழம்வீள திருவழுதி நாடனோ!

93. மஞ்சாலி முத்தோ வயல்முத்தோ காந்தியென
செஞ்சாலி சூழுந் திருவழுதி நாடனோ!

94. மூசுவரி வண்டாட முல்லைமுகை விண்டாடும்
தேசுமுடி கொண்ட திருவழுதி நாடனோ!

95. இருகூர் விழியாரிசை போல்நல் கூகை
குருகூறென் றோதுங் குருகை பெருமானோ!

தெளிவுரை

வண்டி ஓடும் சேற்றில் எருமைகள் மேய, வரிசையாய் கெண்டை மீன்கள் ஆயும் குளத்தையுடைய பாண்டியனின் நாட்டை உடையவனோ?

முன்னர் பழுத்த பலா முள்ளின் வெளியே சிதறத் தென்னங்காய் விழுகின்ற பாண்டியனின் நாட்டை உடையவனோ?

வயிரமாகிய குழந்தை கடல் முத்தோ, வயிர வயிடூரிய முத்தோ, செந்நெல் சூழுகின்ற பாண்டிய நாட்டை உடையவனோ?

வரிசையாய் வண்டுகள் மொய்க்கும்படி, முல்லை அரும்புகள் விரியும் அழகு குடிகொண்ட பாண்டிய நாட்டை உடையவனோ ?

கூர்மையான இரண்டு மை தீட்டப்பட்ட விழிகளையுடைய பெண்களின் இசைபோலக் கோட்டான் குருகூர் என்று சொல்லும் குருகூர் பெருமானோ?

*(கால் - வண்டி, கருமேதி - எருமை, சேல் - கெண்டைமீன், மூசு - மொய்க்கும், விண்டாடும் - விரியும், முகை - மொட்டு, இருகூர் - இரு கூர்மையான)*

96. நாலா கலைப்பொருளும் நால்வேத மும்பயில
கோலா கலைமாங் குருகை பெருமானோ!

97. வெஞ்சரத்தால்[22] புண்படுத்தும் வில்வேடனுங் கொடிய
குஞ்சாரமும் போற்றுங் குருகை பெருமானோ!

98. நாடிவலஞ் சூழந்தசங்க ராசனாம் சங்கமுனி
கோடிவலஞ் சூழுங் குருகைப் பெருமானோ

99. கருவூரன்[23] ஞானியர்கள் காசினியில்[24] வைய்குந்தம்
குருகூறென் றோதுங் குருகைப் பெருமானோ

100. சுழிக்குந் திரைநீர் சுளிதோறும் முத்தம்
கொளிக்கும் பொருணை குருகைப் பெருமானோ

தெளிவுரை

பலவகையான கலைப் பொருள்களும் நான்கு வகை யான வேதமும் கற்க, ஆரவாரமாகும் குருகூர் பெருமானோ?

கூர்மையான அம்பினால் துன்புறுத்தும் வில்லை யுடைய வேடனும் கொடிய யானையும் போற்றுதல் செய்யும் குருகூர் பெருமானோ?

தானாக விரும்பி வலம் சுற்றிய சங்கராசன் என்னும் சங்குமுனி கோடிவலம் சுற்றும் குருகூர் பெருமானோ?

கருவூரன் நாயால் பூலோகத்தில் சுவர்க்கம் குருகூர் என்று சொல்லும் குருகூர் பெருமானோ?

சுழலும் அலைநீர் சுழிதோறும் முத்தம் பொழியும் பொருநை நதியையுடைய குருகூர் பெருமானோ?

*(வெஞ்சரம் - அம்பு, குஞ்சாரம் - யானை, ஞாளி - நாய், காசினி - பூமி, திரை - அலை)*

101. என்றுதாலாட்டும் இசைக்குருகி நங்கை எந்தன்
கன்றுமுலை யுண்ணாது காலங்கழிக்கு மோதான்

102. ஆவாவெனப் பதறி அள்ளியெடுத் தணைத்து
கோவா மணியைக் குறங்கினிடைக்[25] கிடத்தி

103. ஏந்திப்பிடித் திருத்தி ஏலக்குழல் முடித்து
பூந்தெரிய லுஞ்சூட்டி பொற்கொண் டையுஞ்சாத்தி

104. பொன்(னின் அர)சிலைசூழ பொற்பட்டமுஞ் சாத்தி
மின்னின் நக்குஇழைமான[26] வீரப்பட்டமுஞ் சாத்தி

105. திருவும் பிறையும் திகழ்ந்தசுட்டி மீதணிந்து
மருவும் கொடிநெடிய வள்ளைக் குழைபெருக்கி

தெளிவுரை

என்று, தாலாட்டுகின்ற பாடலுக்கு உருகிப் பெண் எந்தன் கன்று பால் உண்ணாமல் காலம் கடத்துமோ?

ஆவாவ் எனத் திடுக்கிட்டு அள்ளி எடுத்து அணைத்து, கோர்க்கப்படாத மணியைத் தொடையின்மேல் கிடத்தி,

தாங்கிப் பிடித்து உட்காரவைத்து வாசனையூட்டக் கூடிய கூந்தலை முடிந்து, பூமாலையும் சூட்டி, பொற் கொண்டையும் அணிந்து,

பொன்னாலாகிய அரைஞாடி சூழ, பொற்பட்டமும் அணிந்து மின்னலைப் போன்ற ஒளியையுடைய வீரப்பட்டமும் அணிந்து

அழகும் பிறையும் திகழ்ந்த நெற்றிமீது சுட்டி அணிந்து மனம் வீசும் நெடிய வள்ளைக் கொடிபோன்ற காதணியும் அணிந்து

(குறங்கு - தொடை, பூந்தெரியல் - நெற்றிச்சூட்டி, அரசிலை - அரைஞாடி, நக்கு - ஒளி, மரு - மணம்)

106. *சீலைக்* குதம்பையிட்டு சீராக வெண்ணையிட்டு
காலைக் கதிரிற் கனத்த குணுக்குமிட்டு

107. வடிந்த குழைக்காதில் மகரக்குழை சாத்தி
படிந்தரத்தினக் கொப்பணிந்து பச்(சை)ச(ம)ணி
வாளியிட்டு

108. மூக்குப்பூ இட்டத்தின்மேல்[27] மூக்கத்தியுஞ் சாத்தி
நோக்குந் திருக்கழுத்தில் நோக்கரிய காரையிட்டு

109. தாலியுமைம் படையுந் தங்கத்தினால் அணிந்து
மாலிகையும் வெண்தரள மாலிகையுங்
கோத்தணிந்து

110. முன்கை முதாரியிட்டு முத்தின் கடகமிட்டு
நன்குபெறு தோள்வளையும் நற்பவளமும் புனைந்து

தெளிவுரை

துணியாலான காதணி இட்டு, ஒழுங்காக எண்ணெய் தடவி, காலை நேரக் கதிரை விட ஒளிநிரம்பிய கனத்த காதணியும் இட்டு,

அழகான தளிர்க்காதில் சுறாமீன் வடிவ குண்டலம் அணிந்து,இரத்தினக் கொப்பு அணிந்து, பச்சை மணியாலான வாளி அணிந்து, மூக்குப்பூ இட்டத்தின்மேல் மூக்குத்தியும் அணிந்து, பார்க்கும் அழகான கழுத்தின் பார்வைக்குச் சிறந்த காறையும் அணிந்து,

தாலியில் ஐம்படைத் தாலியும் தங்கத்தினால் அணிந்து, மாலையும் வெண்மைநிற முத்துமாலையும் கோர்த்து அணிந்து,

முன்கையில் முதாரி இட்டு முத்தினால் ஆன காப்பும் இட்டு நல்ல விலைமிக்க தோள்வளையலும் நல்ல பவளமும் அணிந்து,

*(குதம்பை - காதணி, மகரம் - சுறாமீன், தரளமாளிகை - முத்து மாலை)*

111. வெள்ளிவளை தங்கவளை வேகடஞ்செய்
செம்பொன்வளை
ஒள்ளியதாகக் கரத்துக்கு ஒப்பாய்த் தெரிந்தணிந்து

112. அடைவடமுங் கிங்கிணியும் அமச்சு[28] மரைநாணும்
நிரைமணியுங் கட்டுவடம் நீங்காவரை அணிந்து

113. தண்டைசிலம்பு சதங்கை சிறுதாட் கணிந்து
கெண்டைவிழி மையெழுதிக் கீறுதிரு நாமமிட்டு

114. கட்டாயத் திருநுதலில் கஷ்தூரிக் காப்பெழுதி
பட்டாடை சாத்தி பனிநீா் அயினிசுற்றி[29]

115. அப்பா என்னாருயிரே ஆருயிர்க்கும் ஆருயிரே!
ஒப்பாரு மிக்காரும் இல்லா ஒளிவிளக்கே

தெளிவுரை

வெள்ளி வளையல், தங்க வளையல், மணியின் மாசு நீக்கச் செய்யும் பொன் வளையல் நல்லதாகக் கைக்கு உகந்ததாகத் தேர்ந்தெடுத்து அணிந்து,

இடையில் மணிவடமும், கால் சதங்கையும் அணிந்து அரை நாண் கயிறும் அடர்த்தி குறையாமல் மணியும் அரைக்கு அணிந்து,

மணியோசையை எழுப்பும் தண்டை சிலம்பு சிறிய பாதத்திற்கு அணிந்து, மீன்போன்ற விழியில் கண்மை எழுதி, கோடு போல் திருநாமம் இட்டு,

செறிவான திருநெற்றியில் மான்மத திருநீறு எழுதி, பட்டு ஆடை அணிந்து, வாசனையுடைய நீரால் ஆலாத்தீபம் சுற்றி,

அப்பா; என் ஆருயிரே; ஆருயிர்க்கும் ஆருயிரே; தகுதி உடையவர்களும் தீமை செய்பவர்களும் இல்லாத ஒளி விளக்கே;

(வேகடம் - மாசு நீக்குதல், அமச்சு - இடுப்பில் கட்டும் அணி, கஷ்தூரி காப்பு - நெற்றியில் வரையும் அடையாளம்)

116. கண்ணுக் கினியானே கட்டழகில் மிக்கானே
பண்ணுக் கினியானே பாகொழுகு சக்கரையே

117. தேனின் மதுரமே செங்கருப்பந் தீம்பாலே
மானேர் விழியார் மனமுருக்கும் குஞ்சரமே

118. செல்வக் குலமயிலே தேமாம்பழச் சுவையே
கல்விக் களஞ்சியமே காமருசீர் ஓவியமே

119. கிட்டாத் திரவியமே கேடில்லா மெய்யுணர்வே
அட்டாங்க யோகத்து ஆணி பசும்பொன்னே

120. பேறளிக்கும் வித்தகனே பிள்ளைமயில் மாணிக்கமே
கூறரிய நித்திலமே கோமேதகத் தெளிவே

தெளிவுரை

கண்ணுக்கு இனிமையானவனே; கட்டழகில் மிகுந்த வனே; அலங்காரத்திற்கு இனிமையானவனே; பாகு ஒழுகக் கூடிய சர்க்கரையே;

*தேனின் இனிமையே; சிவந்த கரும்பின் இனியபாலே; மான் போன்ற விழியையுடைய பெண்களின் மனதை அச்சுறுத்தும் யானையே*

*செல்வமான குலத்தின் மயிலே; தேன் போன்ற மாம்பழத்தின் சுவையே! கல்விக் களஞ்சியமே; விரும்பத்தக்க சிறந்த ஓவியமே;*

*கிடைக்காத பொருளே; கேடில்லாத உண்மை உணர்வே; எண்வகை யோகத்துக்கும் உயர்ந்த பசுமையான பொன்னே;*

*பயன்அளிக்கும் அறிஞனே; பிள்ளையாகிய மயிலே; மாணிக்கமே; விலைமதிப்பற்ற நித்திலமே; தெளிவான கோமேதகமே;*

*(மானேர் - மான் போன்ற, அட்டாங்கயோகம் - எண்வகை யோகம், (இமயம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி), ஆனிப் பசும்பொன் - உயர்ந்த பொன், நித்திலம் - முத்து, கோமேதகம் - நவமணிகளில் ஒன்று)*

121. நந்தாத கோமளமே நாடறியா சொற்பொருளே
சிந்தா மணிவடிவே தித்திக்குத் தெள்ளமுதே

122. அல்லல் ஒழிக்கும் அருமை பெருமானே
நல்ல திருமானே நாவீ றுடையானே

123. திருவிசா கத்தில்வந் ததெய்வத் தனிச்சுடரே
சுருதியா ராயுந் தொடரிமலைக் காவலனே

124. பொருணைத் துறையானே பொதியமலைக் காவலனே
குருகைப் பெருமானே குமரித் துறையானே

125. செம்மலே நாவில் தெகிட்டாத முக்கனியே
அம்மமுண்டு கண்டுயில்வாய் அற்புதனே என்றேற்றி

தெளிவுரை

*குறைவில்லாத கோமளமே! நாடு அறியாச் சொல்பொருளே! சிந்தாமணி வடிவே! இனிக்கக்கூடிய தெளிந்த அமுதே!*

*துன்பத்தை ஒழிக்கும் அருமைப் பெருமானே! நல்ல திருமகனே நாவுச் சிறப்புடையவனே!*

நல்ல விசாக நட்சத்திரத்தில் வந்த தெய்வத் தனிச்சுடரே! வேதம் ஆராய்கின்ற துடரிமலைக்கு நாயகனே!

தாமிரபரணித் துறையை உடையவனே! இமய மலைக்குக் காவலனே! குருகூர் பெருமானே! குமரித்துறை யானே!

தலைமகனே! நாவில் திகட்டாத முக்கனியே! பால் குடித்துக் கண் உறங்குவாய் அற்புதனே என்று புகழ்ந்து

(கோமளம் - மாணிக்க வகை, சிந்தாமணி - விரும்பியதைக் கொடுக்கும் தெய்வ இரத்தினம், அல்லல் - துன்பம், சுருதி - வேதம், செம்மல் - தலைமகன்)

126. ஒக்கலைமேற் கொண்டுமுலை யூட்டநினைத்
தூறுபால்
தக்கபடி முன்னே தரையிற் சிறிதூற்றி

127. கோகனகச் செவ்வாயிற் கொம்மைமுலைப் பிடித்து
மாகனகக் கையால் மடிதிருத்தும் பொழுதினிலே

128. மைந்தன் கடவாய் வழியே வழிந்தொழுகக்
நைய்ந்து பயப்பட்ட நல்லார் தமைநோக்கி

129. எங்கள் குடிக்கும் இறையோன் பெருங்குடிக்கும்
உங்கள் குடிக்கும் ஒருமகவாய்த் தோன்றினான்

130. பாலுண்ண வில்லை பசித்தழவோ தானில்லை
மேலுண்பான் என்றால் விழியுந் திறக்கஇல்லை

தெளிவுரை

இடுப்பின் மேல் கொண்டு பால் ஊட்ட நினைத்து ஊறிய பாலை தகுந்தபடிமுன்னே தரையில் கொஞ்சம் ஊற்றி,

தாமரை போன்ற சிவந்த வாயில் வட்ட முலையைப் பிடித்துப் பெரிய பொன்போன்ற கையால் மடக்கி இருத்தும் பொழுதினிலே, மகனின் கடவாய்வழியே பால் வழிந்து ஒழுக, தளர்ந்து பயப்பட்ட நல்லவர்களைப் பார்த்து,

எங்கள் குலத்திற்கும், சிவபிரானின் பெரிய குலத்திற்கும் உங்கள் குலத்திற்கும் ஒரு குழந்தையாய்த் தோன்றினான்.

பால் உண்ணவில்லை பசித்து அழவோ தானும் இல்லை. மேலும் உண்பான் என்று நினைத்தால், கண்களையும் திறக்கவில்லை.

(ஒக்கலை - இடுப்பு, ஊறுபால் - ஊறுகின்ற பால், நைய்ந்து - தளர்ந்து)

131. உச்சிக் குழியஇல்லை உள்ளங்கால் வேர்க்கவில்லை
அச்சங்கை யுண்டாம் அரிவையரிங்[30] கெய்தவில்லை

132. இயக்கம் ஒன்றுங்கா ணேன்இளைத்து இளைத்து[31]
மயக்கம் பெரிதாயி மருண்டிடவும் தானுமில்லை.

133. கலைஒண்ணாத் திங்கள்நுதல் கன்னியரே! தாயாரே!
முலைஉண்ணாப் பிள்ளைகளை மூவுலகில் கண்டதுண்டோ

134. பெண்கொடியீர் அம்மம்உண்ணப்[32] பேதலித்துப் பண்டியெக்கி[33]
கண்பிசைந்துவாய்காட்ட காதலரைக் கண்டதுண்டோ

135. பெண்ணீர்மெல் நீங்கள்பெற்ற பிள்ளைகளில்
சேனைமுதல் உண்ணாது பூரிக்கும் உத்தமரைக் கண்டதுண்டோ

தெளிவுரை

உச்சி குழியவில்லை உள்ளங்கால் வியர்க்கவில்லை. அச்சத்தை உண்டாக்கியதால் பெண்கள் இங்கு அணுக வில்லை.

அசைவதை ஒன்றும் அழுது நான்காணவில்லை. ஏங்கி ஏங்கி மயக்கம் அதிகமாகி மிரளவுமில்லை.

கலை நரம்பாத சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய பெண்களே! தாய்மார்களே! பால் உண்ணாத பிள்ளைகளை மூவுலகில் கண்டதுண்டோ?

பெண்களே! உணவு உண்ண விருப்பமில்லாமல் வயிற்றை உள்ளிழுத்துக் கண்ணைக் கசக்கி வாய்காட்டாத அன்பரைப் பார்த்தது உண்டோ?

பெண்களே! நீங்கள் பெற்ற குழந்தைகளில் சேனை தொடங்கி எதுவும் சாப்பிடாமல் உடல் பெருக்கும் நல்ல குணங்களை யுடையவரைக் கண்டது உண்டோ?

(சங்கை - பயம், கலை - சந்திரனின் பதினாறு பகுதிகளில் ஒன்று (பிறை), எக்கி - வயிற்றை உள்ளிழுத்தல், சேனை - குழந்தை பிறந்ததும் ஊட்டும் மதுரநீர்)

136. கைகால் அசையாமற் கண்ணும் விழியாமல்
மெய்வாய் திறவாத வித்தகரைக் கண்டதுண்டோ

137. இருத்தினால் எட்டுநாள் ஆகிலும்[34] அவ்வண்ணம்
இருக்குங் குழந்தைகளை இவ்வுலகில் கண்டதுண்டோ

138. எடுத்துக் கிடத்தினால்[35] யான்கிடத்தும் அவ்வண்ணம்
படுத்திருக்கும் பாலகரை பாருலகில்
கண்டதுண்டோ

139. பண்பினுடன் மையெழுத பையத் திறந்துபின்னை
கண்திறவாப் பாலகரை கா(சினியி)ற் கண்டதுண்டோ

140. மறுகியன்னை நின்று மயங்கினால் ச(ற்றே)
குருமு(ரல் செய்யுங்) கு(ழவிலை)யயுங் கண்டதுண்டோ

தெளிவுரை

கைகால் அசையாமல் கண்ணும் திறக்காமல் மெய்வாய் திறக்காத மிருந்த திறமையுடையவரைக் கண்டது உண்டோ?

இருக்கச் செய்தால் எட்டுநாளானாலும் அந்த வகையே இருக்கும் குழந்தைகளை இவ்வுலகில் கண்டதுண்டோ?

எடுத்துப் படுக்கவைத்தால், நான் படுக்க வைக்கும் அந்த முறையில் படுத்திருக்கும் குழந்தையைப் பாருலகில் கண்டது உண்டோ?

பண்பினுடன் கண்ணுக்கு மை எழுத மெதுவாகத் திறந்து பின்னர் கண் திறவாத பாலகரைப் பூமியில் கண்டதுண்டோ?

ஏங்கி நின்று அன்னை மயங்கினால் கொஞ்சம் புன்சிரிப்பு செய்யும் குழந்தையையுங்கண்டது உண்டோ?

(குறுமுரல் - புன்சிரிப்பு, குழவி - குழந்தை)

141. ஈதேது மாயமோ! எண்ணமுடி யாதென்றார்
மாதே! குழந்தையை நம்மால்முன்
வைப்போமென்றார்

142. நன்றுரைத்தீர் தாதி நாராயணன் செயலே
என்றுரைத்தன் கணவற்கு[36] இவ்வண்ணஞ்
சொன்னதற்பின்

143. தன்சுடரோ னெனவண்ண தந்தச் சிவிகையின்மேல்
எண்சுடரோ னென்னஎழுந் தருளப் பண்ணிவித்து

144. பல்லியமுஞ் சங்கினமும்[37] பம்புமுகில்
போல்முழங்க
மெல்லியியலார் ஆலவட்டம் வெண்சா மரையிரட்ட

145\. பூச்சக்கிர வாளப் புவியோர் புடைசூழ
மாச்சக்கிர வாளவண்ண வட்டக் குடைநிழற்ற

தெளிவுரை

இது என்ன மாயமோ சிந்திக்க முடியாது என்றார். பெண்ணே குழந்தையை நாம் மால்முன்னர் வைப்போம் என்றார்.

நல்லது கூறினீர்கள் பணிப்பெண்களே! எல்லாம் நாராயணன் செயலே என்று கூறி, தன் கணவர்க்கு இந்த முறையில் சொல்லிய பின்,

குளிர்ச்சியான சூரியன் போன்ற வண்ணநிற தந்தத்தால் ஆன சிவிகையின் மேல் எளிமையான சந்திரன் போல தோன்றிடச் செய்து,

பலவகை வாத்தியமும் சங்கு இனமும் மென்மை யான பெண்கள் விசிறிக் கொண்டு வெண்சாமரை வீச,

சக்கரவாளமாகிய பூமியிலுள்ளோர் (மக்கள்) புடை சூழ, பெரிய சக்கரத்தைப் போன்ற வண்ணநிற குடைகள் வீசப்பட

(சிவிகை - பல்லக்கு, பம்பு முகில் - இடிமுழக்கம்)

146\. சங்கீத மேள(ம் ச)திமுறையாக கப்பயிலே
நங்கீதங் கேளுமென நார(தர்யா)ழ் வ(ா)சிப்ப

147\. கயரதவா[38] சிப்படையீர் காலாட் படைமிடைய
செயசெய என்றோதிச் செகவேந்தர் நின்றிறைஞ்ச

148\. நீலமலைபோற் பொலிந்து நின்றபெருமான் திருமுன்
கோலமலைபோற் பொலிந்த கோதிலாப் பாலகனை

149\. தெண்டநிட விட்டதிருத் தாய்முகங் குளிரக்
கண்டுகண்டு காரியார் கண்கள் களிகூர

150\. சுற்றத்தார் பின்னோட தொல்புவியோர் பூரிக்க
பற்றற்றார் கொண்டாட பாகவதர் ஏத்தெடுப்ப

தெளிவுரை

சங்கீதத்தின் இசை தாளம் மாறாமல் வாசிக்க நம் பாட்டை கேட்பீராக என நாரதர் யாழ் வாசிக்க,

யானை, ரதம், குதிரைப்படையை உடையவர்கள் காலாட்படையுடன் கலக்க, செய செய என்று கூறி உலக அரசர்கள் எல்லாம் நின்று வணங்க,

நீலமலைபோல் அழகுற்று நின்ற பெருமான் திருமுன், அழகான மலைபோல் விளங்கிய களங்கமில்லாக் குழந்தையை,

வணங்கும்படி செய்த திருத்தாய்முகம் குளிர்ச்சி யடையப் பார்த்துப் பார்த்துப் பெண்கள் மகிழ்ச்சி பொங்க,

உறவினர்கள் பின்னால் தொடர பழமையான மக்கள் மகிழ்ச்சியடைய, ஆசையைத் துறந்தவர் கொண்டாட, பாகவதர் வாழ்த்த,

*(நங்கீதம் - நம்கீதம், கயம் - யானை, வாசி - குதிரை, காரியர்கள் - பெண்கள், பற்றற்றார் - முனிவர்கள்)*

151. காதசைய தோளசைய கையசைய தாளசைய
தா(தசை)யப் பூவ(சையத் த)ாரசைய மெய்யசைய

152. மேருவிமா னமெனுமேவி உறைகோயிற் சுற்றி
பேருகத்தின் சீர்மை பெருகும் துவாபரத்துள்[39]

153. ஒருகத்த வானித்திரு மூலத்தியுற் பவித்து
தாருவுர கப்புளிக்கீழ் தானே தவிழ்ந்தோடி

154. தெற்கே முகநோக்கிச் செய்யபது மாசனத்தில்
விற்கேழ் நுதலார் விரகால்[40] நலங்கடந்த

155. போதத் தளவே புதிது புதிதாக
சீத(ப்) பு(னி)தத் திருவுள்ளம் வேரூன்றி

தெளிவுரை

காது அசைய, தோள் அசைய, கை அசைய, பாதம் அசைய, இயற்கைப் பொருள் அசைய, பூமி அசைய, மாலை அசைய, உடல் அசைய

மேருமலையாகிய விமானத்தையுடைய ஆதிநாதர் கோயில் சுற்றி, பெரிய யுகத்தின் புகழ் பெருகும் துவாபரத்துள் (நான்கு யுகங்கங்களுள் ஒன்று)

ஒரு பற்றுக்கோடாகிய ஆனிமாதம் மூலநட்சத்திரத்தில் தோன்றிய அரவாகிய புளியமரத்தின் கொம்பின்கீழ் தானே தவழ்ந்து ஓடி,

நீலமலைபோல் அழகுற்று நின்ற பெருமான் திருமுன், அழகான மலைபோல் விளங்கிய களங்கமில்லாக் குழந்தையை,

வணங்கும்படி செய்த திருத்தாய்முகம் குளிர்ச்சி யடையப் பார்த்துப் பார்த்துப் பெண்கள் மகிழ்ச்சி பொங்க,

உறவினர்கள் பின்னால் தொடர பழமையான மக்கள் மகிழ்ச்சியடைய, ஆசையைத் துறந்தவர் கொண்டாட, பாகவதர் வாழ்த்த,

(நங்கீதம் - நம்கீதம், கயம் - யானை, வாசி - குதிரை, காரியர்கள் - பெண்கள், பற்றற்றார் - முனிவர்கள்)

151. காதசைய தோளசைய கையசைய தாளசைய
தா(தசை)யப் பூவ(சையத் த)ாரசைய மெய்யசைய

152. மேருவிமா னமெனுமேவி உறைகோயிற் சுற்றி
பேருகத்தின் சீர்மை பெருகும் துவாபரத்துள்[39]

153. ஒருகத்த வானித்திரு மூலத்தியுற் பவித்து
தாருவுர கப்புளிக்கீழ் தானே தவிழ்ந்தோடி

154. தெற்கே முகநோக்கிச் செய்யபது மாசனத்தில்
விற்கேழ் நுதலார் விரகால்[40] நலங்கடந்த

155. போதத் தளவே புதிது புதிதாக
சீத(ப்) பு(னி)தத் திருவுள்ளம் வேரூன்றி

தெளிவுரை

காது அசைய, தோள் அசைய, கை அசைய, பாதம் அசைய, இயற்கைப் பொருள் அசைய, பூமி அசைய, மாலை அசைய, உடல் அசைய

மேருமலையாகிய விமானத்தையுடைய ஆதிநாதர் கோயில் சுற்றி, பெரிய யுகத்தின் புகழ் பெருகும் துவாபரத்துள் (நான்கு யுகங்களுள் ஒன்று)

ஒரு பற்றுக்கோடாகிய ஆனிமாதம் மூலநட்சத்திரத்தில் தோன்றிய அரவாகிய புளியமரத்தின் கொம்பின்கீழ் தானே தவழ்ந்து ஓடி,

தெற்கே முகம் பார்த்து பத்மாசனத்தில் அமர வில் போன்ற புருவம் கொண்ட நெற்றியையுடைய பெண்கள் வேதனையால் துயருற,

அறியாத மக்கள் மீது இரக்கம் கொண்டு, புதிது புதிதாக அருள் மொழிகளைக்கூறி,

(தாது - இயற்கைப் பொருட்கள், பூ - பூமி, தார் - மாலை, மேரு - இமயமலை, மேவி- அடைந்து, துவாபரம் - நான்கு யுகங்களுள் ஒன்று, தாரு - மரக்கொம்பு, உரகம் - பாம்பு, கேள் - புருவம், விரகு - வேதனை (தாபம்) சீதம் - குளிர்ச்சி)

156. கண்ணனடி கமலங் காமித்து மெய்யானக்
கண்ணனென உண்மை கரமுத்திரை தரித்து

157. நாசிநுனி நோக்கி நாட்டம் பிரழாமல்
மூசியெதி ரோடுபெரு மூச்சுகத் தூணில்

158. மார்பை[41] நிமிர்ந்துதிரு மந்திரமே தாரகமாய்
ஆர்வமுடன் கொப்பூழில் அம்புயவா[42] மக்கரத்தை

159. வைத்துயோகத் திருந்தவாறு தரிசித் துலகோர்
மொய்த்து வழிபட்ட முறைநோக்கி ஈராறும்

160. திங்கள்மட்டாய் ஆவிபெற்ற சித்திரம்போ லச்சிறந்த
மங்கலரூ பத்தினெழில் வாய்த்த சிறுபாலன்

தெளிவுரை

உண்மையான மெய்ஞானமுடைய கண்ணனைப் போலக் கை முத்திரை கொண்டு, கண்ணன் பாதமாகியத் தாமரை மலரைக் காண்பித்து,

சிந்தை குழையாமல் மூக்கின் நுனியைப் பார்த்து, மூச்சுக் காற்றை அகத்துள் அடக்கும் ஆர்வத்தில்,

மார்பை நிமிர்த்து இருந்து, மந்திரமே பிரணவமாய், உந்திக் கமலத்தினருகில் இடது கையை வைத்து,

யோகநிலையில் இருந்த நிலையில் உலகிலுள்ள வர்கள் நெருங்கி வழிபட்ட முறையைப் பார்த்து,

பன்னிரண்டு நாளும் ஓவியம் உயிர்பெற்றதைப் போன்று மங்கலமான உருவத்துடன் அழகுவாய்ந்த சிறுகுழந்தை,

*(மூசி - மூச்சு; தாரகம்- பிரணவம்; வாமம் - இடது; திங்கள் - நாள்; ரூபம் - உருவம்; எழில் - அழகு)*

161. தவழ்ந்ததொன்றும் போதுமெனத் தங்களிலே
சொல்லியபின் உவந்து பார்த்துள் ளங்களிப் பாகி

162. திருப்புளிக்கீழ் வீற்றிருந்த சேயை எடுத்தளவில்
பொருப்பையசைத் தாலும்இந் தப்புத்திரன்
வாரானுமென்றே

163. நங்கைமட மா(துை)ரக்க நங்காரியார் ப(ரிவ)ால்
அங்கைகொடு சீராய் அ(ணை)த்தெடுத்துப்
பார்த்ததற்பின்

164. மானார் எடுத்தார் மகவுடையோர் தாமெடுத்தர்
ஆனாத செங்கோலர சரெல்லாம் வந்தெடுத்தார்

165. நானா வித்தாலும் நம்மாலும் அசைபடான்
ஆனாலும் இந்தமைந்தன் ஆணைக்குந்
தானசை(சய)ான்

தெளிவுரை

தவழ்ந்தது ஒன்றே போதும் என்று தங்களுக்குள்ளேயே கூறியபின் மகிழ்ந்து பார்த்து, உள்ளம் மகிழ்ச்சி பொங்கி,

திருப்புளிய மரத்தின்கீழ் அமர்ந்திருந்த குழந்தையை எடுத்த நிலையில், மலையை அசைத்தாலும் இந்தக் குழந்தை அசையமாட்டான் என்றே

நங்கையார் கூற, நம் காரியார் அன்பால் உள்ளங்கை கொடுத்து அணைத்து எடுத்துப் பார்த்த பின்னர்,

இளம்பெண்கள் எடுத்தனர். குழந்தையை பெற்ற பெண்களும் எடுத்தார்கள். செங்கோலாட்சி புரியும் பலதேச அரசர்கள் எல்லாரும் வந்து எடுத்தார்கள்.

பலவிதங்களிலும் நம் மால் அசையமாட்டான், ஆனாலும் இந்தக் குழந்தை கட்டளைக்கும் தான் படிய மாட்டான்.

*(பொருப்பு - மலை; அங்கை - உள்ளங்கை; மானார் - பெண்கள்; நானாவித்து - நாலாவிதம் (பலவகை))*

166. என்றெவருங் கூற இரங்கித் தாங்கியவர்
மன்றல் மலர்க்கூந்தல் வ(டிவு)டைய
நங்கைமின்னாள்
167. கைசோர உள்ளங்கரை யக்கண்ணீர் சொரிய
மெய்சோரக் கால்சோர வி(ம்ம)ல் பொருமலுமாய்
168. நோய்விட்டுப் பின்னும் நோய்பிடித் தாற்போல்
வாய்விட் டழுதரற்ற மாட்டாமல் உள்ளடக்கி

169. அன்று(போற்) போட்டஅணை[43] ஆடைஅயிற்
கிடவான்
இன்றுதவழ்ந் தோடவைத்த எம்பெருமானே
யிரங்காய்

170. சாத்திரற்குங் காணாத் தாமோதரா இரங்காய்
வீற்றிருக்கப் பண்ணிவித்த மெய்ப்பரந்தாமா
இரங்காய்

தெளிவுரை

என்று எல்லாவருங் கூற, மணம் வீசக்கூடிய மலரணிந்த கூந்தலையுடைய நங்கையை கண்டுக் இரக்கம் கொண்டு தாங்கிட,

கைசோர்வடைய, உள்ளம் கரைந்து கண்ணீர் வடிக்க உடல் சோர்ந்து, கால் சோர்வடைய, விம்மலும் பொருமலுமாய்

பிடித்த நோய் விட்டு மீண்டும் பிடித்தாற்போல், வாய் விட்டுக் கதறி அழுக முடியாமல் உள்ளத்தில் அடக்கி,

அன்று போட்டபடியே அணை கொடுத்த ஆடையில் கிடந்தவனை இன்று தவழ்ந்து ஓடவைத்த எம்பெருமானே இரக்கம் கொள்வாய் தேவர்களும் காணமுடியாத தாமோதரனே இரக்கம் கொள்வாய் வீற்றிருக்கச் செய்த பரந்தாமனே இரக்கம் கொள்வாய்!

(மன்றல் - மணம்; அரற்ற - புலம்ப; அயில் - உணவு; சாத்திரர் - தேவர்களுள் ஒரு பிரிவினர்)

171. அறமே இரங்காய் அருள்மூர்த்தியே இரங்காய்
மறமே இரங்காய் வனதேவதா இரங்காய்

172. விண்ணே இரங்காய் விதிவலியே சற்றிரங்காய்
மண்ணே இரங்காய் மதியாதவா இரங்காய்

173. ஆரிரங்கப் போறாரென்று ஆகுலிக்கும் அக்காலம்
. பாரிடங்கர் ஒட்டப் படித்தமந்திர வாதியரும்

174. பண்டிதரும் தங்கள்தங்கள் பார்வைக்கும் மூலிகைக்கும்
தண்டுத லில்லாது மனஞ்சலித்துத் தடுமாறும்

175. செய்கைதனில் பேதலித்து சிந்தா குலைந்துலைந்து
கைதவம்[44] என்பார்சிலவர் காரணமென்பார் சிலவர்

தெளிவுரை

அறமே இரக்கம் கொள்வாய். அருளுகின்ற மூர்த்தியே! இரக்கம் கொள்வாய். மறமே! இரக்கம் கொள்வாய், வனதேவதையே! இரக்கம் கொள்வாய்!

விண்ணுலகே இரக்கம் கொள்வாய்! விதி வலிமையே கொஞ்சம் இரக்கம் கொள்வாய்! மண்ணுலகே இரக்கம் கொள்வாய்! குபேர யாதவனே இரக்கம் கொள்வாய்!

யார் இரங்குவார்கள்? என்று துன்பப்படும் அவ்வேளையில் உலகத் துன்பங்களைப் போக்க வல்ல மந்திர வாதியரும்,

மருத்துவரும் தங்கள் தங்களுக்கு இயன்றவரை தெரிந்த மந்திரங்களையும், மருத்துவங்களையும் பயன்படுத்தி விருப்ப மில்லாது மனம் சலிப்படைந்து என்னவாக இருக்கும் என்று தடுமாறி,

செயல்களில் மாறுபட்டு, மனம் குழப்மடைந்து, இது பொய்யான தவம் என்பார் சிலர்; காரணம் தெரியவில்லை என்பார் சிலர்;

(மதியாதவர் - குபேரக்கண்ணன்; ஆகுலிக்கும் - வேதனைப்படும்; இடங்கர் - துன்பம்; தண்டுதல் - வருத்தம்; கைதவம் - பொய்)

176. சேனைமுதல் வனென்பார் செய்தவத்தோர் காணென்பார்
ஆணையிடர் ஒழித்த அச்சுதன் காணென்பாரும்

177. அவ்வவர் தங்கள்தங்களுக்கு ஆனப்படி சொல்வதெல்லாம்
கவ்வைபெரிதாய் கேட்டு கான்முளையை விட்டகலார்

178. இன்னம்[45] பருணிதவர்வந் தெய்தினர்தம் பாக்கியத்தால்
அன்னமுன்ன வாய்பேசார் ஆதரிக்கும் பண்ணிவித்தால்

179. ஆகாதோ என்றேயனை வோரும் அங்கு(வி)ட்டு
போகாது காத்திருந்து புத்திரனுக்கு அன்னையர்கள்

180. எவ்வண்ணஞ் சீராட்டி எவ்வண்ணம் பாராட்டி
எவ்வண்ணம் போற்றுவார் இவ்வண்ணஞ் செய்துவந்தார்

தெளிவுரை

சிலர் சேனைத் தலைவர் என்பார். சிலர் செய்கின்ற தவத்தை உடையவனைப் பார் என்பார். துன்பத்தை ஒழிக்கவந்த அச்சுதன் பார் என்பவரும்

அவரவர் தங்கள்தங்களுக்குத் தெரிந்தபடியெல்லாம் சொல்லும் ஆராவாரத்தைக் கேட்டு, குழந்தையை விட்டு அகலாமல் இருந்தனர் பெற்றோர்.

இன்னும் புலவர்கள் வந்து சேர்ந்தனர். நம் புண்ணியத்தால் யாராவது உணவு உண்ணவும் வாய்பேசவும் செய்வித்தால்

ஆகாதோ என்றே அனைவரும் குழந்தையை விட்டுப் போகாமல் காவல் காத்து,

குழந்தைக்கு அன்னைமார் எப்படி சீராட்டி, எப்படிப் பாராட்டி, எப்படி காப்பார்களோ அப்படியே செய்து வந்தார்கள்.

*(சேனை - படை; இடர் - துன்பம்; கவ்வை - ஆரவாரம்; கான் - குழந்தை; பருணிதர் - புலவர்)*

181. ஆண்டுதோறும் ஆண்டுதோறும் அங்கம்அவை யவங்கள்
நீண்டு அசைந்து நிரந்தரமும் பூரித்து

182. பரவசம் ஆகி பராபத்தியே பண்ணி
நிரவதிக[46] ஞானம் நியமநிலை உண்டாகி

183. பேரோகை அன்பால்[47] பிதிரோடக் கொங்கைவிம்மி
வாரோ டிகலும ருக்கமுந்தான் கண்டுகண்டு

184. மாறா! வழுதிகுல வாழ்வே! மலக்குநா
வீறா![48] புவிவேந்தர் வேந்தே குருகூறா

185. பொற்காரியார் உனக்கு பொற்கழங்கும் பொற்பந்தும்
பொற்காம தேனும் பொற்பூவும் வரவிட்டார்

தெளிவுரை

ஆண்டுதோறும் ஆண்டுதோறும் உடல் உறுப்புக்கள் வளர்ந்து இடைவிடாமல் பூரித்து

பரவசமடைந்து, பரமனிடத்தில் பக்தி செய்து, எல்லை இல்லாத உயர்ந்த ஞானம், பூஜை முதலியவற்றில் கடைபிடிக்கப் படும் நியமநிலை உண்டாகி

பேருவகை அன்பாய் வழிந்தோட, மார்பு விம்மி மார்புகச்சு இறுகி, தாய்ப் பாசத்தைமட்டுமே பார்த்து, பார்த்து

மாறா! பாண்டியர் குல செல்வமே! நாவீறனே! உலகிலுள்ள அரசர்களுக்கெல்லாம் அரசனே! குருகூறா

பொற்காரியார் உனக்கு விளையாட பொன்னாலான கழங்கும், பொற்பந்தும், பொன்னாலான காமதேனும், பொன்னாலான பூவும் வரவிட்டார்

186. தென்னர் சிறுதேரும் சிறுபறையுந்[49]
தொட்டிலும்செம்
பொன்னின் அம்மானையும் புதிதாய் வரவிட்டார்

187. சப்பாணி கொட்டித் தளர்நடையிட்டு அப்பூச்சி
எப்போதுங் காட்டியெமக் கின்பம் தருவாய்

188. திருமஞ்சி னமாட்டி சிற்றாடையுஞ் சாத்தி
மருமஞ்சரி சூட்ட மாதரார் வந்து நின்றார்

189. சிற்றில்சிதைத் தழிக்கும் சிற்றடியைக் காணவென்றே
சிற்றில் பலகோலித் தெரிவையர்கள் சூழ்ந்துநின்றார்

190. வேலையிட்ட கண்ணாளே மெய்யழகைப் பார்த்துப் பூ
மாலையிட்டு நிற்கும் மணக்கோலம் காணவந்தார்

தெளிவுரை

பாண்டியர் சிறிய தேரும், சிறிய பறையும், தொட்டிலும், செம்பொன்னாலான அம்மானையும் புதியதாக வரவழைத்தார்.

சப்பாணி கொட்டி தத்திதத்தி நடந்து, பூச்சி எப்போது காட்டி என்னை மகிழ்விப்பாய் ?

மஞ்சள் நீரால் நீராட்டி, ஆடையும் அணிந்து, மணம் கமழும் பூக்களையும் சூட்ட பெண்கள் வந்து நிற்கின்றனர்.

மணல் வீடுகளைச் சிதைத்து அழிக்கும் அச்சிறிய பாதத்தைக் காண வேண்டுமென்று பல மணல் வீடுகளைச் செய்து வைத்துப் பெண்கள் சூழ்ந்து நிற்கின்றனர்.

வேல்போன்ற கண்களாலே உடல் அழகைப் பார்த்து, பூமாலையிட்டு நிற்கும் மணக்கோலத்தைக் காணவந்தார்.

உடல் அழகைப் பார்த்து, பூமாலையணிந்து நிற்கும் மனர்க்கோலத்தைக் காணவந்தார்.

(தென்னர் - பாண்டியர், அம்மானை - கழங்கு; சப்பாணி - இரண்டு கையையும் சேர்த்து 'சப்' எனும் ஓசை எழக் கொட்டுதல்; அப்பூச்சி - ஒளிந்து விளையாடுதல்; மஞ்சினம் - மஞ்சள் நீர்; மரு - மணம்; மஞ்சரி - பூங்கொத்து; கோலி - செய்து; வேலை - வேல்)

191. அமரினும் மாறனழ குடையா னென்றே
குமரிருந்த மாதர்மடல் கொண்டெழுதிப்
பார்க்கின்றார்

192. உன்கணவ னோமடவீர் உன்னிலும்
பெண்மைமிக்காய்
என்கணவ னென்றே யிகலிமயல் கொண்டுநின்றார்

193. இளவரசு தேவரீ ரெங்களுக் கென்றேத்தி
வளவரசர் கப்பமலை போற்குவித்து நின்றார்.

194. பெருவழுதி நாடாளும் பிள்ளையிவ னென்றே
திருவபிஷே கம்புனைய தேசிகரெல்லா ரும்வந்தார்

195. ஏதேனும் எண்ணாதி ருக்கின்றதும் இயல்போ
நாதா எனவுரைத்து நாட்கழிக்குங் காலத்தில்

தெளிவுரை

தேவர்களைவிடவும் மாறன் அழகுடையவன் என்று குழுமியிருந்த பெண்கள் மடல் எழுதிப் பார்க்கின்றனர்.

உன் கணவனோ பேதமையுடையவன், உன்னைவிட மென்மை நிறைந்தவன் என் கணவன் என்று இகழ்ந்து ஊடல் கொண்டு மயங்கி நின்றர்.

இனி எங்கள் இளவரசர் இவர்தான் என்று சோழ அரசர்கள் எல்லாம் பரிசுப் பொருட்களை (கப்பம்) மலைபோலக் குவித்து நின்றனர்.

இனி, பாண்டிய நாட்டை ஆட்சி செய்யும் பிள்ளை இவன் என்று மணிமுடி சூட தேச அரசர்களெல்லாரும் வந்தனர்.

இவ்வளவு செயல்கள் இருந்தும் ஏதாவது சிந்திக்காமல் இருப்பது தகுதியா? நாதா எனக் கூறி நாட்களைக் கடத்தும் காலத்தில் (அமரர் - தேவர்; மடல் - ஓலை; இகலி - ஊடி; மயல் - மயக்கம்)

196. பொருது சதுர்வேதர் புனிதர் வடிவாகி
திரு(ந்துந்) துவாபரத்தில்[50] சித்திரையிற்
சித்திரைனாள்

197. கோளூரில் உற்பவித்து குற்றமற்ற சிந்தயனாய்
வேளூரன் கணையை விலக்கும் பொருட்டாக

198. கங்கா நதிப்புனலில் கார்காலமும் படிந்து
வெங்கால துகள்சருகு வெய்யோன் ஒளியருந்தி

199. பஞ்சாக் (கினி)நடுவே பலகால மும்பழகி
அஞ்சாயுதத் தோனை ஆதரிக்கு மக்காலம்

200. தென்பாலொரு கோடி செங்கதிரோன் நின்றுதித்து
முன்பாகத் தோன்று முறையிரும்பூ தின்றுணர்ந்து

தெளிவுரை

பொருந்தும் நான்கு வேதங்களும் புனிதர் வடிவெடுத்து, திருந்துகின்ற துவாபர யுகத்தில் சித்திரை மாதம், சித்திரை நட்சத்திரத்தில்

திருக்கோளூரில் உற்பவித்துத், தூய சிந்தனை யுடையவராய் வேளூரன் துன்பத்தை விலக்கிக் கொள்ளுவதற் காக

வடதிசையிலுள்ள கங்கை நதியில் கார்காலமும், பனிக் காலமும், வெயில் காலமும் படிந்து

பஞ்ச அக்கினி நடுவே பலகாலமும் பழகி, பஞ்சாயுதங்களைத் தாங்கிய இறைவனை வழிபடும் அந்நாளில்

தென்திசையில் ஒரு மூலையில் சிவந்த ஒளி நின்று உதித்து, தமக்கு முன்பாக செல்கிறது என்று பெருமிதம் கொண்டு

*(சதுர்வேதன் - நான்கு வேதங்களின் தலைவன்; துவாபரம் - நான்கு யுகத்தில் ஒன்று (கிரதயுகம், திரேதயுகம், துவாபார யுகம், கலியுகம் கோளூர் - மதுரகவி பிறந்த ஊர்; வெய்யோன் - சூரியன்; இரும்பூ- பெருமிதம்)*

201. பின்னொருவர் காணாது பேதையேன் கண்ணருகு
மண்ணுவதே தென்றே மலைத்தோம் அறியாமல்

202. நன்றுசெ(யும்) தன்புனலில் நாம்முழுகும்
நம்முகத்தை
தென்திசையை நோக்கி திருப்பிவிட்ட காரணத்தால்

203. மண்டலத்தில் செய்ததவம் வந்துவெளிப் பட்டதே
கண்ட கதிரோன் கதிரே வழிகாட்ட

204. வந்தான் பொருனை வடகரையில் வந்தேற
நந்தாவொளி பிழம்பாய் நாடொறுந் தோன்றிநின்ற

205. செய்யோனை இன்று தெரிசிக்கப் பெற்றிலமோ
அய்யயோ என்றே அளவறுக்க மாட்டாமல்

தெளிவுரை

பின்னர் ஒரு வரும் காணாது அறிவீனனின் கண்களுக்கு அருகாக மறைந்தது எதனால் என்று அறியாமல் திகைத்தோம்

நன்மை செய்யும் குளிர்ச்சியான கங்கை நதி நீரில் நீராடிய வேளையில் நம் பார்வையைத் தென்திசையை நோக்கிக் காணச் செய்த காரணத்தால்

பூமியில் செய்த தவமே வந்து வெளிப்பட்டதோ எனதான் கண்ட சூரியனின் ஒளியே வழிகாட்ட

வந்தவர், தாமிரபரணியின் வடகரையில் வந்து சேர்ந்தவுடன், குறையாத ஒளிப்பிழம்பாக நாள்தோறும் தோன்றி நின்ற

சூரியனை, இன்று காணவில்லையே! அய்யோ! என்றே மனக்கலக்கத்தால் தாங்க முடியாமல்

*(பேதையேன் - அறிவீனன்; அருகு - பக்கம்; மண்ணுதல் - மறைதல்; மலைத்தல் - திகைத்தல்; மண்டலம் - பூமி; செய்யோன் - சூரியன்; அளவறுக்க - தாங்க)*

206. நிற்கும் பொழுதிலந்த நேமிச்சுடர் வேந்தன்
அற்குன்றுங் காந்தி அட ^யதிவ் வூரிலென

207. உள்ளத்தில் எண்ணி உவட்டெரியுஞ் சங்கனி(நீர்)
(வெ)வள்ளத்தில் நீராடி மீண்டஅள வையினில்[51]

208. இங்குள்ள அற்புதமே தென்றுவினா வும்பொழுதில்
அங்குள்ளா் எங்கள் அரசக்குலக் குமரன்

209. வாயுந்திற வான்மலர்க் கண்ணினை நோக்கான்
தாயைமுகம் பாரான் தந்தையையும் வாவென்னான்

210. என்றுதவழப் படித்தான் அன்றுமுதல்[52] இன்றளவும்
ஒன்றுமிருப் பிலொழி யாதுவீற் றிருந்தான்

தெளிவுரை

நிற்கும் பொழுதில், உலகை வலம் வரக்கூடிய சூரியனின் ஒளி மறைந்தது இவ்வூரில் என

உள்ளத்தில் நினைத்து உவர்ப்பு நிறைந்த சங்கனி நீர்த்துறையில் நீராடித் திரும்பும் வேளையினில்,

இங்கு நடந்த அற்புதம் என்ன என்று வினவும்போது, அங்குள்ள மக்கள் எங்கள் அரசகுல குமரன்

வாயுந்திறக்கவில்லை; மலர் போன்ற கண்களையும் திறக்கவில்லை, தாயையும் முகம் பார்க்கவில்லை, தந்தை யையும் வா என்று அழைக்கவில்லை.

என்று தவழப் படித்தானோ? அன்று முதல் இன்றுவரை இருந்த இடத்தை விட்டு அசையாமல் வீற்றிருந்தான்.

*(நேமி - சக்கரம் (வலம்வரல்); காந்தி - ஒளி; உவட்டு - உவர்ப்பு அளவை - வேளை)*

211. சேயென்றால் சேயே செழுமணிதான் கொண்டநோய்
பேயென்றால் பேயுமன்று பேசவரி தாமென்றாள்

212. அன்னாரை நோக்கி அருள்கரந்தை சிந்தையினால்
நன்னா வலன்புகுமூர் நாதன் மதுரகவி

213. யானறிய வேண்டுமுங்கள் இறையோன்பால்
சொல்லுமென
மானபர னொருவன் வந்தான் எனப்பகர

214. மந்திரிமார் கேட்டுமதித் தெதிர்கொண் டங்கேகி
முந்தி வணங்கி முனிப்பெருமா னேயிந்த[53]

215. மதலைமொழி பேசினால் வையகமெல்லாம் உனக்கு
முதலரசு நல்கும் முயற்சி இடுவோம்[54] என்ற

தெளிவுரை

குழந்தை என்றால் குழந்தை செழித்தமணி போன்றவன் தான் கொண்ட நோய் பேய் என்றால் பேயுமல்ல, சொல்வதற்கு முடியாதது என்றார்.

அவர்களைப் பார்த்து இரக்கம் கொண்ட மனத்தவராகிக் குழந்தையைப் பார்ப்பதற்காக ஊருக்குள் நுழைந்த மதுரகவி,

''நான் குழந்தையைக் காண வேண்டும்'' என உங்கள் அரசரிடம் சொல்லுங்கள் என்று கூற ''கடவுளைப் போல மேலான ஒருவன் வந்துள்ளான்'' என மக்கள் மன்னனிடம் கூற,

மந்திரிமார் அதைக்கேட்டு, மதித்து மதுரகவி இருந்த இடத்தை எதிர்கொண்டு, முந்தி வணங்கி, முனிவர் பெருமானே! இந்தக்

குழந்தை வாய் பேசினால், உலகமெல்லாம் உமக்கு அரசபதவியைக் கொடுக்கும் என்று கூற, மதுரகவியும் ''முயற்சி செய்வோம்'' என்று கூறிய

*(சேய் - குழந்தை; அரிது - கடினம்; நாவலன் - பார்ப்பவன்; பரன் - கடவுள்; ஏகி - அடைந்து; வையகம் - உலகம்)*

216. வார்த்தைகேட் டுப்பொறுக்க மாட்டாதார்
முன்மகவை[55]
பார்த்தவறிற் மிக்காய்படித் தவனைப்போல்
தோணுதோ?

217. ஊசிநுழைய யாஉரோ மச்சடை முடியான்
பாசிபற்று மேனியான் பார்க்குந் தொழிலறிய

218. வல்லவனோ என்றிகழ மன்னதனைக் கெடக்க
நல்லவன் இங்கேக நவிலுமென விடுத்தார்

219. ஒண்டொடி யராயின் யோகிமுகம் நோக்கி
அண்டர்குருவே எங்கள்ஆ விமைந்தன் பேசினால்[56]

220. யாமுமக்குத் தொண்டுசெய்வோம் எனவுரைத்த
போதுதக்கோன்[57] கோமுதல்வ ரோடும் கோயிற்புறமாக

தெளிவுரை

வார்த்தையைக் கேட்டுப் பொறுக்க முடியாமல் அம்மக்களில் சிலர் முன்பு குழந்தையைப் பார்த்தவர்கள் எல்லாவரையும் விட, அதிகம் படித்தவர் போலவா தோன்றுகிறது?

ஊசிகூட நுழையாத சடைமுடியை உடையவர், பாசி பிடித்த மேனியையுடையவர், குழந்தையைப் பற்றிய நோயைப் பார்ப்பதற்குத்

தகுதியடையவரா? என்று இகழ, அரசரோ ''நல்லவரை இங்கு வரச் சொல்லுங்கள்'' என்று ஆள் அனுப்பினார்.

உடையநங்கையோ, யோகியின் முகத்தைப் பார்த்து, வானோர் தலைவனே! எங்கள் உயிர் மகன் பேசினால்

நாங்கள் உமக்குத் தொண்டு செய்வோம் எனக் கூறிய போது, அறிஞர், அரசர் படைகளோடு கோயில் புறமாக,

*(மிக்காய் - மிகுதியாய்; நவிலும் - சொல்லும்; அண்டர் - வானோர்; ஆவிமைந்தன் - உயிர்மகன்; கோ - அரசன்)*

221. நின்றாலிவன் வார்த்தை நீர்கேட்கப்
பண்ணிவிப்பேன்
யென்ற வருங்கூற எல்லவரும் பின்னடைய

222. பாகார்ந்த செஞ்சொற் பராங்குச மாமுனிவன்
யேகாந்த யோகத்திருந் தெசையை நோக்கி

223. யிச்சோதி யோஎன் இதையம் உருக்கியது
முச்சோதி யினும்முழுச் சோதியென் றிறைஞ்ச

224. ஆடியாடிப் பாடியங் கோடியிங் கோடி
நாடிநாடிப் பார்த்து நங்கைபெறும் பேறா

225. வானத்தவர் பேறா! மானிலத்துள் ளார்பேறா
ஞானத்தவர் பேறோ! நன்னாவலர் பேறோ

தெளிவுரை

''நின்றால் இக்குழந்தையின் வார்த்தையைக் கேட்கச் செய்வேன்'', என்று கூற, எல்லோரும் பின்னடைந்து நிற்க,

தேன்போன்ற செஞ்சொற்களை உடைய பராங்குச முனிவனாகிய மாறன் தனிமையில் யோகநிலையிலிருந்து திசையைப் பார்த்து.

இந்த ஒளியா என் இதயத்தை உருக்கியது? மூன்று சோதிகளை விடவும் இது முழுசோதி என்று வணங்க

ஆடிப்பாடி அங்குமிங்கும் ஓடி, அருகில் சென்று சென்று பார்த்து உடைய நங்கை பெற்ற பேறா!

வானிலுள்ளவர்கள் செய்த பேறா! உலகிலுள்ளவர்கள் செய்த பேறா! அறிஞர்கள் செய்த பேறா! நாவலர்கள் செய்த பேறா!

(எல்வரும் - எல்லோரும், பாகாாந்த - இனிமையான; யேகாந்த - தனிமையான; முச்சோதி - மூன்று சோதி)

226. என்பேறாம் என்பதற்கு ஏதுவுமிப் போதுளவால்
அன்பேறும் என்புருகும் ஆதரவு மிக்காரும்

227. அங்கம் புளகம்எழும் ஆனந்த வாரியெழும்
துங்கமுகம் மலர்ந்து சுந்தரதோள் பூரிக்கும்

228. சென்றாடுந் தீர்த்தமெதிதர் வந்தாடப் பெற்றதே[58]
யென்றாயிரந் திரமாய் இச்சைப்படி இயம்பி

229. பித்தேறி னர்போல பேதலித்து மெய்மறந்து
கொத்தேறு பூவுங் குழையும் பறித்தெறிந்து

230. தன்னைப் புகழ்ந்து தன்னைத்தானே பூசித்துப்
பின்னைத் தெளிந்து பிழைத்தேனைப் போற்றி

தெளிவுரை

நான் செய்த பேறு தான் என்று சொல்வதற்கு இப்போது எதுவும் இல்லாததால், அன்புமிகுந்து எலும்பும் உருகும் தன்மைக் கொண்டவர்

மெய்சிலிர்க்க மகிழ்ச்சி பொங்கும் பரிசுத்தமான முகம் மலர்ந்து, அழகு பொருந்திய தோள் பூரிக்க,

''சென்று நீராடும் தீர்த்த நதியே (கங்கை) எதிர் வந்ததோ'' என்று பலவாறு ஆயிரமாயிரந் தடவையாய்த் தன் விருப்பம்போல் கூறி

பித்துப்பிடித்தவர் போல, மதி மயக்கமடைந்து, தன்னை மறந்து கொத்தாகப் பூவுங் குழையும் பறித்து எறிந்து,

தன்னைத் தானே புகழ்ந்து, தன்னைத் தானே பூசித்துக் கொண்டு, பின்னர் தெளிந்த மனத்தவராய், 'நான் உயர்வடைந்தேன்' எனப் போற்றி,

*(என்பு - எலும்பு; அங்கம் - உடல்; புளகம் - மயிர் சிலிர்த்தல்; துங்கமுகம் - பரிசுத்தமான முகம்; சுந்தரத்தோள் - அழகானதோள்; குழை - தழை; பிழைத்தேன் - உயர்ந்தேன்)*

231. கரியதிரு மேனியெங்கே? கைநான்
கிலிரண்டெங்கே?
பெரியவுந்தி மலர்பெற்ற பிரமன் எங்கே?

232. பாகத்தில் வாழும் பரசுதரித் தோனெங்கே?
ஆகத்தில் வாழும் அலர் மெல்மடந்தை எங்கே?

233. அன்டமுண்ட செவ்வாய் அரவிந்தப் போதிதுவோ?
பண்டகில மேழும் பரந்தளந்த தாளிதுவோ?

234. ஆல ந்தளி(ரில் அட)ங்கும் வடிவிதுவோ?
சீலம் பலவுந் தெளிந்துரைக்கக் கூடுமோதான்?

235. குன்றே! மரமே! குளிர்புனலே! காமின்னே
தன்தாயை[59] நோக்குந் தனிக்கன்று போல்மகிழ்ந்து

தெளிவுரை

நீல முகில் போன்ற கரிய மேனி எங்கே? நான்கு கைகளில் இரண்டு எங்கே? பெரிய கொப்பூழ் மலர் பெற்ற பிரமன் எங்கே?

தன்பாகத்தில் வாழும் பரசு தரித்தோனாகிய பரசுராமன் எங்கே? உடலில் வாழும் பூமடந்தை (இலட்சுமி) எங்கே?

உலகை ஆண்ட சிவந்த தாமரை போன்ற வாய் இதுதானோ? முன்பு ஏழு உலகங்களையும் அளந்த பாதம் இதுதானோ?

ஆலஇலையில் அடங்கிய வடிவம் இதுதானோ? அழகு முழுவதையும் கூற முடியுமா?

மலையே! மரமே! குளிர் நதியே! இக்குழந்தையைக் காப்பாற்றுங்கள் எனத் தன் தாயைப் பிரிந்துக் கூடிய கன்றுபோல மகிழ்ந்து

(உந்திமலர் - தாமரை; பரசு - கோடாலி; அலர்மெல் மடந்தை - இலட்சுமி; அண்டம் - உலகம்; அரவிந்தம் - தாமரை; ஆலந்தளிர் - ஆலிலை; புனல் - நதி; காமின் - காப்பாற்றுங்கள்)

236. நிலைவணக்கி மெய்யொடுக்கி நீதி நெறியாகத்
தலைவணங்கி கையொடுக்கித் தாழ்ந்துமுறை
தப்பாமல்

237. வாய்புதைத்துத் தூசுஒதுக்கி வந்துதனை
யாட்கொண்ட
சேயுகக்கும் வாலைதிருச் செவியி லோர்வசனம்

238. செத்ததின் வயிற்றிற் சிறியபொருள் கிடந்தால்
எத்தைத்தின் றெங்கே கிடக்கும் எனுல் வேகோமான்

239. அத்தைத்தின் றங்கே கிடக்கும் எனும்
அவ்வார்த்தை[61]
பத்துத்திக் குங்கேட்ப பார்த்திபர்கள் ஓலமிட்டு

240. புத்திரனைப் பேசுவித்த புண்ணியனே!
என்றவர்க்குப்
பத்திபத்தி யாகப்பணித் துகிலுஞ் செம்பொன்னும்

தெளிவுரை

தன் குணங்களை அடக்கி, மெய் ஒடுக்கி, நெறி முறையாகத் தலையை வணங்கி, கையை ஒடுக்கி, தாழ்ந்து வழிபடும் முறை தவறாமல்

வாய் புதைத்து, ஆடையை ஒதுக்கி நின்று வந்து தன்னை ஆட்கொண்ட குழந்தையின் காதில் ஓர் வசனம்

''அறிவற்றதாகிய உடலினுள் சிறிய உயிர் தோன்றினால் எதை உண்டு எங்கு வாழும்'' என்று கேட்கவே, கோமான் மாறனும்

''அவ்வுடலுடன் உள்ள இன்பதுன்பங்களை அனுபவித்து அவ்வுடலிலே கிடக்கும்'' என்று கூறிய அவ் வார்த்தை, பத்துத் திசையும் கேட்க, அரசர் மகிழ்ச்சியடைந்து

மகனைப் பேசச் செய்த புண்ணியனே! என்று மதுர கவிக்கு வரிசை வரிசையாக ஆடை அணிகலன்களும் செம் பொன்னும்

*(நிலை - குணம்; தூசு - ஆடை; வாலை - நீண்ட; செத்தது - அறிவற்ற உடல் ; சிறியபொருள் - உயிர்; திக்கு - திசை; பத்தி - வரிசை; துகில் - ஆடை)*

241. மலைபோல் குவித்தபின்னர் மண்டலீகர் முதலோர்
தலையார்ந் தண்புழுகு கஷ்தூரி கற்பூரம்

242. எண்ணெய் மஞ்சனீர் களபம்ஏலச் செழும்பனிநீர்
வெண்ணெய்தயிர் பால்நறுநெய் வீதிதோறும்
பெருக்கி

243. ஆறிரண்டு நாட்களியாட் டாடி களிகூர்ந்து
வேறிரண்ட கண்ணாரும் வேந்தர் வேறுள்ளாரும்

244. தென்பா லுதைய தினகரனைக் கண்டோனே
அன்பாக யாங்கள் அளித்த திரவியத்தை

245. கைக்கொள்ளா தேவெறுத்த காரணத்தைச்
சொல்லுமென
மெய்க்கொண்ட மாதவத்தை வேட்டநமக்கேன் இது
என்று[62]

தெளிவுரை

மலைபோல் குவித்த பின்னர், மன்னர் முதலானோர் உயர்வான குளிர்ச்சிப் பொருந்திய வாசனைப் பொருட்களும், கஸ்தூரி, கற்பூரம்

எண்ணெய், மஞ்சள் நீர், ஏலம் கலந்த செழும்பனிநீர் வெண்ணெய், தயிர், பால், நறுமணமிக்க நெய் ஆகியவற்றை வீதிதோறும் பெருக்கி

பன்னிரண்டு நாட்களும் களிகூர்ந்து ஆடிக் கொண்டாடி, வேல்போன்ற கண்களையுடைய பெண்களும், அரசர்களும், வேறுபலரும்

''தென்திசையில் உதித்த சூரியனைக் கண்டவரே அன்பாக நாங்கள் அளித்த திரவியத்தை

வாங்காமல் வெறுத்து ஒதுக்கிய காரணத்தைச் சொல்லும்'' எனக் கேட்க ''உடல் தவத்தை விரும்பி மேற்கொண்டிருக்கும் போது நமக்கு ஏன் இது'' என்று

*(மண்டலீகர் - அரசர்; தண் - குளிர்ச்சி; புழுகு - வாசனைப்பொருள்; களபம் - கலவை; வேறிரண்ட - மேல்திரண்ட; தினகரன் - சூரியன்; வேட்ட - விரும்பிய)*

246. கூறிய பின்உங்கள் குலதருமம் ஈதென்றால்
ஆறிய சிற்றத்தாய் அடியோம்கு ழவிதன்னை

247. நன்றாகப் பேசிவித்து நாட்டம்[63] திறப்பித்து
சென்றாச்சி யூட்டுந் திருமுலைப்பா
லுண்ணவைத்து

248. வாழ்வீரென் றுரைத்த மாறன்தனைக் குறித்து
தா(ழ்வ)கலத் தோன்றுஞ் சடகோபன் எம்பெருமான்

249. பரமபத நாதன் பரஞ்சோதி மூர்த்தி
பரவாசு தேவன் பரந்தாமத் தன்னல்

250. பத்துருவா யுற்பவித்தும் பாரோர் திருந்தாதுத்
தத்துவத்தை விட்டதவ றனைத்துஞ் சிந்தைசெய்து

தெளிவுரை

கூறியபின்னர், உங்கள் குலதர்மம் இது என்றால் எங்கள் குழந்தையை

நன்றாகப் பேசவைத்து, கண்களைத் திறக்கச் செய்து, தாய் ஊட்டும் முலைப்பாலை உண்ணவைத்து

வாழ்வீராக என்றுரைத்த மாறனை நினைத்து தாழ்மையுடன் தோன்றும் சடகோபன் எம்பெருமான்,

வைகுந்த வீட்டின் நாதன், விரிவான சோதியான மூர்த்தி வாசுதேவன், பரந்தாமத்து அண்ணல்

பத்து உருவமாக அவதாரம் எடுத்த பின்னரும், உலகிலுள்ளோர் திருந்தாது அவர் தத்துவத்தைவிட்ட தவறுகள் அனைத்தையும் மனத்தில் கொண்டு,

*(அடியோம் - அடியேன்; ஆச்சி - தாய்; பத்துரு - பத்து அவதாரம்)*

251. வேதத்தமிழை[64] விரித்து ரைக்க வேண்டுமென
போதத் தரவைப் புளிக்கா வனமாக்கி

252. அடியேனும் பட்டர்பிரான் ஆழ்வாரும் வெற்றி
கொடியாங் கருடனெனக் கூறும் படிய(ராக்கி)

253. வாரணத்தைப் பொய்கை வசைப்பி ராணாக்கித்
தாரணி தண்டத்தைத் தமிழ்பூதத் தாராக்கி

254. பேரான நாந்தகத்தை பேயோழ்வா ராக்கிவித்து
பேராழியை மழிசைப் புத்தொளி றாக்கிவித்து

255. நீலக்கடல் அளித்த நேமிச்சுடர் மானும்
கோலக் கவுத்துவத்தை கொல்லிக் கிறையாக்கி

தெளிவுரை

வேதமாகிய தமிழை எடுத்துக் கூற வேண்டுமென, ஞானமாகிய அரவை (அனந்தன்) புளிய மரமாக்கி,

நானும், பெரியாழ்வாரும் வெற்றிக் கொடியாகிய கருடன் என்று கூறுமாறு ஆக்கி,

பாஞ்சண்யசங்கினைப்பொய்கைஆழ்வாரக்கி,தண்டாயுதத்தைப் பூதத்தாழ்வாராக்கி,

நாந்தகம் என்னும் வாளினைப் பேயாழ்வராக்கி வைத்து, திருமாலின் ஆழியைத் திருமழிசையாழ்வாராயும் ,

நீலக்கடல் அளித்த கதிரவன் ஒளிபோன்ற திருமாலின் மார்பிலுள்ள கவுத்துவ (கௌஸ்துபம்) மணியை குலசேகராழ்வாராக்கி,

(போதம் - ஞானம்; அரவு - பாம்பு; பட்டர்பிரான் - பெரியாழ்வார்; வாரணம் - சங்கு)

256. ஆர்ந்தவன மாளிகையை அன்பர்தாட் தூளாக்கி
சேர்ந்த மறுவைத் திருப்பாணாழ் வாராக்கி

257. கூரங்கணையா லொன்னார்குடர் பிடுங்கிமலர் மாலையிட்ட
சாரங்க வில்லைமங்கைத் ததியர்பெரு மானாக்கி

258. தேசத்தவரிற் சிறந்த கற்பயோ[65] கியுமாய்
தாசற்குந் தாசன் தனக்குத்தா னேயாகி

259. மகவாசை யுகங்களுக்கு மாற்றவந்தா[66]னல்லாது
புகழேதும் உண்டோநீர் போமினெனச் சொன்னதற்பின்

260. தாழ்ந்து வணங்கி தபோதனரே[67] யாங்கள்
வாழ்ந்தோம் வாழ்ந்தோமிந்த மண்டலத்தில்
வாழ்ந்தோமே

தெளிவுரை

பேரொலி வீசும் வனமாலையைத் தொண்டரடிப் பொடியாழ்வார் ஆக்கி, உடலோடு சேர்ந்த மறுவைத் திருப்பாணாழ் வாராக்கிப்,

பகைவர் குடலைப் பிடிங்கி மாலையிட கூர்மையான சார்ங்க வில்லைத் திருமங்கையாழ்வராக்கி,

நாட்டிலுள்ள யோகியுகளில் சிறந்த ஊழிக்கால யோகியுமாகி, அடியவர்க்கு அடியவராகித் தனக்குத் தானே நிகராகி,

குழந்தை மேலுள்ள ஆசையை உங்களுக்கு மாற்றுவதற் காக வந்தானல்லாமல் புகழ்வதற்காக அல்ல! நீங்கள் செல்லுங்கள் என்று மதுரகவி சொன்னதற்பின்

தாழ்ந்து வணங்கி, முனிவரே! நாங்கள் வாழ்ந்தோம், இந்த உலகத்தில் வாழ்ந்தோமே!

(மாலிகை - மாலை; அன்பர்தாள் தூள் - தொண்டர் அடிப்பொடி; ஒன்னார் - பகைவர்; குடர் - குடல்; கற்பம் - ஊழிகாலம்; தபோதனர் - முனிவர்)

261. நம்பி யுரைத்ததுவும் நாங்கள் மறந்துவிட்டோம்
எம்பெருமா னீருரைக்க இன்று தெளிந்தோமே

262. இப்பேறு பெற்றவர் எங்களைப்போல் இன்னமிந்த
முப்பேருலகில் மொழிய ஒருவர் உண்டோ?

263. எம்மில் உயர்ந்தவரா எம்மிலுஞ் சிறியார்கள்
இம்மண்ட லத்தவரில் என்றே மனந்தேறி

264. தந்தையுந் தாயுந் தனையனென எண்ணாமல்
முந்தை முதல்வனென முக்கால் வலஞ்செய்து

265. சேவித்து நாமிச் சென்னத்தில் முத்தருடன்
பாவித்தோம் என்றே பலகாலமும் பகர்ந்து

தெளிவுரை

நம்பி (குறுங்குடியில்) கூறினதையும் மறந்து விட்டோம். எங்கள் பெருமானே! இன்று நீர் கூற அதை உணர்ந்தோம்.

இந்த நல்ல பேறு கிடைக்கப் பெற்றவர்கள் என்று எங்களைக் கூற இனியும் இந்த மூன்று பெரிய உலகிலும், ஒருவராவது உண்டா?

எங்களைவிட உயர்ந்தவர் யார் இருக்கிறார்கள் இந்தப் பூமியில்? எங்களைவிடச் சிறியர்களே (பெறும்பேறுகளில்) இருக்கிறார்கள் என்று மனதைத் தேற்றி,

தந்தையும், தாயும், மகனும் என்று நினைக்காமல் முன்னோனாகிய இறைமுதல்வன் என்று மூன்றுகாலமும் வலம் வந்து

வணங்கி, இந்தச் சன்மத்தில் (சனைத்தில்) அரியுடன் சேர்ந்து வணங்குகிறோம் என்றே பலமுறை கூறி

(முந்தை - முன்னோன்; முக்கால் - மூன்றுகாலம்; முத்தர் - இறைவன்; பாவித்தல் - தியானித்தல்)

266. முன்னைப் பரம்பொருளை மூவா முதலோனை
தன்னைத் தானொப்பாந் தலைமகனை தத்துவனை

267. எண்ணிரண்டு ஆண்டும் எறும்பீக் கடியாமல்
கண்ணின் மணிபோலக்குக் காத்திருந்தோம் காவலனே

268. அய்யா! உனக்கே அடைக்கலமிப் பாலனெனக்
கையால் மதுரகவிக்குக் காட்டிக் கொடுத்து[68]

269. திங்கள் மணிமாட திருக்குருகூர் சென்றடைந்து
திங்கடொறும் திங்கடொறும் தென்குருகை
மானகரில்

270. இந்து[69] நுதல்மாது மிறைவர் பெருமானும்
வந்துவந்து போற்றி மதுரகவியைப் பணிந்து

தெளிவுரை

பழமையான பரம்பொருளை, கடவுளைத், தனக்குத் தானே நிகரானத் தலைமகனை, தத்துவம் நிறைந்தவனை,

பதினாறு ஆண்டும் எறும்பு, ஈ கூட கடிக்காமல் கண்ணின் மணிபோலக் காத்திருந்தோம் காவலனே!

''அய்யா! உமக்கே இக்குழந்தையை அடைக்கலமாகத் தந்தோம்'' என்று கையால் மதுரகவிக்கு காட்டிக் கொடுத்து!

நிலவு தவழும் மணிமாடங்களையுடைய திருக்குருகூர் சென்றடைந்து, நாள்தோறும் நாள்தோறும் தென்குருகை மானகரில்

பிறை நெற்றியையுடைய உடையநங்கையும், அரசர் பெருமானும் வந்துவந்து வாழ்த்தி, மதுரகவியை வணங்கி,

(மூவாமுதல்வன் - இறைவன்; திங்கள்தோறும் - நாள்தோறும்; இந்து - நிலவு; நுதல் - நெற்றி)

271. நீர்செய்த பாக்கியமாம் நீனிலத்தில் செய்தவரார்?
பார்[70] செய்த பாக்கியமாம் பாவலர்கள் கோமானை

272. இடைவிடா தாராதித் தேத்தினீர் எங்களுக்கு
உடையவர்[71] நீரல்லாலொரு வருண்டா
வென்றுரைத்து

273. மீனமுதலாக முன்னம் மேவுமவ தாரங்கள்
ஆனதெல்லாம் பரமாறன் அன்னார்க்கு காண்பித்து

274. சேவைபிர[72] சாதிக்க தெரிசித்த வரிருக்க
ஆவதொரு கோயிலமைப் போம்இனி யென்ன

275. பொற்கோயிலுண் டாக்கி பூசனைசெய்
தொண்டருக்கு[73]
(முற்கோஇவர்) களென முத்திநிலை வீடுபேற்றார்

தெளிவுரை

நீர்செய்த புண்ணியத்தைப் பரந்த இவ்வுலகில் செய்தவர் யார்? உலகம் செய்த புண்ணியமாம். பாவலர்கள் கோமானை;

இடைவிடாமல் ஆராதித்துப் புகழ்ந்தீர். எங்களுக்குக் கடவுள் நீர் அல்லால் வேறு ஒருவருமில்லை என்று கூறி,

மீன் அவதார முதல் உள்ள பத்து அவதாரங்கள் எடுத்ததை எல்லாம் பரமனாகிய மாறன் மதுரகவிக்குக் காண்பித்து,

''தரிசித்தவனும் இருக்கும் நிலைக்குச் சேவைகள் செய்ய இனிக்கோயில் அமைப்போம்'' என்று சொல்ல,

பொற்கோயில் அமைத்துப் பூசைகள் செய்த அடியவர் களுக்கு எல்லாம் முதலான இறைவன் இவர் என்று முத்தி நிலையடைந்து வீடுபேறு பெற்றார்.

*(பார் - உலகம்; உடையவர் - இறைவன்; முற்கோ - முந்தலைவன்)*

**276. காலங்குறித் திருக்குங் கண்ணன் பரந்தாமன்**
**ஞாலங்குறித் தேத்தநான் சொல்ல வேண்டுமென**

**277. மேருகிரி முகட்டின் மின்பூத்த மேகமென**
**வாருதி பாலுற்பவித்த வாரிசி மங்கையுடன்**

**278. புள்ளரசிற் தோன்றிப் பொலிய மலர்க்கண் விழித்து**
**வள்ளல்மணி[74] வாய்திறந்து மங்கலசொல் லாற்புகழ**

**279. சிலைக்கோல நெற்றித் திருமாது கேள்வர்**
**இலைக்கோ ரொருவர் யென்னைப்பாடு**
**என்னைப்பாடு[75]**

**280. யென்ன தமக்கேற்ற எம்பெருமான் யார்படையும்**
**பன்னத் திருப்புளிக்கீழ் பாடியுவப் பாக்கிவித்து**

தெளிவுரை

காலத்தைக் குறித்திருக்கும் கண்ணனாகிய பரந்தாமன் புகழை இவ்வுலகம் புகழ்ந்து ஏத்தும்படி நான் சொல்ல வேண்டும் என்று,

இமயமலை முகட்டில் பூத்த விண்மீன்களுக்கு இடையில் தவழும் மேகத்தைப் போலக் கடலிலிருந்து தோன்றிய இலட்சுமி பிராட்டியுடன் திருமால்

கருடன் வாகனத்தில் தோன்றிக் காட்சி கொடுக்க, வள்ளலாகிய மாறன், மணி போன்ற வாயைத் திறந்து மங்கலமான சொற்களால் புகழ,

வெவ்வேறு உருவங்களையுடைய இலட்சுமியின் தலைவர்கள் (திருமால்) இலைக்கு ஒருவராக அமர்ந்து (புளி இலையில்) என்னைப்பாடு, என்னைப் பாடு என்று கூற, எம்பெருமான் அனைவரையும் பாடுவதற்காகத் திருப்புளியின்கீழ் இருந்து பாடி அவர்களை மகிழ்விக்கச் செய்து,

(ஞாலம் - உலகம்; கிரி - மலை; வாருதி - கடல்; புள்ளரசு - கருடன்; திருமாது - இலட்சுமி; கேள்வர் - தலைவர்: உவப்பு - மகிழ்ச்சி)

281. அந்தாதி யாகியதி கரிக்கும் பூதலத்தோர்
சிந்தாகுலம் தவிர்க்கும் தெய்வப் பிரபந்தத்தில்

282. ஓராத சிந்தை உலகத்துச் சம்பந்தம்
சேராமல் வேண்டுந் திருவிருத்தம் நூறும்

283. பனுவதெரி நீத்தார் பனிமாலின் குணங்கள்
அனுபவிக்கச் செய்ததிரு வாசிரியம் ஏழும்

284. அந்தப்பலத் தாலுண்டாம் அவாபோலே
தன்பிலனாம்
முந்தவுரை யந்தாதி முத்தமிழென் பத்தேழும்

285. தங்கும் அவாவுக்குத்[76] தகுதியா மீசுரனை
இங்கு வந்துசேர இசைத்ததிரு வாய்மொழியில்

தெளிவுரை

உலக மக்கள் சிந்தித்து வழிபடும், முதலும் முடிவுமாக இருக்கும் இறைவனின் பிரபந்தத்தில்

இடைவிடாத சிந்தை, உலகப்பற்று இவற்றை விரும்பாமல் இருக்க வேண்டிக் கொள்ளும் திருவிருத்தம் நூறும்,

இந்நூல்களைத் தெரிந்து கொள்ளாமல் தவிர்ப்பவர்கள் திருமாலின் குணங்களை அனுபவிக்கச் செய்யும் திருவாசிரியம் ஏழும்,

அவ்வனுபவித்தலாகிய பயனால் உண்டாகும் விருப்பம் போன்ற அன்பு வேறு இல்லை என்று உரைத்த அந்தாதியாகிய முத்தமிழ் எண்பத்தி யேழும்,

பொருந்தும் விருப்பத்திற்குத் தகுதியாகிய தலைவனை இங்கு வந்து சேரும்படிப் பாடிய திருவாய்மொழியில்

(ஓராத - இடைவிடாத; பனுவல் - நூல்; அவா - விருப்பம்; முத்தமிழ் - மூன்றுதமிழ் (இயல், இசை, நாடகம்)

286. ஏய்ந்த ஒன்றாம்பத் திலிசையும் இரண்டாம்பத்தில்
ஆய்ந்தடைய தக்கோ...[77] அருள்மாயன் என்றதுவும்[78]

287. திருந்தியமூன் றாம்பத்திற் செஞ்சொற்
நாலாம்பத்தில்
அருத்தி உயிர்நிலையை யாமப்படியே சொல்வதும்

288. இயலுமஞ் சாம்பத்தில் இசையுமா றாம்பத்தில்
உயிரரியைச் சேர்தற் குபாயம்உரைத் ததுவும்

289. தீட்டும் ஏழாம்பத்திற் சீர்திகழ்எட் டாம்பத்தில்
வீட்டு வழிக்கு விரோதமறக் கூறுவதும்

290. தக்கவொன் பதாம்பத்தின் சாத்தியபத் தாம்பத்தில்
மிக்கபல முண்டாகும் வித்தாரம் பேசுவதும்

தெளிவுரை

பொருந்திய ஒன்றாம்பத்திலும், இரண்டாம் பத்திலும் ஆராய்ந்து அடையத் தக்கவன் திருமால் என்று கூறினதுவும்,

திருத்தமாய் அமைந்த மூன்றாம் பத்திலும், நான்காம் பத்திலும், செம்மையான சொற்களால் உயிர்களின் நிலையை ஆகமத்தில் உள்ளபடியே சொல்வதுவும்,

இயலும் ஐந்தாம்பத்திலும், ஆறாம்பத்திலும் உயிர்கள் திருமாலைச் சென்று அடைவதற்குரிய வழிகளைக் கூறினதுவும்,

எழுதும் ஏழாம்பத்திலும், எட்டாம் பத்திலும் வீடுபேறு அடைவதற்குரிய வழியினைத் தப்பாமல் கூறுவதுவும்,

தகுதியுடைய ஒன்பதாம் பத்திலும், பத்தாம் பத்திலும் மிகுதியான பலன் கிடைக்கும் வழிகளை விரிவாகப் பேசுவதுவும்,

(ஏய்ந்த - பொருந்திய; அருத்தி -விருப்பம்; யாமம் - ஆகமம் (இறைவனுடைய வாக்கு); அரி - திருமால்; தீட்டும் - எழுதும்; வித்தாரம் -விரிவு)

291. பண்ணமு தமூறப் பகர்ந்த ஒன்றாம் பத்தில்
கண்ணனே காவற்கட வுளென்ற கட்டுரையும்

292. சொல்லால் வகுத்துத் தொகுத்த இரண்டாம்பத்தில்
எல்லார்க்கு மாலே யினியனெனக் கட்டுரையும்

293. நாவின்மது ரஞ்சுரக்கும் நாட்டியமூன் றாம்பத்தில்
ஆவி நெடுமாலை அனுபவிக்கும் என்றதுவும்

294. விரிதிரை நீர் மண்டலத்து வேட்டநா லாம்பத்தில்
அரிபிரிய மாகஅடை யுமுயிர் என்றதுவும்

295. போதுதோறுந் தொண்டர் புகழுமஞ் சாம்பத்தில்
ஓதும் உபாயம் உயிர்க்கரியே என்றதுவும்

தெளிவுரை

இசைநயம் உண்டாகக் கூறிய ஒன்றாம் பத்தில் கண்ணனே காவல் தெய்வம் என்ற கட்டுரையும்

செம்மையான சொற்களால் வகுத்துத் தொகுத்த இரண்டாம் பத்தில் எல்லாவர்க்கும் (மக்கள்) திருமாலே இனிமையானவன் என்ற கட்டுரையும்

படிக்கும்பொழுது நாக்கில் இனிமையைச் சுரக்கச் செய்யும் மூன்றாம் பத்தில் உயிர் திருமாலின் அருளை அனுபவிக்கும் என்றதுவும்,

கடலால் சூழப்பட்ட இவ்வுலகம் விரும்பும் நாலாம்பத்தில் உயிர் பிரியமாக அடைவது திருமாலையே என்று கூறுவதுவும்,

பூக்கள்தோறும் திருமாலைக் காணும் அடியவர்கள் புகழும் ஐந்தாம்பத்தில் உயிர்கள் மேன்மையடைய, திருமாலை வாழ்த்துவதே வழியாகும் என்று கூறுவதுவும்,

*(பண் - இசை; பகர்ந்த - கூறிய; மதுரம் - இனிப்பு; விரிதிரை நீர் - பரந்துபட்டக் கடல்; உபாயம் - சித்தியடையும் வழி)*

296. உய்யும் படிக்கே உரைக்கும் ஆறாம்பத்தில்
செய்யும் உபாயந் தெரியும்வகை செப்புவதும்

297. பெரும்புவி யோர்வாழ பிறந்தவே ழாம்பத்தில்
விரும்புவதில் உண்டாகும் விரோதநிலை
செப்புவதும்

298. சந்ததமும் அன்பர் தரிக்குமெட் டாம்பத்தில்
அந்த விரோத மழியுமெனக் கூறுவதும்

299. ஓதினால் முத்திஉதவு[79] மொன்ப தாம்பத்தில்
ஆதியால் நாடோறும் ஆம்பலத்தைச் சொல்வதுவும்

300. திவாகரனைப் போலுதையஞ் செய்தபத்
தாம்பரத்தில்
அவாவறுத்து வீட்டையடைந் தமையே சொல்வதும்

தெளிவுரை

உலக உயிர்கள் உய்யும் படிக்குக் கூறிய ஆறாம்பத்தில், உயிர்கள் செய்ய வேண்டிய வழிமுறைகளைக் கூறுவதும்,

பரந்த உலகில் உள்ளவர்கள் (மக்கள்) வாழத் தோன்றிய ஏழாம்பத்தில் விருப்பப்படக்கூடியதில் உண்டாகும் மாறான கருத்துக்களைக் கூறுவதுவும்,

அடியவர்கள் விரும்பும் சந்த இனிமையுடைய எட்டாம் பத்தில் விரும்பியதை அடைவதில் ஏற்படும் துன்பங்களைக் கூறுவதுவும்,

படித்தால் மோட்ச நிலையை அளிக்கும் ஒன்பதாம் பத்தில் ஆதி நாதனாகிய திருமாலால் நாள்தோறும் உண்டாகும் பயனைச் சொல்வதுவும்,

சூரியனைப் போல ஒளியைத் தரும் பத்தாம் பத்தில் ஆசைகளைத் துறந்து வீடுபேற்றை அடைந்ததைக் கூறுவதுவும்,

*(உய்யும் - நற்கதியடையும்; சந்தம் - இசை; ஆம்பலம் - ஆகும் பயன்; திவாகரன் - சூரியன்)*

301\. புகுமூரன் நாதமுனி புத்தூர் முனிவன்
தகுமூர் நமக்கிவையே தானென சிந்திப்பான்

302\. மட்டோ லிருந்தாம மாறன்அருளிச் செயலை
பட்டோலை யிட்டபிரான் பட்டோலை
கொண்டதெல்லாம்

303\. நீணிலத்தில் நின்றதற்பின் நேமித்திருக் கரத்தால்
சேணிலத்தில் நின்றுந் திரும்பி யெழுந்தருளி

304\. முப்பத்துமுக் கோடிதேவர் முனிவர் குழாம்
எப்பத்தி தோறும் இறைஞ்சஎதிர் தோன்றினான்

305\. திருவாணை யிட்டுஉன்திரு வாணை கண்டாய்
திருவாய் பரமபதந் தந்தொழியப் போகேலோ

தெளிவுரை

மதுரகவி, நாதமுனி, இராமனுஜர் ஆகிய முனிவர்கள் நமக்குத் தகுதியான ஊர் இதுவே என எண்ணுவர்.

தேன் ஒழுகுகின்ற வகுளமாலையை அணிந்த மாறன் அருளிச் செயல்களைப் பட்டோலையில் எழுதிய மதுரகவிகள் பட்டோலை கொண்டதெல்லாம்

பரந்த இந்த உலகத்தில் நின்றதற்பின், சக்கரத்தைக் கையில் தரித்த திருமால் வானுலகில் நின்று திரும்பவும் பூவுலகுக்கு எழுந்தருளி,

முப்பத்து முக்கோடி தேவர்களும், முனிவர்களும் புடைசூழ்ந்து எல்லா திருமால் தலங்களிலும் சென்று வணங்க, எதிர் தோன்றினார்

அவரைத் தடுத்து, உன்மேல் ஆணை எங்களுக்குப் பரமபதம் (வீடுபேறு) தந்து அல்லாமல் நீர் போகாதீர்!

(புகுமூரன் - மதுரகவி; புத்தூர் முனி - இராமானுஜர்; மட்டு - தேன்; தாமம் - மாலை; சேணிலம் - வானுலகம்; பரமபதம் - வீடுபேறு)

306. அமலா எனமறிக்க[80] அச்சுதா னந்தன்
கமலா சனனே கடல்ஞால மெல்லாமோ

307. இன்னம் பிறந்திறந்தால் ஈடேற்ற முண்டோ
உன்னன் பவற்கே உதவும் பொருட்டாக

308. பொய்கை முதலானோர் புகன்றதுவும் நீரருளிச்
செய்ததுவும் பின்னோர் தெரிந்துரைக்கும்
பாடல்களும்

309. பண்பால் உபதேசம் பண்ணுமெனப் பூமடந்தை
நண்பாலடி யேற்குந் நாடுமடி யாதென்ன

310. கண்ட மதுரகவி காரிமா றாவெனையுங்
கொண்டகன் றால்நாயென் குறைமுடியும்
என்றுரைத்த

தெளிவுரை

அமலா! என வழியை மறிக்க, அச்சுதானந்தனோ கடல் சூழ்ந்த இவ்வுலகில் பிரம்மன்தான் எல்லாமோ?

இன்னும், பிறந்து இறந்தால் (அவதாரம் எடுத்தால்) ஈடேற்றம் உள்ளதா? உன் அன்பு (சேவை) அவர்க்கே (அடியவர்க்கு) உதவும்படியாகப்

பொய்கையாழ்வார் முதல் தொடங்கி அனைத்து ஆழ்வார்களும் கூறினதுவும், நீர் (மதுரகவி) அருளினதுவும் (கண்ணி நுண்சிறுதாம்பு) பின்னாள் வந்த வைணவர்கள் தெரிந்து கூறும் பாடல்களும்

*பண்புடனே எடுத்துச் சொல்லும்! இந்தப் பூவுலகம் அன்பாய் அதை ஏற்றால் இந்நாடு அழியாது என்று கூறியதைக்,*

*கண்ட மதுரகவி, 'காரிமாறா' என்னையும் உடன்கொண்டு சென்றால் நாய் போன்ற என்பிறவியின் குறைதீரும்' என்று கூறிய.*

*(மறிக்க - தடுக்க; புகன்றது - சொன்னது; நண்பால் - அன்பால்)*

311. மெய்யன்ப னைனோக்கி மேதினியில் உள்ளோர்க்கு
செய்யமறத் தமிழை செப்புவதார் நீயல்லாமல்

312. அந்தரங் கருண்டோ அகிலத்தில் வாழ்தியென
எந்தன் பெருமானே இருக்கமுடி யாதென்றான்

313. வாழ்வான தண்டுழா மாலைப்பொலிந் துநின்றார்
ஆழ்வார்கள் கோமானே ஆதரித்துன் பாலடைந்த

314. இந்த மதுரகவி யேங்கியேங்கி கரைந்து
நைந்து தடுமாற்றால் நாமுரைத்த வண்ணமே

315. இத்தலத்தில் வாழ்ந்தருளும் இன்றுமுதலும் முடனே
நித்தியமா கப்பொலிந்து நிற்போம் எனவாழி[81]

தெளிவுரை

*அன்பரை நோக்கி, உலகினில் உள்ளவர்க்கு மதுரகவியை அல்லாமல், சிறப்பாகத் தமிழை எடுத்துரைப்பவர் யார்?*

*வேறு உட்கருத்து எதுவுமில்லை, அதனால் ''இவ் வுலகில் வாழும்!'' என்று மாறன் கூற, மதுரகவி எந்தன் பெருமானே, ''இப்புவியில் இருக்க முடியாது'' என்றார்.*

*துளசிமாலையை அணிந்து பொலிந்து நின்ற திருமால், ஆழ்வார்கள் தலைவனே, உ ன்னைச் சரணடைந்த*

*இந்த மதுரகவி ஏங்கிஏங்கி அழுது, மனம் தளர்ந்து தடுமாறியதைக் கண்டு, நாம் சொன்னபடியே*

*இந்தத் தலத்தில் வாழும் 'இன்றுமுதல் உம்முடனே எப்பொழுதும் பொலிவு பெற்று நிற்போம்' என வாழ்த்தி,*

*(செய்யமற - சிறப்புற; அந்தரங்கர் - உட்கருத்து; அகிலம் - உலகம்)*

316. நாரணன் ஆதிபிரான் நாட்டும் படிதிருத்தி
ஆரணமுத் தமிழோ ராயிரமும் பாடவல்லான்

317. மதுரகவி சிந்தை மருளாத வாறே
சதுரமுக மலர்ந்து தன்னளியான் பால்னோக்கி

318. நாமுமக்குத் தஞ்சம் நமக்கும் நீயேயுலகில்
ஆமுதல்வ னென்றே அவையத்தம் செய்தருளி

319. முன்கங்கை யின்பால்[82] முழுச்சுடராய் கண்டதிலும்
பின்பு பதினாறு பிராயம் தொழுததிலும்

320. பேராசை மிக்காகிப் பேராயிரம் உடைய
நாராயண னில்நமக் கிவனே தெய்வமென

தெளிவுரை

*நர்ராயணன ஆதிபிரான் கூறும்படி இருந்து, வேதத் தமிழ் ஓராயிரமும் பாட வல்லவரான*

*மதுரகவி சிந்தனை மாறுபடாதவாறு தன்முகம் மலர்ந்து, அருள்சுரந்தவரை நோக்கி,*

*''நான் உமக்கு அடிமை, நீயே உலகில் வினை முதல்வன்'' என்றே உறுதி கூறி,*

*முன்னர் கங்கையில் நீராடியபோது முழுச்சுடராய்க் கண்டதிலும், பின்பு பதினாறு தடவை தொழுததிலும்*

*பேராசை மிகுதியாகி ஆயிரம் பெயர்களையுடைய நாராயணனை (திருமால்) விட, இவனே தெய்வம் என*

*(ஆரணம் - வேதம்; தண்ணளி - அருள்; ஆமுதல்வன் - வினைமுதல்வன்; அவையத்தம் - நிச்சயம்)*

321. மஞ்சனீ ராட்டி மலரா லருசித்து
தஞ்சமடி மேற்குன் சரணார விந்தமென

322. நாவுக் கமுதூற நாலுகவிப் புலவோர்
பாவுக் கனியாம் பாடிய பதுப்பாட்டும்

323. முன்னாழ்வார் நால்வர் மொழிந்ததிரு
வாய்மொழியும்
பின்னாழ்வார் ஒரைவரைப் பெற்ற
திருவாய்மொழியும்

324. திருவாய் மொழியுஞ் செகத்துள்ளோ ருக்கோதி
இருநூற்றி நாற்பதாண்டு இங்கிருந்து வாழ்ந்தருளி

325. உற்பவித்த சென்மத்து உடலோடும் வைகுந்தம்
பொற்பதி யிலேகிநித்தர் புத்தேளி யேராகி

தெளிவுரை

மஞ்சள் நீரால் நீராட்டி, மலரால் பூசை செய்து அடியேனைத் தஞ்சமாக ஏற்கும் உன் தாமரையாகிய மலர்பாதமே சரணம் என்று,

நாவில் இனிமை தோன்ற நாலுகவிப் புலவர் பாக்களுக்கு அணியாகப் பாடிய பத்துப்பாட்டும்

முன்னுள்ள ஆழ்வார்கள் ஓதிய திருவாய்மொழியும், பின்னாலுள்ள ஆழ்வார்கள் ஐவர் உருவாக்கிய திருவாய்மொழியும்,

உலகிலுள்ளோர்க்கு ஓதிட, இருநூற்று நாற்பது ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்து,

தோன்றிய சென்மத்து உடலோடும் வைகுண்டப்பதி (மோட்சம்) சென்று ஆத்மாவான கடவுளாகி,

(பதுப்பாட்டு - பத்துப்பாட்டு; முன்னாழ்வார் - பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்; திரு மழிசையாழ்வார்; பின்னாழ்வார் - குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார்;தொண்டரடிப் பொடியாழ்வார்; திருப் பாணாழ்வார், திருமங்கையாழ்வார்; புத்தேளியர் - கடவுள்; நித்தர் - ஆத்மா)

326. இருந்தருளும் மாறன் இவனொப்பான் என்பான்
வருந்தின மட்டாத மவுனித் திருப்பதே

327. சீராகும் என்றேதிருப் புளிக்கீழ் வீற்றிருந்தான்
நாராயணன் ஆதி நாதனர வணையான்

328. வைகுந்த வானாட்டில் வாழ்அச் சுதானந்தன்
வைகுந்த மூரில் மறைத்தமிழ்நூல் வந்ததனால்

329. மண்ணிலுள் ளர்தங்கள் வாக்கினால் உச்சரியார்
எண்ணிநினை யார்நினைத்தால் யாம்இறப்போ
மென்றங்கே

330. அத்தன்மை யாலிறந்தது ஆரணநா லாயிரமும்
பத்தருக்கு முன்போற் பாலிக்க வேணுமென

தெளிவுரை

இருந்து அருள்செய்யும் மாறன் இவன் ஒப்பில் லாதவன். இவன் மௌனமாக மோன நிலையில் இருப்பதே

சிறந்ததாகும் என்றே திருப்புளியின் கீழ் வீற்றிருந்தான். நாராயணன், ஆதிநாதன், அரவணையான்,

வைகுந்த வீட்டில் வாழும் அச்சுதானந்தன், வைகுந்தமாகிய விஷ்ணுலோகத்திற்கு மறைத்தமிழ் நூலைச் செய்த மாறன் வந்ததனால்,

பூமியிலுள்ளவர்கள் தங்கள் வார்த்தையால் உச்சரிக்க மாட்டார்கள் மனதிலும் எண்ணி நினைக்க மாட்டார்கள் நினைத்தால் இறப்பர் என்று கூறினார்.

அந்தத் தன்மையால் மறைத் தமிழாகிய நாலாயிரமும் இறந்தது. அந்நாலாயிரத்தையும் முன்பு போல அருள வேண்டும் என்று,

*(மவுனி - மௌனம்; பத்தர் - பக்தர்; பாவித்தல் - ஈதல்)*

331. வந்தசேனைக் கதிபர் வாசற் கரிமுகருஞ்
கந்தரத்தோள்[83] மன்னர் தொண்டரடித்
தொண்டராகி

332. ஞானியர்கள் தீபமென நாதமழை மேகமென
ஆனிமா தத்தில் அனுடத்திரு நாளில்

333. மின்னவரும்[84] பொன்மதில் சூழ்வீரநா ராயணமாம்
நன்னகரிற் சீரங்க நாதனெனத் தோன்றி

334. அதிகமுனி நாதமுனி யாகிநெடு மாமால்
பதிகடோ றுஞ் சென்று பணிந்து தொழுமன்னாளில்

335. ஆராவமு துடவந்த ஆராவமு தூபத்தும்
ஓராயிரத்துக் குரைமோ சிதென் றுணர்ந்து

தெளிவுரை

வந்த படைத்தலைவரும், யானை முகரும் கந்தரத்தோள் மன்னர் தொண்டருக்குத் தொண்டராகி,

ஞானிகளின் விளக்காக, இசையாகிய மழை மேகம் என ஆனிமாதம் அனுடத்திருநாளில்,

மின்னல் ஒளிவீசும் பொன்மதில் சூழ்ந்த "வீரநாராயணம்" எனும் நல்வகரில் சீரங்க நாதனாகத் தோன்றி,

உயர்ந்த முனியாக இருந்தவர் நாதமுனி என்ற பெயராகி திருமால் தலங்கள் தோறும் சென்று பணிந்து வணங்கும் அந்நாட்களில்,

போதும் என்று தோன்றாத வகையில் மகிழ்விக்கும் அமுதமாகிய பத்தும் ஓராயிரத்திற்கும் உரைமோர் இது என்று,

(ஞானியர் - அறிஞர்; நாதம் - இசை; அதிகமுனி - உயர்ந்த முனிவர்; ஆரா - நிறைவுபெறாத)

336. மால்வடிவாய்த் தோன்றும் வயிணவர்கள் பாலோதி
நூல்வடி வாய்வேதம் நுவலுங் குருகூரன்

337. சன்னதி யிலேகி சதுரன் மதுரகவி
சொன்னபத்துப் பாட்டும் தொண்டர் உபதேசிக்க

338. (நூலாகிய) கண்ணி நுண்சிறுத்தாம் பாகி
மேலாக அன்பவரை விண்ணப்பஞ் செய்துடனே

339. (நன்னீர்த்) திருப்புளிக்கீழ் நாற்பது நாளிலிருந்து
பன்னீரா யிரமுருவாய் பத்தியுடன் உச்சரிக்க[65]

340. மண்முன்னே செய்திருந்த மாதவத்தோ னாதமுனி
கண்முன்னே வந்துனக்கு கருத்தே தெனக்கேட்க

தெளிவுரை

திருமால் வடிவாய்த் தோன்றும் வைணவர்களிடம் ஓதி, நூல்வடிவில் வேதத்தைக் கூறும் குருகூறன்

சன்னதியை அடைந்து, வேதத்தை ஓதும் மதுரகவி சொன்ன பத்துப்பாட்டும் தொண்டர் கூற,

நூல்வடிவாகிய கண்ணி நுண் சிறுதாம்பாகி, மேலும் அன்பாய் அவரை விண்ணப்பம் செய்து உடனே,

திருப்புளியின்கீழ் நாற்பது நாட்களிலிருந்து பன்னீராயிரம் தடவை பக்தியுடன் உச்சரிக்க,

தவத்தைச் செய்யும் நாதமுனியின் கண்முன்னே வந்து, ஆழ்வார் உனக்கு யாது வேண்டும் எனக் கேட்க,

341. பேரளித்து நாவீறு பெற்றமகிழ்ச் சுடரே
கூரறிய வேதகுலத் தமிழோ ராயிரமும்

342. ஒன்பதின்ம ராகியு ரைத்தமூ வாயிரமும்
என்பரமே கட்டுரையும் என்றிருபா தத்திறைஞ்ச

343. நாலாயிரந் தமிழும் நாதமுனிக்குப் பகர்ந்து
மாலாழி சங்கெழுதி மந்திரமோர் எட்டெழுத்தும்

344. சித்திரை யானுக்குப தேசித்த படிபோதித்து
முத்திரைக் கைமோன முனிவனாட் கொண்டருளி

345. அத்தால்வெளி யிட்டருளும் இந்தப்பா டல்முற்றும்
இத்தாரணி யோரினி உரைக்க நேசித்தால்

தெளிவுரை

பெரும்பேறு அளித்து நாவீறு பெற்ற மகிழ்ச்சுடரே கூறுவதற்கு அரிய வேதகுலத் தமிழ் ஓராயிரமும்

ஆழ்வார்கள் ஒன்பதுபேர் உரைத்த மூவாயிரமும், என் பரமனே! எனக்கு எடுத்துச் சொல்லும் என்று திருப்பாதத்தில் இறைஞ்சி கேட்க,

நாலாயிரந்தமிழும் நாதமுனிக்குக் கூறி, ஆழிச் சங்கில் எழுதிய எட்டெழுத்து மந்திரமும்

சித்திரையானான மதுரகவிக்கு உபதேசித்த படி கூறி, ஞான முத்திரைக் கையையுடைய முனிவர் (நம்மாழ்வார்) அவரை ஆட்கொண்டு அருள்செய்து,

மாலைநேரத்தில் கூறும் இந்தப்பாடல் முழுவதையும், இந்த உலகிலுள்ளவர்கள் உரைக்க விரும்பினால்,

*(கூரறிய - கூறுவதற்கு அரிய, சித்திரையான் - சித்திரை மாதத்தில் உற்பவித்த மதுரகவி; அத்தாழ் - மாலைநேரம்; தாரணி - உலகம்)*

346. தாமுள்ள நாளெல்லாம் தத்துவஞா னம்சிறந்து
பூமுதல் வனீடும் பொறிபழுது வாராமாகில்

347. நல்வார்த்தை நல்குமென நங்ககுமாரன் கருணை
இல்வாரதை தோறும் இகல்புதல் வனென்றும்என

348. மாரிமா றாது மகிழ்ந்து வரங்கொடுக்க
வாரிமா றாதுதவும் வாழ்ந்ததென வாழ்ந்தனனே

349. தன்னின் மகிழ்ந்து தன்னிலே பூ(ரித்து)
நன்னிலை யனாகிநின்ற நாதமுனிவன் வாழி

350. வாழி குருகூரன் வாழிதிருக் கோளூரன்
(வாழி பெ) ருபூதூரன் வாழியென வாழ்ந்தனனே

தெளிவுரை

தாமுள்ள நாளெல்லாம் தத்துவஞானம் சிறந்து, பூவில் தோன்றிய பிரம்மன் படைக்கும் செயலுக்கு எந்தவிதமான தீங்கும் வராத வகையில்

நல்ல வார்த்தையை எடுத்துக் கூறும் உடைய நங்கையின் மகன், இரக்கமற்ற வார்த்தைகளுக்கு என்றும் பகைவன் என்று கூறி,

மழைவளம் குறையாமல் மகிழ்ந்து வரங்கொடுக்க, கடல் சூழ்ந்த நீர்வளமும் வாழ்க என வாழ்ந்தனன்.

தானே மகிழ்ந்து, தன்னுள்ளே பூரித்து, நன்னிலையை உடையவனாக இருந்த நாதமுனி வாழ்க!

குருகூரன் வாழ்க! கோளூரைச் சேர்ந்த மதுரகவி வாழ்க! பெரும்புதூரைச் சேர்ந்த இராமானுஜர் வாழ்க! என வாழ்ந்தனரே!

(பூ முதல்வன் - பிரம்மன்; பொறி - ஐம்பொறி; இகல் - கருணை; வாரி - கடல்; கோளூரன் - மதுரகவி; பெரும்பூதூரன் - இராமானுஜன்)

# பின்னிணைப்புகள்

## பாடவேறுபாடு

| | அச்சு | | சுவடி |
|---|---|---|---|
| 1. | சரிதை | - | சரிகை |
| 2. | மெய்க்கூன் | - | மக்கூன் |
| 3. | போர்க்கழியார் | - | பொறகழியர் |
| 4. | காரிகுல | - | காதிகுல |
| 5. | தவத்தால் | - | தவத்தாற் |
| 6. | செல்வி | - | செல்வ |
| 7. | நன்மரபிற் | - | நன்மார்பிற் |
| 8. | நன்மரபிற் | - | நன்மார்பிற் |
| 9. | ஊழ்வினையோ | - | உள்ளவினையோ |
| 10. | பேறும்பெறும் | - | பெரும்பேதும் |
| 11. | செத்தோர் | - | செகத்தேறா |
| 12. | தேவி | - | தேவிசி |
| 13. | நிதிமாரிகள் | - | நீதிமாரிகள் |
| 14. | ஸ்ரீபாஷ்யம் | - | சீயம் |
| 15. | காரியார் | - | கந்தரத்தே |
| 16. | கலைஞ்ஞான | - | கலைக்கியானம் |
| 17. | தழுவணையும் | - | தழுவளையும் |
| 18. | விதானித்து அதனுள் | - | விதானத்தினுள் |
| 19. | அறந்தாங்கியார்பேர் அறந்தாங்கும் | - | அறந்தாங்கிய பொறந்தாங்கும் |
| 20. | எவ்வளமும் | - | மெவ்வும் |
| 21. | செல்வமும் நரகும் சுவர்க்கமுமாய் | - | செலவுங் குஞ்சுவற்கமுமாய் |
| 22. | வெஞ்சரத்தால் | - | வெஞ்சரத்தாற் |
| 23. | கருவூரன் | - | குருகூர் |
| 24. | காசினியில் | - | காசினி |

| | | | |
|---|---|---|---|
| 25. | குறங்கினிடை | - | குறுங்கிணியை |
| 26. | மின்னின் நக்கு இழைமான | - | மின்னின் கிளைமான |
| 27. | இட்டதின் | - | விட்டதின் |
| 28. | அமச்சு | - | அச்சு |
| 29. | அயினி | - | யினி |
| 30. | அரிவையர் | - | மருவையர் |
| 31. | இளைத்து இளைத்து | - | இனிதிளைத்தும் |
| 32. | அம்மம் உண்ண | - | முண்ண |
| 33. | பண்டியெக்கி | - | பண்டியெத்தி |
| 34. | எட்டுநாள் ஆகிலும் | - | எட்டுமனாளாகிலும் |
| 35. | கிடத்தினால் | - | கிடத்திவையான் |
| 36. | கணவற்கு | - | தனவர்க்கு |
| 37. | சங்கினமும் | - | சங்கீதமும் |
| 38. | கயரத | - | காயாத |
| 39. | பெருகும் துவாபரத்துள் | - | போகுருது வரபாத்து |
| 40. | விரகால் நலங்கடந்த | - | வீரகரனலங்கடந்த |
| 41. | மார்பை | - | கார்பை |
| 42. | கொப்பூழில் அம்புயவாம் | - | நிலமம்புயவாம் |
| 43. | போட்ட அணை ஆடை | - | போட்டவனை ஆடை |
| 44. | கைதவம் | - | கையதவம் |
| 45. | இன்னம் | - | தின்னம் |
| 46. | நிரவதிக | - | ரேவதிக |
| 47. | அன்பால் | - | என்பார் |
| 48. | நயம்வீரு | - | நாவீறா |
| 49. | சிறுபறை | - | சிறுபிறை |
| 50. | திருந்தும் துவாபரத்தில் | - | திருந்துவர் பாதத்திற் |

| | | | |
|---|---|---|---|
| 51. | அளவையினில் | - | வளமையினில் |
| 52. | அன்று முதல் | - | என்று முதல் |
| 53. | இந்த | - | இருந்த |
| 54. | முயற்சி இடுவோம் | - | முயற்சி இடுவாய் |
| 55. | மாட்டாதார் முன் மகவை | - | ஆரூரன் மகவை |
| 56. | பேசினால் | - | செய்தினால் |
| 57. | போதுதக்கோன் | - | போதகத்தோன் |
| 58. | பெற்றதே | - | பெற்றெடுத்த |
| 59. | தன்தாயை | - | தன்கையை |
| 60. | றெங்கே கிடக்கும் | - | றெங்கேகும் |
| 61. | அவ்வார்த்தை | - | எவ்வார்த்தை |
| 62. | நமக்கேன் இது என்று | - | நமக்கினிதென்று |
| 63. | நாட்டம் | - | நட்டம் |
| 64. | வேதத்தமிழை | - | வெத்தமிழை |
| 65. | கற்ப | - | தேற்ப |
| 66. | மாற்றவந்தானல்லாது | - | மற்றுவந்தானல்லாது |
| 67. | தபோதனரே | - | தப்போதனா |
| 68. | காட்டிக்கொடுத்து | - | தினங்கொடுத்த |
| 69. | இந்து | - | இன்று |
| 70. | பார் | - | வார் |
| 71. | உடையவர் | - | உடையன் |
| 72. | சேவைபிற | - | செவ்வைபிற |
| 73. | தொண்டருக்கு | - | தண்டருக்கு |
| 74. | வள்ளல்மணி | - | வள்ளமணி |
| 75. | என்னைப்பாடு | - | என்னைப்பா |
| 76. | அவாவுக்கு | - | வரவுக்கு |
| 77. | தக்கோன் | - | தக்காள் |
| 78. | என்றதுவும் | - | நின்றதுவும் |
| 79. | உதவும் | - | முதவும் |

| | | | |
|---|---|---|---|
| 80. | மறிக்க | - | மதிக்க |
| 81. | என வாழி | - | எனவாரி |
| 82. | போல் | - | பால் |
| 83. | சுந்தரத்தோள் | - | சுந்தரத்தாள் |
| 84. | மின்னவரும் | - | மின்னினவீரும் |
| 85. | உச்சரிக்க | - | உச்சரிகை |

## துணைநின்ற நூற்கள்


| | |
|---|---|
| ஆழ்வார்கள் வரலாறு | - எதிராஜன், ஆ (ஆ) ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், செக்கலை, காரைக்குடி, முதற்பதிப்பு, 1998. |
| இக்கால மொழியியல் | - முத்துசண்முகம், முல்லை நிலையம், சென்னை. முதற்பதிப்பு - 1998 |
| இடைக்கால இலக்கியங்கள் ஒரு திறனாய்வு | - முத்துராசன். கு, வசந்த செல்வி பதிப்பகம், தர்மபுரி, முதற்பதிப்பு - 1987 |
| கலிங்கத்துப்பரணி | - புலியூர் கேசிகன் தெளிவுரை, பாரி நிலையம், 184-பிராட்வே, சென்னை -1, 12-ம் பதிப்பு - 2000 |
| கம்பராமாயணம் | - உ.வே.சாமிநாதையர் , நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை. முதற்பதிப்பு - 1957. |
| சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள் | - தமிழண்ணல், மீனாட்சி புத்தகநிலையம், 60, மேலக்கோபுரத் தெரு, மதுரை. முதற்பதிப்பு - 1978. |
| சடகோபரந்தாதி | - அரங்கநாதன், நா(உ.ஆ) இளங்கோ அடிகள் இலக்கிய மன்றம், கோயமுத்தூர், முதற்பதிப்பு - 1989 |

சடகோபன் சந்திரகலா மாலை - ஸ்ரீநிவாஸன், வெ.நா.(ப.ஆ.) ஞானமுத்திரை பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி, முதற்பதிப்பு - 1896.

சடகோபதிவ்யசரித்திரம் - ஸ்ரீநிவாஸன்.வெ.நா.(ப.ஆ) ஞானமுத்திரை பிரசுலாலயம், ஆழ்வார் திருநகரி, முதற்பதிப்பு - 1929.

சிலப்பதிகாரம் - உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை. நான்காம் பதிப்பு - 1944.

சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வளர்ச்சியும் - முத்துசண்முகம், நிர்மலா மோகன், முத்துப் பதிப்பகம், ஆழ்வார்நகர், மதுரை. முதற்பதிப்பு - 1979.

சீவகசிந்தாமணி - ஜெ.ஸ்ரீசந்திரன் (உ.ஆ) தமிழ் நிலையம், தியாகராய நகர், சென்னை. இரண்டாம் பதிப்பு-1998

சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் - சுவடிப்பதிப்புப் பயிலரங்கக் கட்டுரைகள், தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

சுவடியியல் - சுப்பிரமணியம். பூ, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. முதற்பதிப்பு - 1991.

தமிழ்த்தாய் சொற்புணர்ச்சி இலக்கணம் - காசுமான். மி
காசுமான் பதிப்பகம்,
4-226, நந்தன்காடு,
மார்த்தாண்டம்,
முதற்பதிப்பு - 2003.

தமிழ் வரலாற்றிலக்கணம் - வேலுப்பிள்ளை. ஆ,
குமரன் புத்தக இல்லம்,
குமரன் காலனி, சென்னை.
முதற்பதிப்பு-1996.

தமிழ்மொழி வரலாறு - சக்திவேல்.சு,
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை, சென்னை.
நான்காம் பதிப்பு - 2003.

தமிழ் வரலாறும் ஒப்பிலக்கணமும் - அரங்கசுவாமி.அ,
குமார் அச்சகம்,
கும்பகோணம்,
முதற்பதிப்பு - 1973.

தமிழ் வளர்த்த வைணவம் - வேங்கடராமன். சு,
மீனா பதிப்பகம்,
நாகமலை, மதுரை.
முதற்பதிப்பு - 2002.

தமிழ் இலக்கிய வகையும் வடிவும் - சுப்பிரமணியம், ச.வே.,
தமிழ்ப் பதிப்பகம்,'
சென்னை.
முதற்பதிப்பு - 1984.

தமிழக வரலாறும் பண்பாடும் - பிள்ளை, கே.கே,
உலகத்தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை.
மீள்பதிப்பு - 2002.

திருமாலடியார்கள் - சேஷாத்ரி மணவாளன், செட்டித்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை. *முதற்பதிப்பு - 1976.*

திருக்குறள் *(பரிமேலழகர் உரை)* - கௌமாரீஸ்வரி. எஸ். *(ப.ஆ)* சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை. *முதற்பதிப்பு - 2002.*

திருக்குருகூர் மகிழ்மாறன் பவனிக்குறம் - ஸ்ரீநிவாஸன், வெ.நா *(ப.ஆ)* ஞானமுத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி, *முதற்பதிப்பு-1932*

திருவாசகம் - சுப்பிரமணிப்பிள்ளை. கா, திருநெல்வேலி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. *முதற்பதிப்பு-1997.*

திவ்யப்பிரபந்த இலக்கிய வகைகள் - ஸ்ரீனிவாசன்,ம.பெ. மெய்யப்பன், தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம், *முதற்பதிப்பு - 2001.*

தொல்காப்பியம் *(பொருள்-இளம்பூரணர்)* - கழக வெளியீடு, திருநெல்வேலி, *முதற்பதிப்பு - 1997.*

தொல்காப்பியம் - உரைவளம் *(சொல்-எச்சவியல்)* - சிவலிங்கனார், ஆ*(ப.ஆ)* உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. *முதற்பதிப்பு-1988.*

தொல்காப்பியம் *(பொருள் - செய்யுளியல்)* - *அடிகளாசிரியர் (ப.ஆ)* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், *முதற்பதிப்பு-1985*

| | | |
|---|---|---|
| தொல்காப்பியம் எழுத்து-சொல் ஒரு கண்ணோட்டம் | - | அரங்கசாமி.இரா, 4, ஆர்டிசான் சண்முகம் தெரு, அயனாவரம், சென்னை. முதற்பதிப்பு - 1989. |
| நடையியல் | - | நீதிவாணன்.ஜெ, மணிவாசகர் பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு - 1983 |
| நம்மாழ்வார் திருத்தாலாட்டு | - | முத்துரத்ன முதலியார். எஸ்(ப.ஆ), சரஸ்வதி மஹால், தஞ்சை, முதற்பதிப்பு - 1951. |
| நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ் | - | ஸ்ரீநிவாசன், வெ.நா(ப.ஆ) திருஞானமுத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி, முதற்பதிப்பு - 1946. |
| நன்னூல் | - | இளவரசு, சோம. மணிவாசகர் பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு - 2004. |
| நாலாயிர திவ்யபிரபந்தம் | - | திருகச்சி நம்பிதாசர், கா.பெ, பி.இந்திரா நாயகன், திருமகள் விலாசம், சென்னை. முதற்பதிப்பு - 1962. |
| நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள் | - | லூர்து. தே, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், பாளையங்கோட்டை, முதற்பதிப்பு - 1997. |

| | | |
|---|---|---|
| நாட்டுப்புறவியலாய்வு | - | சக்திவேல். சு, மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை, சென்னை. பதிப்பு - 1995 |
| நாட்டுப்புறவியல் பாடல்களஞ்சியம் (தொகுதி-4) | - | கருணாநிதி. அ (ஆ) தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சென்னை. முதற்பதிப்பு-2002, |
| பன்னிரு ஆழ்வார்களும் அவர்கள் அருளிய பிரபந்தங்களும் | - | நாராயண வேலுப்பிள்ளை, நர்மதா பதிப்பகம், தியாகராய நகர், சென்னை. முதற்பதிப்பு - 2000. |
| பாரதியார் கவிதைகள் | - | மெய்யப்பன். ச(ப.ஆ) மணிவாசகர் பதிப்பகம், சென்னை. செம்பதிப்பு-1992. |
| புறநானூறு | - | திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை. முதற்பதிப்பு - 1971. |
| பெருமாள் திருமொழி | - | ஆழ்வார் அமுதநிலையம், 37, சௌத் கூவம் ரோடு, கோமளேசுவரன் பேட்டை, சென்னை. முதற்பதிப்பு - 1986. |
| பெரியாழ்வார் பாசுரங்கள் (ஆய்வு நூல்) | - | பார்த்தசாரதி. ஆ.க.(ஆ) பரணி வெளியீடு, 107, ஸ்ட்ராஹன்ஸ் சாலை, சென்னை. முதற்பதிப்பு - 1996. |

| | | |
|---|---|---|
| மகளிர் வளர்த்த தமிழ் | - | ஞானசம்பந்தன். அ.ச,<br>பாரிநிலையம்,<br>59, பிராட்வே, சென்னை.<br>முதற்பதிப்பு-1958. |
| மொழிநூல் | - | வரதராசனார்.மு.<br>திருநெல்வேலி சைவ சிந்தாந்த<br>நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை.<br>முதற்பதிப்பு-1974. |
| மொழி வரலாறு | - | வரதராசனார்.மு<br>திருநெல்வேலி சைவ சிந்தாந்த<br>நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை.<br>18-வது பதிப்பு-2002 |
| பாப்பியல் வரலாறு | - | செயராமன். ந. வீ.<br>மணிவாசகர் நூலகம்,<br>முதற்பதிப்பு-2000 |
| யாப்பருங்கலக்காரிகை | - | அமிர்தசாகரர்,<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலி சைவசித்தாந்த<br>நூற்பதிப்புக் கழகம், சென்னை.<br>பதிப்பு-1991. |

## அகராதிகள்

| | | |
|---|---|---|
| க்ரியாவின் தற்காலத் தமிழகராதி | - | கிரியா<br>24, கிழக்குத்தெரு,<br>திருவான்மியூர், சென்னை.<br>முதற்பதிப்பு-1992. |
| கழகத் தமிழ் அகராதி | - | திருநெல்வேலி,<br>தென்னிந்திய நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை.<br>முதற்பதிப்பு-1964. |

கோனார்தமிழ்க்கையகராதி - ஐயன் பெருமாள் கோனார், பழனியப்பா பிரதர்ஸ், ஏஷியன் அச்சகம், சென்னை. மூன்றாம் பதிப்பு - 1972.

தொகையகராதி - அளவையம்பதி தமிழ்ப் புலவன் வேலுப்பிள்ளை குமாரன் கனகசபா, பிள்ளை இயற்றியது.

சிற்றிலக்கியப் புலவர் அகராதி - செயராமன், ந.வீ, மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

தமிழ்ப்புலவர் அகராதி (புலவர் அகரவரிசை) - கந்தையாப்பிள்ளை.ந.சி.(ஆ) நூற்பதிப்புக் கழகம், 53-56- பவழக்காரத் தெரு, சென்னை. பதிப்பு-1952.

Tamil Lexican - சென்னைப் பல்கலைக்கழகம், பதிப்பு-1928

வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி பத்து) - தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு-1968.

## மலர்

நம்மாழ்வார் திருநாமங்கள் - நம்மாழ்வார் அறக்கட்டளை, பெரியநம்பி திருமாளிகை, ஆழ்வார் திருநகரி.

வகுளாபரண சடகோபர் (நம்மாழ்வார்) - சுந்தரம் சாரிடிஸ், சென்னை. பதிப்பு 1976.

ஸ்ரீவைஷ்ணவம்-திருமால் நெறி மணிவிழா மலர் - இராமானுஜாசாரியார்.சே. அறநெறிப்பதிப்பகம், 53, ஆபிரகாம் தெரு, மயிலாப்பூர், சென்னை. பதிப்பு 1976.

## ஸ்தல வரலாறு

ஸ்ரீஅருள்மிகு ஆதிநாதர் ஆழ்வார் திருக்கோயில் வரலாறு - அழகர் ராமானுஜம்(ப.ஆ) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. முதற்பதிப்பு-1983.

ஆதிநாதர் ஆழ்வார் திருக்கோயில் - திருக்கோயில் வெளியீடு, ஆழ்வார் திருநகரி, நான்காம் பதிப்பு-2003.

## ஆய்வேடு

சந்திரா.செ. - பாரதிதாசன் பாண்டியன் பரிசில் விளக்கவியல் இலக்கண ஆய்வு, 2001.

## தகவலாளிகள்

1. தேவர்பிரான், வயது-80, படிப்பு-7ம் வகுப்பு, தொழில் - கோவில் பணி, சாதி-வைஷ்ணவர், ஊர்-ஆழ்வார் திருநகரி, மாவட்டம்-தூத்துக்குடி
2. நம்பி, வயது-71, படிப்பு-இல்லை, தொழில்-கோவில் பணி, சாதி - வைஷ்ணவர், ஊர் - ஆழ்வார் திருநகரி, மாவட்டம் - தூத்துக்குடி
3. பிச்சையா, வயது-46, படிப்பு-இல்லை, தொழில் - கோவில் ஒப்பந்தக்காரர், சாதி - பிள்ளைமார், ஊர் - ஆழ்வார் திருநகரி, மாவட்டம் - தூத்துக்குடி

## பொருளகராதி

| | | |
|---|---|---|
| அகலிடம் | நிலவுலகம் | 86:1 |
| அட்டாங்கம் | எட்டு | 119:2 |
| அடைகிடந்த | தங்கியிருந்த | 87:1 |
| அண்டம் | பிரபஞ்சம் | 85:111 |
| அணித்து | பக்கம் | 38:1 |
| அந்தாம் | அந்தம் | 21:1 |
| அம்மம் | குழந்தை உண்ணும் உணவு | 125:2,134:1 |
| அய்யன் | கடவுள் | 55:2 |
| அயா | தளர்ச்சி | 47:1 |
| அபினி | ஆலாதீயம் | 114:2 |

| | | |
|---|---|---|
| அரசிலை | அரைமுடி | 105:1 |
| அரவிந்தம் | தாமரை | 2:1 |
| அளிக்கல் | அளித்தல் | 29:2 |
| அற்றார் | அல்லாதவர் | 150:2 |
| அறுத்து | இல்லாமல் | 67:2 |
| அனம் | அன்னம் | 90:2 |
| ஆக்கை | தொழில் | 47:1 |
| ஆகுலம் | மனக்கலக்கம் | 49:2 |
| ஆசுரர் | மணம் முடித்தவர் | 61:2 |
| ஆதிநாதர் | திருமால் | 62:1 |
| ஆமோ | ஆகுமோ | 16:2, 17:2, 18:2, 19:2 |
| ஆலவட்டம் | விசிறி | 144:2 |
| ஆலாத்தீபம் | ஆரத்தி தீபம் | 65:2 |
| இசைப்ப | இசைக்க | 50:1 |
| இரட்ட | வீச | 144:2 |
| இருத்தி | அமர்த்தி | 103:1 |
| இருவாட்சி | இரவில் மலரும் பூ | 72:1 |
| இலம் | இல்லை | 30:2, 30:1, 32:2, 33:2 |
| இழை | அணிகலன் | 104:2 |
| இளைத்து | சோர்ந்து | 132:1 |
| ஈடேற்றி | உய்வித்து | 21:1 |
| உப்யாத | நற்கதியடையாத | 18:2 |
| உருக்கும் | உருகச் செய்யும் | 117:2 |
| எக்கி | உள்ளிழுத்து | 134:1 |
| எகினம் | அன்னம் | 87:2 |
| எத்திர | எவ்வளவு | 26:1 |
| ஏகி | சென்று | 41:2, 65:2 |
| ஏத்த | வாழ்த்த | 11:2 |
| ஐயோ | தன் நிலைக்கு வருந்துதல் | 34:2 |
| ஒக்கலை | இடுப்பு | 126:1 |
| ஒப்பம் | அலங்காரம் | 126:1 |
| ஒள்ளியது | நல்லது | 111:1 |
| ஒன்றா | ஒன்றாத | 85:2 |
| கச்சு | கச்சை | 76:1 |
| கருப்பம் | கரும்பு | 117:1 |

| | | |
|---|---|---|
| கலை | துணி | 63:1 |
| கழிக்கும் | கடத்தும் | 101:2 |
| கற்பக்குறி | கற்ப அடையாளம் | 42:2 |
| கற்றா | கன்றையுடைய பசு | 31:1 |
| கற்றை | திரளமான தன்மை | 68:1 |
| கனகம் | பொன் | 727:2 |
| காசினி | பூமி | 139:2 |
| காந்தி | வைடூரியம் | 93:1 |
| காப்பு | திருநீறு | 114:1 |
| காமரு | விரும்பத்தக்க | 118:2 |
| காறை | கழுத்தணி | 108:2 |
| கார் | அழகு | 1:2 |
| கிங்கினி | காற்சதங்கை | 112:1 |
| கிட்டா | கிடைக்காத | 119:1 |
| கிடத்தி | படுக்க வைத்து | 102:2, 138:1 |
| கிடத்தும் | படுக்க வைக்கும் | 138:1:6 |
| கிலேசம் | கவலை | 24:1 |
| கீறு | கோடு | 113:2 |
| குணுக்கு | காதணி | 106:2 |
| குதம்பை | காதணி | 106:1 |
| குதலை | மழலை | 16:1 |
| குருகாபுரி | ஆழ்வார் திருநகரி | 41:2 |
| குருகூர் | ஆழ்வார் திருநகரி | 99:2, 95:2:1 |
| குருகை | ஆழ்வார் திருநகரி | 95:2:4, 96:2 |
| குறங்கு | தொடை | 102:2 |
| குறுமூரல் | புன்சிரிப்பு | 140:2 |
| கூகை | கோட்டான் | 95:1 |
| கூறரிய | விலைமதிப்பற்ற | 120:2 |
| கொங்கர் | வாசனையுடைய பூந்தாது | 90:1 |
| கொட்டை | தலையணை | 70:1, 70:1:2 |
| கொம்மை | வட்டம் | 127:1 |
| கொழுந்து | இளந்தளிர் | 72:2 |
| கொழும்பு | ஒளி | 75:1 |
| கொள்ளாது | வாங்காமல் | 36:1 |
| கோகனகம் | செந்தாமரை | 16:1, 72:2 |
| கோலமலை | அழகான மலை | 148:2 |

| | | |
|---|---|---|
| கோவா | கோக்கப்படாத | 102:2 |
| சங்கை | நாணம் | 50:2, 131:2 |
| சம்பத்து | செல்வம் | 26:1, 26:2 |
| சரம் | அம்பு | 97:1 |
| சாரம் | ஆற்றல் | 81:1 |
| சாரித்து | கலந்து | 57:1 |
| சிந்தாமணி | தெய்வ இரத்தினம் | 121:2 |
| செஞ்சாலி | செந்நெல் | 93:2 |
| செயிர் | குற்றம் | 67:2 |
| செழுந்துள | செழித்துவளர | 82:1 |
| சோணை | காதருகில் | 59:1 |
| சோபை | அழகு | 68:1 |
| ஞாளி | நாய் | 99:1 |
| தக்கோன் | சமர்த்தன் | 62:2 |
| தரளமாலிகை | முத்துமாலை | 109:2 |
| தழுவணை | சாய்மான மெத்தை | 69:2 |
| தமை | மார்பு | 76:1 |
| தாளாண்மை | ஊக்கம் | 78:2 |
| திருகுருகூர் | ஆழ்வார் திருநகரி | 12:1 |
| திருநகரி | ஆழ்வார் திருநகரி | 22:1 |
| திருவண்பரிசாரம் | நம்மாழ்வாரின் தாய் பிறந்த இடம் | 2:1 |
| தெரிசித்திடலாம் | பார்த்து வணங்கிடலாம் | 25:1 |
| தெண்டனிட | வீழ்ந்து வணங்க | 149:1 |
| தெரியல் | மாலை | 103:2 |
| தேசு | அழகு | 94:2 |
| தேவேசன் | கடவுள் | 2:1 |
| தைவந்து | தடவி | 39:1 |
| நண்ணி | நெருங்கி | 5:2 |
| நந்தாத | குறைவில்லாத | 11:1, 121:1 |
| நரகு | நரகம் | 89:1 |
| நல்குரவு | வறுமை | 89:1 |
| நாலா | பல | 96:1:1 |
| நாற்றி | தூக்கித் தொங்கவிட்டு | 68:2 |
| நித்தியம் | முத்து | 120:2 |
| நிழற்ற | ஒளிவிட | 145:2 |
| நீத்தோர் | துறந்தவர் | 35:2 |

| | | |
|---|---|---|
| நேசரம் | அன்பு | 9:2, 37:2 |
| நைப்ந்து | தளர்ந்து | 128:2 |
| பஞ்சூடு | பஞ்சு | 69:2 |
| பண்ணவன் | மேலானவன் | 88:1 |
| பண்டி | வயிறு | 46:1, 134:1 |
| பணாமகுடம் | பாம்பின் படமுடி | 74:1 |
| பணித்து | அருளிச்செய்து | 88:1 |
| பம்பு | இடிமுழக்கம் | 144:1 |
| பல்லியம் | பலவகை வாத்தியம் | 144:1 |
| பனினீர் | வாசனை நீர் | 114:2 |
| பாய | மேய | 91:1 |
| பாந்தள் | பாம்பு | 74:1 |
| பார்த்திபர் | அரசர் | 9:1 |
| பாரியா | மனைவி | 8:2 |
| பாவித்து | கொடுத்து | 46:1 |
| பிண்டம் | உருவற்ற கரு | 85:2 |
| பின்னை | பின்னர் | 139:1 |
| புக்கடிசில் | சோறு | 17:1 |
| புராதனர் | கடவுள் | 86:2 |
| புறந்தோம் | காத்தோம் | 36:1 |
| புறம்புல்கி | பின்புறத்தைக் கட்டித் தழுவிட | 17:1<br>61:2 |
| பூசுரர் | அந்தணர் | 61:2 |
| பூதலத்தோர் | பூமியிலுள்ளோர் | 41:1 |
| பூரணை | பௌர்ணமி | 54:2 |
| பூரிதானம் | அந்தணர்க்குக் கொடுக்கும் தக்கிணை | 61:1 |
| பேதலித்து | மனம் குழப்பமடைந்து | 32:1, 134:1 |
| பொதுன்பர் | சோலை | 90:1 |
| மஞ்சாலி | வயிரம் | 93:1 |
| மருவும் | மணம் வீசும் | 105:2 |
| மறுகி | ஏங்கி | 140:1 |
| மாலிகை | மாலை | 109:2 |
| மானார் | பெண்கள் | 55:1 |
| மின்னார் | பெண்கள் | 33:1 |

| | | |
|---|---|---|
| முதாரி | முன் கை வளையல் | 110:1 |
| மூசி | சுவாசித்தல் | 132:1 |
| மூரல் | புன்சிரிப்பு | 60:2 |
| மேதி | எருமை | 91:1 |
| வச்சிரம் | ஒருவகை இரத்தினம் | 65:2 |
| வந்தித்து | கெஞ்சி | 212:2 |
| வல்வினை | தீவினை | 34:22 |
| வள்ளை | கொடிவகை | 105:2 |
| வாட்டம் | வருத்தம் | 24:2 |
| வாணி | அசரீரி | 23:1 |
| வாதியர் | வாதாடுபவர் | 79:1 |
| வாளி | ஒருவகை காதணி | 107:2 |
| விதானம் | மேற்கட்டி | 73:1 |
| விரசை | கருப்பை | 19:1 |
| வேகடம் | மணியின் மாசு | 111:1 |
| ஸ்ரீபாஷ்யம் | இராமானுஜரால் செய்யப்பட்ட ஒரு நூல் | 53:2 |

★ ★ ★







## ஆசிரியர் பற்றி ....

இவர் கேரள மாநிலத்தில் உள்ள இடுக்கி மாவட்டம், மூணார் பகுதியில், தேவிகுளம் என்ற இடத்தில் **திரு. எம்.ஏ. அல்போன்ஸ், திருமதி. மேரி** ஆகியோருக்கு மூத்த மகளாகப் பிறந்தார். இளங்கலை முதுகலைப் பட்டப் படிப்பைப் பாலக்காடு, சித்தூர் அரசினர் கல்லூரியில் பெற்றார். எம்.ஃபில் பட்டப் படிப்பைக் கேரளப் பல்கலைக் கழகத்தில் பெற்றார். கேரளப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்டுள்ளார். பல ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். கவிதை, கட்டுரை, சிறுகதைகளில் நாட்டமுடையவர்.